**தி.நகர்.**
10, நாகேஸ்வரன் சாலை,
பனகல் பார்க்,

**மயிலாப்பூர்,**
7, வடக்கு மாட வீதி
சென்னை – 4.

# ஆடி

## உண்மை சிறப்பு தள்ளுபடி

**மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு**

அழகான பட்டுக்கும், அசல் பட்டுக்கும் காஞ்சிபுரம் எஸ்.எம்.சில்க்ஸ்
காஞ்சிபுரம் எஸ்.எம். சில்க்ஸ்க்கு வந்தா மனசுக்கு திருப்தி பணமும் மிச்சம்!

சேமிப்பீர்
**10%** முதல் **60%** வரை.

காஞ்சிபுரம்

# S.M.Silks

H.O.: 146. காந்தி ரோடு,
சரவணபவன் அருகில்,
**காஞ்சீபுரம்**

சுப்ரீம் டவர்,
Opp. முனிசிபால் பார்க்கிங்,
ஈரோடு

**புரசைவாக்கம் நெடுஞ்சாலை.**
94, பிரின்ஸ் டவர்ஸ்.

**பழைய வண்ணாரப்பேட்டை.**
103, ஜி.ஏ. ரோடு.

உள்ளே...



கவர் ஸ்டோரி 8



சாமி

சூப்பர் மார்க்கெட் 18



கணபதி Vs ஜெயமணி 72

கிராமம் நகரம் மாநகரம் 100

# கல்கி

3.8.2003

# 'உள்ளத்தில் தோன்றிய நெருப்பு!'



• மீனாட்சி விஜயகுமார்

**நிறையப் பேர் திருமணமான பிறகு கூட உங்களால் சர்வீஸ் கமிஷன் எழுத முடிந்துள்ளதே என்று கேட்கிறார்கள். படிப்பிற்கும், முயற்சிக்கும் திருமணம் ஒரு தடையல்ல.**

சென்னை திருவான்மியூர் கடற்கரையை ஒட்டி இருக்கும் வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு, ஹெச் பிளாக் - 84ல், முதல் மாடி வீடு. ஹால் முழுவதும் ஆங்காங்கே மலர்க் கொத்துக்கள்.

"வாங்க... வாங்க... நான் நெடுநாளைய 'கல்கி' வாசகி" என்று வாய்நிறைய நம்மை வரவேற்றார் மீனாட்சி விஜயகுமார்!

இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் தீயணைப்புத் துறையில் முதன் முறையாகத் தீயணைப்புத் துறை அதிகாரியாக, இரு பெண்கள் தேர்வு செய்யப்பட்டிருக்கிறார்கள். ஒருவர் சேலத்தைச் சேர்ந்த ப்ரியா. மற்றொருவர் இந்த மீனாட்சி விஜயகுமார்.

நேர்மைக்கும் எளிமைக்கும் பெயர் பெற்ற முன்னாள் அமைச்சர் கக்கனின் பேத்தி இவர்!

'குடும்பத்துல முதல் பெண் குழந்தை மதுரை மீனாட்சி போல பிறந்திருக்கிறாள்' என்று சீராட்டிப் பெயர் வைத்தவர் கக்கன்தானாம்!

"தாத்தாவிடம் நாங்கள் கற்றுக் கொண்டவை ஏராளம். அப்பா அரசு உயர் அதிகாரியாகப் பணிபுரிந்தவர். ஆனால் சிறிய வயதிலேயே இறந்து விட்டார். பிறகு என்னையும், என் தங்கையையும் படிக்க வைத்து ஆளாக்கியவர் என் அம்மாதான்" என்று நெகிழ்ந்து போய்க் கூறுகிறார் மீனாட்சி.

இவரது ரோல் மாடல்,

இரண்பேடியும், மதர் தெரஸாவும்தான். கணவர் விஜயகுமார் இந்தியன் ஏர்லைன்ஸ் அதிகாரி. இப்போது ஹைதராபாத் வாசம்.

"நிறையப் பேர் திருமணமான பிறகு கூட உங்களால் சர்வீஸ் கமிஷன் எக்ஸாம் எழுத முடிந்துள்ளதே என்று கேட்கிறார்கள். படிப்பிற்கும், முயற்சிக்கும் திருமணம் ஒரு தடையல்ல. என் கணவர் கொடுத்த முழு ஒத்துழைப்புதான் என் வெற்றிக்குக் காரணம். காலையில் எழுந்து சமைத்து, பிள்ளையைப் பள்ளிக்கு அனுப்பி விட்டுப் படிக்கத் துவங்குவேன். நூலகத்துக்குப் போவேன். அதன் பிறகு மாலையில் மீண்டும் வீட்டு வேலை, மகளின் படிப்பைக் கவனிப்பது என்று தொடரும். இரவு பத்து மணிக்குத் துவங்கி, இரண்டு மணி வரை படிப்பேன். இப்படித்தான் சர்வீஸ் கமிஷனுக்கு என்னைத் தயார் செய்து கொண்டேன்" என்கிறார் மீனாட்சி.

அகில இந்திய அளவில் சிவில் சர்வீஸ் எழுத வேண்டும் என்பதுதான் நோக்கமாக இருந்ததாம். ஆனால் தமிழகத்துக்குள்ளேயே பணிபுரிய வேண்டும் என்ற ஆர்வமே, தமிழக சர்வீஸ் கமிஷன் எழுதத் தூண்டியதாம்.

"இந்த இலட்சியம் ஒரு நெருப்பு போன்று என் உள்ளத்தில் எரிந்து கொண்டே இருந்தது. அது அணையாமல் இருக்க, என் உழைப்பும் சுற்றத்தாரின் உற்சாகமும் கைகொடுத்தன" என்கிறார்.

"தீயணைப்புத் துறையில் நுழையும் முன்னர் எடுத்துக் கொள்ள வேண்டிய உறுதிமொழி, என் உயிரைப் பணயம் வைத்து அடுத்தவர் உயிரைக் காப்பாற்றுவேன் என்பது. இது எனக்கு மனத்தில் அழுத்தமாகப் பதிந்து விட்டது. என்ன தியாக உணர்வு! அமெரிக்காவில் வர்த்தகக் கோபுரங்கள் விழுந்த போது உயிர் விட்ட தீயணைப்புத் துறை வீரர்கள் இருநூறுக்கும் மேல்" என்கிறார் மீனாட்சி.

"பொதுவாகவே சமுதாயத்துக்கு நிறையச் செய்து வரும் தமிழக முதல்வர், மிக புரட்சிகரமாகத் தீயணைப்புத் துறை அதிகாரிகளாக என்னையும், ப்ரியாவையும் நியமித்திருக்கிறார். இதற்காக அவருக்கு எவ்வளவு நன்றி வேண்டுமானாலும் சொல்லலாம். அவருடைய எதிர்பார்ப்பை நிறைவேற்றுவோம்" என்கிற மீனாட்சி, ராகவேந்திர பக்தர்.

சந்திப்பு : ஸ்ரீநி



**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# என்ன சாதிக்க

"என்ன சாதிக்கப் போறீங்க!" சென்னை எம்.ஓ.ப வைணவ மகளிர் கல்லூரியின் லாபியில் நின்று கலகலவென்று கடலை போட்டுக் கொண்டிருந்த சிட்டுக்களைப் பார்த்து இப்படிக் கேட்டோம். "படிப்பை முடிக்கணும், வேலைக்குப் போகணும், கை நிறையச் சம்பாதிக்கணும், நம்மனை நம்பிக் கைப்பிடிக்கிற கணவனை கண் கலங்காமல் காப்பாத்தணும்" என்று ஒரே மாதிரி ஓ... போட்ட மாணவிகளுக்கு மத்தியில் பளிச்சென்று வித்தியாசம் காட்டிய சில "சாதிக்கப் போறோம்"கள் கீழே!

பிரசாந்தினி: தாத்தா, பாட்டி, நண்டு, சிண்டுகள், வீடே திருவிழா மாதிரியிருக்கிற கூட்டுக் குடும்பத்துல வாழ்க்கைப்படணும்னு பேராசை வெச்சிருக்கேன். இந்த ஆசை நிறைவேறினா, அதுதான் என்னோட சாதனை.

பிரார்த்தனா: - எம்.பி.ஏ முடிச்சதும், அமெரிக்கன்



# போறீங்க?





இங்கிலீஷ் கத்துகிட்டு, உங்களுக்கு பி.ஏ.வாக வேலை செய்ய நான் ரெடி! நீங்க ரெடி யான்னு பில் கேட்ஸுக்கு மெயில் பண்ணு வேன். க்ளிக் காச்சுன்னா பில் கேட்ஸ் பணத்துலே உலகத்தைச் சுத்தி முடிச்சுட்டு வந்து, அதைப் புத்தகமா எழுதி பணத்தை அள்ளிடலாம்னு இருக்கேன்.

**அருணா:** டீவி சீரியல் விளம் பர இடைவேளைக்கு எல்லாரும் பயந்து கிடக்கிறாங்க. நான் விளம் பரத் துறையிலே காலடி வெச்சப் புறம், அருணா டைரக்ட் பண் ணின விளம்பரம் வரப் போகு துன்னு எல்லோரும் ஆர்வமா காத்திருந்து பார்க்கிற மாதிரி விளம் பரம் எடுத்து சாதிக்கப் போறேன்.

**அபர்ணா:** நியூஸ் ரீடர் ஆஃப் தி மில்லேனியம்ன்னு சொல்ற மாதிரி கலக்கப் போறேன். என்னோட ஸ்டைலைப் பார்த் துட்டு, பி.பி.சி, சி.என்.என்.காரங்க... அம்மா தாயே! அன்னலட்சுமி வந்துடும்மான்னு கெஞ்சிக் கூப்பி டணும். காத்தாலே ஃபிளைட் பிடிச்சு, லண்டன் போய் நியூஸ் வாசிச்சிட்டு, சாயங்காலம் சென்னை வந்துடணும்.



**மனிஷா:** வேலைக்குப் போய் சம்பாதிச்சு, என்னோட சொந்தப் பணத்துலே, ஒரு 'லக்ஸுரியஸ் பிளாட்' வாங்கி, என்னோட சொந்தப் பணத்துலேயே கல்யாணம் பண்ணிக்கணும். கல்யாணம் ஆகி கணவனை கூட்டிக்கிட்டு புது வீட்டுக்குப் போய், உள்ளே நுழையும்போது வலது காலை எடுத்து வெச்சு, உள்ளே வாங்கன்னு தில்லா சொல்லணும்.

**மதுமதி:** இதே கல்லூரி மீடியா டிபார்ட்மெண் டுக்கு எச்.ஓ.டியா ஆகி, மீடியாவில் பெண்களோட பர்செண்டேஜை அதிகப்படுத்தணும். நான் மதுமதி மேடம்கிட்டே படிச்சேன்னு எல்லோரும் பெரு மையா சொன்னா, நான் சாதிச்சிட்டேம்பா!

**- ஜெய்**

படம்: டிஜிட்டல் சண்முகம்





# சிதறலில் சாதனையாளர்!

கீழே உள்ள குறிப்புக்கள் உணர்த்தும் 'ஸ்டார்'களின் பெயர்கள் கட்டங்களில் உள்ளன (ஒவ்வொரு பெயரிலும் உள்ள எழுத்துக்களும் அடுத்தடுத்த கட்டத்தில் எந்தத் திசையிலும் இருக்கக் கூடும்). மீதமுள்ள எழுத்துக்களை ஒழுங்குபடுத்தினால் சர்ச்சைகளில் பெரிதும் அடிபடும் சாதனையாளர் ஒருவரின் பெயர் கிடைக்கும். அவர் யார் என்று கண்டுபிடியுங்கள்.

1. 'அப்பா'வில் அப்பா
2. 'அண்ணாமலை'யில் அண்ணாமலை
3. 'சஹானா'வில் பைரவி
4. 'ரெக்கை கட்டிய மனசு'வில் சத்தியசீலன்
5. 'சித்தி'யில் சித்தப்பா
6. 'சக்தி'யில் சக்தி

— ஜி.எஸ்.எஸ்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ர | ணா | மு | ச | ர | த் |
| வி | ச | ட் | ரு | ர் | பா |
| கு | ப | ல | ரி | யா | பு |
| மா | ர் | சு | ப் | வ | சி |
| ர் | தி | கா | னு | கு | ட் |
| டா | ரா | க் | பா | மா | ர் |

விடைகள்:

1. ரவிகுமார் 2. ராதிகா
3. சுலட்சணா 4. சரத்பாபு
5. சிவகுமார் 6 பானுப்ப்ரியா

சாதனையாளர் - ரூபர்ட் முர்டாக் (ஸ்டார் டி.வி. அதிபர்)



# இதயத்தில் ஹெல்மெட்..!

"இத்தனைச் சின்ன வயதில், தப்பு செய்யாமலேயே ஜெயிலுக்குப் போய், 'செல்'லுக்குள்ளே தைரியமா குட்டித் தூக்கம் போட்டு விட்டு வந்த சுட்டிப் பெண் நானாகத்தான் இருப்பேன். அதுவும் கடுங்காவல் தண்டனை பெற்ற ஆயிரத்து இருநூறு ஆபத்தான கைதிகள் நிறைந்த ராஜமுந்திரி சென்ட்ரல் ஜெயிலில்" _ இப்படி ஆச்சர்யம் பொங்கச் சொன்னவர் ஹரிணி.

"பாய்ஸ் படத்தில் எனது பாத்திரத்தின் பெயர் ஹரிணி. 'ஜெனிலியா' (Genelia) என்ற என் இயற்பெயரிலேயே என்னைக் கூப்பிடுங்களேன்" என்று பிழையற்ற ஆங்கிலத்தில் பேசும் ஹரிணி ஒரு மும்பை வாசி. அங்குள்ள புனித ஆண்ட்ரூஸ் கல்லூரியில் இறுதியாண்டு இளங்கலை நிர்வாகப் படிப்பில் படுகெட்டியான ஹரிணி, தினசரி கல்லூரிக்குச் சென்று வருவது ஸ்கூட்டியில். "கல்லூரிக்குச் செல்லும் போது எதை மறக்கிறேனோ இல்லையோ, ஹெல்மெட் அணிய மறப்பதில்லை. எனது பாதுகாப்புக் கருதி ஹெல்மெட் அணிவதாக எண்ணிவிடாதீர்கள். என்னைப் போன்ற அழகிய பெண்களைப் பின்தொடர்ந்து வந்து ஜொள் வழியும் அரைக்கால் சட்டை பையன்களிடமிருந்து தப்பிக்க பாதுகாப்புக் கருதி, அவர்களிடம் முகத்தைக் காட்டாமலிருக்கவே ஹெல்மெட் அணிகிறேன்! அப்படியும் ஸ்கூட்டியின் எண்களைக் கண்டு கொண்டு, பின் தொடரும் ஜொள்ளாடிகள் மும்பையில் சகஜம்" என்று துடுக்காகச் சொல்லும் ஹரிணிக்கு, பாய்ஸ் படத்தில் வரும் "இதயத்தில் ஹெல்மெட் மாட்டாதே" பாடல் வரிகள், நிஜ வாழ்க்கையோடு பொருந்திப் போனதில் குஷி!

"இது படித்துக் கொண்டே நடித்துக் கொண்டிருக்கிற டீன் வயது. இப்போதைக்கு இதயத்தில் ஹெல்மெட் மாட்டி வைத்திருப்பது தான் நல்லது. இருபத்தைந்துக்குப் பிறகுதான் ஹெல்மெட்டைக் கழற்றலாம் என்றிருக்கிறேன். முப்பதில் திருமணம் முடித்தால் போதும்" என்று வெட்கப்படும் (?) ஹரிணிக்கு, சினிமா வாய்ப்புக் கிடைத்தது விளம்பரப் படத்தில் நடித்ததன் மூலம்.

"இரண்டாயிரமாவது ஆண்டில் விளம்பரப் படத்தில் நடிக்க அழைப்பு வந்தது. அமிதாப்புடன் நடிப்பதென்றால் கசக்குமா என்ன? பார்க்கர் பேனா விளம்பரத்தில், அமிதாப்பிடம் ஆட்டோகிராப் வாங்கும் 'மோஸ்ட் எக்ஸைட்டிங் கேர்ள்' ஆக நடித்ததற்கு உடனடிப் பலன் 'துஜே மேரி கஸம்' ஹிந்திப் பட வாய்ப்பு. அது முடிந்த பிறகு ஷங்கர் கதாநாயகி தேடுவதை அறிந்து சென்னைக்கு விரைந்தேன். இருநூறு பெண்களை ஸ்கிரீன் டெஸ்ட் செய்து சலித்து எடுத்தார்கள். கடைசியில் வாய்ப்பு



எனக்கு வந்த போது, மிஸ் இண்டியாவில் ஜெயித்துவிட்ட மாதிரி உணர்வு. சந்தோஷத்தில் கொஞ்சம் அழுது விட்டேன்" என்று ஃப்ளாஷ்பேக் சொல்லும் போதே ஹரிணிக்கு மீண்டும் கண் கலங்குகிறது.



"படத்தில் நான் வசதியான குடும்பத்துப் பெண். எந்தப் பணக்கார பந்தாவும் இல்லாமல் பேருந்தில் பயணம் செய்கிற மாதிரியான பாத்திரம். என்னை ஐந்து மூன் வயதுப் பொடியன்கள் லவ் பண்ணுகிறார்கள். இவரில் ஒருவனை நான் காதலிக்கிறேன். காதலென்றால் பிரச்னையும் இருக்கத்தானே செய்யும். எங்களது காதலின் வெற்றிக்கு இசை உதவுகிறது. இந்தப் படம் இசையோடு கூடிய காதல் மழை! வெற்றியின் ரகசியத்தைத் தேடிக் கண்டு பிடிப்பது எப்படி என்ற மெசேஜும் இதில் உண்டு'' எனும் ஹரிணி, 'நிஜவாழ்க்கையில் எனக்கு ஒரு பாய் ஃபிரெண்ட் கூடக் கிடையாது. நிறைய நண்பர்கள் உண்டு! ப்ளீஸ்! என்னை நம்புங்கள்" என்று கவிதையாய்க் கெஞ்சும்போது எப்படி நம்பாமல் இருக்க!

"பாய்ஸ் படத்தின் ஒவ்வொரு நாள் படப்பிடிப்பும் கிராண்ட் பிக்னிக். அதிலும் ஆஸ்திரேலியா போய் வந்ததை மறக்கவே முடியாது. அங்கே "காதல் சொன்ன கணமே" என்ற ஒரு பாடல் காட்சிக்காக அறுபத்து இரண்டு காமிராக்களை ஒரே நேரத்தில் ஒன்றிணைத்து, டைம் ஃப்ரீஸ் (Time Freze) என்ற புதிய உத்தியைப் பயன்படுத்தி, படம் பிடித்தார்கள். காதல் சொன்ன கணத்தினை பல கோணங்களில் உறைய வைத்துக் காட்டவிருக்கிறார்கள். ஒரே நேரத்தில் அறுபத்து இரண்டு காமிராக்கள் என்னைப் படம்பிடிக்கிறதா என்று நினைத்தபோது தரையில் நான் நடக்கவில்லை; மிதந்தேன்!" என்று குதூகலிக்கும் ஹரிணி, தேசிய அளவிலான கால் பந்து வீராங்கனையாம். விடைபெறும் முன் மறக்காமல், ராஜமுந்திரி ஜெயிலுக்குப் போக நேர்ந்தது ஏன் எனச் சொல்ல வில்லையே, என்றபோது "அதுவும் பாடல் காட்சியைப் படம் பிடிக்கத்தான்" என்று கண்களைச் சிமிட்டினார்.

**- ஜோஜோ**

அட்டை, படங்கள் :
**பாய்ஸ் படத்திலிருந்து**

''அந்த அரசு ஊழியர் மன்னிப்புக் கடிதம் கொடுத்தும் அரசு வேலை இல்லைன்னு சொல்லிடுச்சாமே...?''

''பின்னே... கடிதத்தில் 'இனி அரசுக்கு எதிராக எந்தக் கோரிக்கையும் வைக்கமாட்டேன். நானுண்டு என் தூக்கம் உண்டுன்னு இருப்பேன்'னு எழுதிக் கொடுத்தா...?''

- அதிரை யூசுப்

---



# நான் உண்டு என் தூக்கம் உண்டு!

''மனம் விட்டு அழக் கூட முடியல சரோ!''

''ஏன், கமலா?''

''அதுக்குள்ள சீரியல்ல விளம்பர இடைவேளை வந்து மூடைக் கெடுத்துடுது!''

- அம்பை தேவா

---

''தலைவர் எனக்கு இளைஞர் அணியில் பதவி குடுப்பார் போலத் தெரியுது!''

''எதை வச்சி சொல்ற?''

''தலைக்கு நல்லா டை அடிச்சுட்டு வரச் சொல்லிருக்கார்!''

-அம்பை தேவா

"கபாலிக்கு இன்று பிறந்த நாளாம்...!"

"அதுக்காக ஜெயிலில் எல்லோருக்கும் கஞ்சா சாக்லெட் கொடுத்துத் தொலைக்கணுமா:..?"

- மோகன்

"கவர்ச்சி நடிகையான உங்களுக்கு முந்தி உங்க தங்கச்சிக்கு மேரேஜ் ஆயிடிச்சே..?"

"கவலைப்படாதீங்க. அவளுக்கு முந்தி எனக்கு டைவர்ஸ் ஆயிடும்!"

– சீர்காழி வி. ரேவதி

"பாட்டி! எனக்கு போலீஸ் உத்தியோகம் கிடைச்சிருக்கு. ஆசீர்வாதம் பண்ணுங்க!"

"தொப்பையும் மாமூலுமா என்னைக்கும் நிறைஞ்சு வாழணும் என் ராசா!"

- ஜி. சுந்தரராஜன்

அன்னமே பிரம்மா! அன்னமே விஷ்ணு! அன்னமே சிவன்!

சித்தர்கள் வாழும் பூமியாம் - திருவருள் பொழியும்

# திருவண்ணாமலையில்

## பௌர்ணமி நாளில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



பேரன்புடையீர்! நமஸ்காரம்.

பஞ்சபூதத் தலங்களில், அக்னித் தலமாக விளங்கும் திருவண்ணாமலை, நினைத்தாலே முக்தி தரும் புண்ணிய க்ஷேத்திரம். கிரியே சிவமாகவும், சிவமே கிரியாகவும் விளங்குவதால் இங்கு பௌர்ணமி தினத்தில் கிரிவலம் வருவது சிவபெருமான் உறையும் கைலாயத்தையே வலம் வருவதற்கு ஒப்பாகும். இங்கு பௌர்ணமி காலத்தில் கிரிவலம் வரும் பக்தர்களுக்கும், சாதுக்கள், ஊனமுற்றோர், சன்யாசிகள், ஏழை எளிய மக்கள், பக்தர்கள் ஆகியோருக்கு அன்னம் அளிப்பது மகத்தான புண்ணியத்தை நமக்குத் தருகிறது.

தடுத்தாட் கொள்வது, கிரக நிலைகளை மாற்றுவது, ஊழ்வினைகளை நீக்குவது, முக்தி தருவது, ஆயுளை நீடிப்பது, நோய்களைக் குணப்படுத்துவது போன்ற சிவ லீலைகள் நிகழ்ந்த இவ்விடத்தில், அன்னதானத்தின் மூலம் புண்ணியம் பெறுவதும், மோக்ஷம் அடைய முயல்வதும் உயர்ந்த லட்சியமாகும்.

★ மனச்சாந்தி பெற ★ திருமணம் கைகூட ★ நோய்நொடிகள் தீர ★ எண்ணங்கள் வெற்றி பெற ★ சந்தான பாக்யம் பெற ★ பிரச்சனைகள் எளிதில் தீர ★ கணவன் மனைவி ஒற்றுமை ஏற்பட ★ தொழிலில் மேன்மை பெற ★ பிரிந்தவர்கள் ஒன்று சேர ★ கடன் தொல்லைகளிலிருந்து விடுபட ★ நினைத்த காரியம் நிறைவேற ★ உங்களுக்காக நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கிறோம்.

அன்னதானம் செய்ய அரிசி போன்ற உணவு பொருட்களும் சிறிய தொகையும் ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000 மற்றும் ரூ. 5,000 அளிக்கும் அன்பர்களுக்கு பகவத்கீதை புத்தகம் அல்லது கந்தபுராணம் புத்தகம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும். அல்லது கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோமணி ஸ்ரீமான் திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகளால் தயாரிக்கப்பட்ட அபூர்வ யந்திரம் அன்பர்களின் விருப்பத்திற்கேற்ப எந்த யந்திரம் தேவையோ அந்த யந்திரம் இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

நன்கொடைகளை அனுப்பும் அன்பர்கள் **SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.


## ஸ்ரீ அன்னலக்ஷ்மி அன்னதான ஸேவா ட்ரஸ்ட்
## SRI ANNALAKSHMI ANNADHANA SEVA TRUST
M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: (044) 24900303, 24900603 Mobile : 94441 16300 (A UNIT OF GOPURA DHARISANAM)

தலைமைச் செயலகம்

மீண்டும் பணியில் அமர்த்த உச்சநீதி மன்ற ஆணை

டெஸ்மா

## டெஸ்மா ஜெயிக்குமா?

தமிழக அரசு, உச்ச நீதிமன்ற ஆணையின்பேரில் நடவடிக்கை எடுக்க நிர்பந்திக்கப்பட்டிருக்கிறது.

வன்முறையில் ஈடுபட்டவர்களைத் தவிர வேலை நிறுத்தம் செய்த இதர அரசு ஊழியர்களை மீண்டும் பணிக்கு எடுத்துக் கொள்ளும்படி உச்ச நீதிமன்றம் இடைக்கால ஆணை பிறப்பித்த வுடனே தமிழக அரசு செயல்படவில்லை. உச்ச நீதிமன்றம் மீண்டும் வலியுறுத்திய பிறகே தலைமைச் செயலர் உத்தரவு பிறப்பித்துள்ளார். வன்முறை மற்றும் இதர கிரிமினல் குற்றச் சாட்டுகளைச் சந்திக்கும் 2,200 ஊழியர்கள் நீங்கலாக மற்றவர் கள் மீண்டும் பணியில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள்.

பாரபட்சமின்றி நிலைமையை ஆராய்ந்துதான் ஆணை பிறப்பித்திருக்கிறது உச்சநீதிமன்றம்.

ஒட்டுமொத்தமாக, காலவரையறையற்ற வேலை நிறுத்தத்தில் ஈடுபட முற்பட்ட அரசு ஊழியர்கள் பேரில் கண்டனம் தெரிவித் திருக்கிறது. அரசை மிரட்டிப் பணியவைக்கும் அணுகுமுறையை உச்ச நீதிமன்றம் நிராகரித்திருக்கிறது.

அதே சமயம், ஒன்றரை லட்சத்துக்கு மேற்பட்ட ஊழியர்கள் ஒட்டுமொத்தமாக பணிநீக்கம் செய்யப்படுவதில் உள்ள அபாயம்,

கல்கி

2003 ஆகஸ்ட் 3
சுபானு ஆடி 18
மலர் : 62
இதழ் : 1




அநீதி, அபத்தம் ஆகியவற்றைச் சுட்டிக்காட்டியிருக்கிறது. அவர்களை மறுபடியும் பணியில் அமர்த்துமாறு ஆணையிட்டிருக்கிறது.

இத்தனை பேரை வீட்டுக்கு அனுப்புவது சட்டரீதியாக (அதுவும் சமீபத்திய டெஸ்மா அடிப்படையில்) சரியாக இருக்கலாம். ஆனால், மனிதாபிமான அடிப்படையிலும் நடைமுறைக் கஷ்டங்களை முன்னிட்டும் மாற்றப்பட வேண்டிய முடிவு அது.

அத்தனை ஊழியர்களையும் விசாரணைக்கு உட்படுத்தி, அதன் பிறகு வேலைக்கு எடுத்துக் கொள்வதானால் ஆட்சிக் காலமே கூட முடிந்து போய்விடும்!

அதுவரையில் புதிய ஊழியர்களுக்குப் பயிற்சி கொடுப்பது யார்? அப்படியே பயிற்சி பெற்று அவர்கள் பணி செய்ய ஆரம்பித்த பிறகு, பழைய ஊழியர்கள் வந்து சேர்வார்களேயானால் எப்பேர்ப்பட்ட குழப்பம் ஏற்படும்!

அனைத்தையும் உத்தேசித்து, உச்ச நீதிமன்றம் தனது ஆணையைத் தமிழக அரசு விரைவில் செயல்படுத்துவதே நல்லது என வலியுறுத்தியதில் வியப்பில்லை.

டெஸ்மா சட்டத்தின் நியாயத்தைக் கேள்விக்கு உட்படுத்தியிருக்கும் வழக்கில் இறுதித் தீர்ப்பு எவ்வாறு அமையும் என்பதைப் பொறுத்து, உச்ச நீதிமன்றத்தின் இந்த இடைக்கால ஆணைக்கு வலு கூடும் அல்லது குறையும்.

வேலை நிறுத்தம் செய்த ஊழியர்கள் மன்னிப்புக் கோரி கடிதம் தர கட்டாயப் படுத்தப்பட்டுள்ளார்கள். அவர்களிடமிருந்து மன்னிப்புக் கடிதங்கள் பெறுவதைக் காட்டிலும் அவர்களின் ஒத்துழைப்பைப் பெறுவது முக்கியம். கடமை உணர்வு என்பது அதிகார பலத்தைப் பிரயோகிப்பதால் பெறக் கூடியதல்ல; முன்னுதாரணமாகத் திகழ்ந்து, அன்பையும் ஆளுமையையும் செலுத்திப் பெற வேண்டிய ஒன்று.




## சி.பி.ஐ. - காற்றடைத்த பை!

"வழக்கின் முக்கியத்துவம் கருதி அதை சி.பி.ஐ. வசம் ஒப்படைக்க வேண்டும்" என்று இனி யாரும் கோரிக்கை வைக்கவே தயங்குவார்கள்!

சி.பி.ஐ. வசம் உள்ள பாப்ரி மசூதி தகர்ப்பு வழக்கில், அத்வானி, உமா பாரதி, ஜோஷி ஆகியோர் மீது, 'திட்டமிட்ட சதி' செய்ததாகக் குற்றப் பத்திரிகைகள் தாக்கல் செய்யப்பட்டிருந்தன. இப்போது அவை தொபுகடீரென்று கைவிடப்பட்டுள்ளன.

இவர்கள் பேரில் குற்றச்சாட்டே இல்லையெனில், எதற்காக முதலில் குற்றப் பத்திரிகை பதிவுசெய்யப்பட வேண்டும்? பின்னர், அதைப் பதிவுசெய்த சி.பி.ஐ.யே எதற்கு அதை வாபஸ் பெறவேண்டும்!

இதுநாள் வரை, அரசியல் செல்வாக்கு படைத்தவர்கள் தங்கள் பேரிலான வழக்குகள் நடக்காமல் தாமதப்படுத்தினார்கள்; அல்லது சாட்சிகளை மிரட்டியோ, விலைக்கு வாங்கியோ, சாட்சியங்களை அழித்தார்கள். இப்போதைய லேட்டஸ்ட் 'தொழில்நுட்பம்', அரசு இயந்திரத்தின் கட்டுப்பாட்டிலுள்ள சி.பி.ஐக்கு நெருக்கடி தந்து வழக்கை வாபஸ் பெறச் செய்வது! பி.ஜே.பி. காட்டியிருக்கும் இந்த மகத்தான முன்னுதாரணம், இதே தவறைச் செய்ய பிற கட்சிக்காரர்களையும் தூண்டும். அதனினும் கவலைக்குரிய விஷயம், இதுபோன்ற அநீதிகள், சி.பி.ஐ. என்கிற சுயேச்சை அதிகாரம் பெற்ற அமைப்பை, வெறும் காற்றடைத்த பையாக்கிவிடும்.

நாட்டில் நீதி நேர்மையைக் குழிதோண்டிப் புதைக்கும் குறுக்கு வழி இது!




# வில்லி இயந்திரம்!

டெர்மினேட்டரின் மூன்றாவது பாகம் வெளியாகியிருக்கிறது. முந்தைய இரண்டு படங்களில் இல்லாத ஒரு முக்கிய வித்தியாசம் - இதில் அர்னால்ட் ஸ்வாஸ்னெகருக்கு எதிராகக் களம் இறங்கியிருப்பவர் ஒரு பெண். அதாவது அர்னால்ட் ஸ்வாஸ்னெகர் மனிதகுலத்துக்கு ஆதரவாகச் செயல்படும் இயந்திரம் என்றால், மனிதகுலத்தை அழிப்பதற்காக வந்திருக்கும் பெண் இயந்திரம்தான் வில்லி. டி - எக்ஸ் என்ற பெயர் கொண்ட இந்த வில்லி இயந்திரம் அர்னால்டைவிட மிகவும் சக்தி வாய்ந்தது!

பெண்மையின் அழகான உடற்கட்டு. முகம் கூட லட்சணம்தான். என்றாலும் பார்வையிலும், நடையிலும் யந்திரத்தனத்தை வெளிப்படுத்துவதை அனாயாசமாகச் செய்திருக்கிறார் இந்தப் பாத்திரத்தை ஏற்றுள்ள நடிகை கிரிஸ்டன்னா லோகென். இவரை அர்னால்ட் புகழ்ந்து தள்ளியிருக்கிறார். "எதிர்பார்த்த அசைவுகளை அற்புதமாகச் செய்தார். எனக்கு ஈடுகொடுத்து அனாயாசமாக நடித்தார்" என்று பத்திரிகைக்காரர்களிடம் பாராட்டு மடல் வாசித்திருக்கிறார்.

பானிக், அகடமி பாய்ஸ் போன்ற திரைப்படங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கொஞ்சம் தலைகாட்டியிருந்தாலும், கிரிஸ்டன்னா இதுவரை சினிமாவில் பெரிதாகப் பெயர் எடுத்துவிடவில்லை. ஆனால் 'வில்லி' என்ற தொலைக்காட்சித் தொடரில் அமர்க்களப்படுத்தியிருந்தார். லா அண்ட் ஆர்டர், ஜஸ்ட் ஷூட் மி போன்ற தொலைக்காட்சித் தொடர்களிலும் இவருக்கு முக்கிய வேடம். அதுமட்டுமல்ல, "மார்டல் கம்பாட்" என்ற பிரபல வீடியோ விளையாட்டுகளில் "சாரா" என்ற பெயரில் இவரது உருவம் பயன்படுத்தப்பட, இவரது புகழ் விரிவடைந்தது.

டெர்மினேட்டர்–3ல் இவர் அறிமுகமாகும் காட்சியைப் படம்பிடித்தபோது, ஸ்டுடியோவில் கூட்டம் தாங்கவில்லை என்றிருக்கிறார் இயக்குனர் ஜோனாதன் மாஸ்டோ.

வேறொன்றுமில்லை. அந்த நடிகை திரையில் அறிமுகமாவது நிர்வாணமாக! (இயந்திரத்துக்கு உடை ஏது?) அர்னால்ட் ஸ்வாஸ்னெகரும் உடையின்றித்தான் வேறொரு காட்சியில் அறிமுகமாகிறார். இருவருமே தங்கள் உடல்வாகைக் கொண்ட மனிதர்களை வீழ்த்தி அவர்கள் உடையை அணிகிறார்கள் (நல்லவேளை!).

நடிக்க வருவதற்கு முன் நியூயார்க்கில் உள்ள ஒரு பெரிய பழ எஸ்டேட்டில் வளர்ந்தார் இவர். சிறுவயதிலிருந்தே குதிரைச் சவாரியும், நடனமும் இவருக்கு மிகவும் பிடிக்குமாம். வசிக்கும் நகரம் லாஸ் ஏஞ்சலிஸ்.

எட்டு நாடுகளைச் சேர்ந்த பல ஆயிரக்கணக்கான நடிகைகளிலிருந்து சலித்து எடுக்கப்பட்டாராம் இந்த நடிகை. "ஒரு ரோபோவாக நடிப்பது, என்ன பெரிய கஷ்டம் என்று முதலில் நினைத்தேன். ஆனால் பிறகுதான் அதில் உள்ள அவஸ்தைகள் புலப்பட்டன. எந்தவித உணர்வையும் வெளிக்காட்டாமல் நடிக்க வேண்டும். நடையைக் கூட மிகவும் மாற்றியமைத்துக் கொள்ளவேண்டும். பல காலமாக பாடுபட்டு அடைந்த நளினங்களைத் தொலைத்துவிட வேண்டும்.

இப்படி சவால் கொடுப்பதாக இருந்தது இந்தப் பாத்திரம். தவிர, ஸ்வாஸ்னெகரைவிட அதிக சக்தி கொண்ட இயந்திரமாக நடிக்கிறேன் என்பதே பெரும் த்ரில்லைக் கொடுத்தது" என்கிறார்.

– குல்லூ

# ரூ.10,000 பரிசுபெறும் இளமைச் சிறுகதை!

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி -2003

### முடிவுகள்:

ஆயிரக்கணக்கான வாசக எழுத்தாளர்கள் கலந்து கொண்டு சிறப்பித்த இவ்வாண்டு இளமைச் சிறுகதைப் போட்டிக்கு, நடுவர்கள் எழுத்தாளர்கள் அருண் சரண்யா வும், பாரதி பாஸ்கரும். இவர்களுடன் கல்கி ஆசிரியர் சீதா ரவியும், பதிப்பாளர் கல்கி ராஜேந்திரனும் இணைந்து பரிசீலித்ததில், கீழ்க்கண்ட சிறுகதைகள் பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன.


* நடுவர்களுடன் ஆசிரியரும், பதிப்பாளரும்


* அருண் சரண்யா


* பாரதி பாஸ்கர்

முதல் பரிசு ரூ.10,000
**கடவு - இரா. தனிக்கொடி,** புதுக்கோட்டை

இரண்டாம் பரிசு ரூ.7,500
**தொலைந்த காலம் - ஜி.ஆர்.சுரேந்திரநாத்,** சென்னை - 28

மூன்றாம் பரிசு ரூ.5,000
**யெரிதினும் பெரிது கேள் - கே மாதங்கி,** சிங்கப்பூர்

ஆறுதல் பரிசு (1) ரூ.2,500
**மாய வலை - கே.பி. ஜனார்த்தனம்,** நாகர்கோவில்

ஆறுதல் பரிசு (2) ரூ.2,500
**அன்புள்ள அக்கா - ஏ.ஏ. ஹெச். கே. கோரி,** சென்னை - 40

முதல் பரிசு பெற்ற கதை இந்த இதழில் இடம் பெறுகிறது. பிரசுரத்துக்குத் தேர்வான கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்.

பரிசு பெற்றோருக்கு வாழ்த்துகள். ஆர்வமுடன் கலந்துகொண்ட அனைவருக்கும் நன்றி!

**- ஆசிரியர்**

படங்கள் : ஸ்ரீஹரி

தமிழ் கூறும் நல்லுலகின் சுமி ரசிகர்கள் அனைவருக்கும் வணக்கம். இது சுமியின் புதிய சகாப்தம். அன்னிய ஆங்கிலத்தை அடியோடு புறக்கணிக்கும் புரட்சி பாகம்!

ஏன் இந்த மாற்றம்...?

ஜெயலலிதாவை ஹேமமாலினி எதற்குச் சந்தித்தார்?

டேவிட் கெல்லி ஏன் தற்கொலை செய்து கொண்டார்?

பருவ மழை ஏன் பொய்க்கிறது?

நாலு தூறல் போட்டால் சென்னை வீதிகள் ஏன் வெனிஸ் நகரம்போல் மாறுகின்றன...?

நிறை மாதமாயிருக்கும் அடுத்த வீட்டுப் பெண்ணுக்கு எந்த நிமிடம் பிரசவ 'வலி' ஏற்படும்...?

இந்தக் கேள்விகளுக்கு உங்களால் பதில் சொல்ல முடியுமானால் சுமியின் மாற்றத்துக்கும் காரணம் சொல்ல முடியும்.

நிற்க!

தேர்தலில் ஒரு தொகுதிக்கு ஒரு வேட்பாளர் தேர்வு செய்வது நமக்குப் பழக்கம். மகளிர் இட ஒதுக்கீடு என்கிற பெயரில் முப்பத்து மூணு சதவிகித தொகுதிகளில் கூடுதலாக ஒரு பெண் வேட்பாளரும் திருத்தப்பட்டால் எப்படி இருக்கும்...? ஒரே தொகுதியிலிருந்து இரண்டு சட்ட மன்ற அல்லது நாடாளுமன்ற உறுப்பினர்கள் தேர்வாகி, அவையில் 33 சதவிகிதம் கூடுதலாக இருக்கைகள் அமைக்க வேண்டும். செலவு 33 சதவிகிதம் கூடும். குழப்பமோ 33 x 33 சதவிகிதம் அதிகரிக்கும். ஒரு தொகுதியில் உள்ள இரண்டு வேட்பாளர்கள் இருவேறு கட்சியினராயிருப்பின் என்ன ஆகும் என்று கற்பனை செய்தால் விரிகிற காட்சி ஓமன் திரைப்படத்தைக் காட்டிலும் பயங்கரம் போங்கள்.

நல்லகாலமாக இந்த யோசனை முளையிலேயே கிள்ளப்பட்டிருக்கிறது. ஆனால், இப்படி ஒரு 'அபாரமான' யோசனையைத் தவிர்க்க முடியவில்லை பார்த்தீர்களா...!



# பிடிக்கிறது பைத்தியம்!

வீரப்பனை ஞாபகமிருக்கிறதா...? அதான், தேவாரம் போல் மீசை வைத்துக் கொண்டு, சந்தனத்தோடு அவ்வப்போது சில வி.ஐ.பி.களையும் புகழ் மணக்க மணக்க கடத்தும் மாதேஸ்வரன் மலைவாசி. இவரைப் பிடிப்பதற்காக தமிழக அரசு ஒரு சிறப்பு அதிரடிப் படை நிறுவியதும் ஞாபகமிருக்கும். அந்தப் படை வீரப்பன் வளைய வரும் கிராமத்து மக்களைப் பிடித்து அதிரடி விசாரணை நடத்தியிருக்கு. விசாரணைக்கு உட்படுத்தப்பட்ட பலர் சித்தப்பிரமை பிடித்ததுபோல் இருக்கிறார்கள்; அவர்களுக்கு





மனநல மருத்துவர்களின் சிகிச்சை தேவைப்படுகிறது என்று தெரியவந்துள்ளது. அப்பகுதி மக்களுக்கென்று சேவை அமைப்புகள் மருத்துவ முகாம்கள் நடத்தியபோது வெளிச்சத்துக்கு வந்தது இந்த மகத்தான உண்மை! வீரப்பனைப் பிடிப்பதற்குள் பைத்தியம் பிடிக்காமல் இருந்தால் சரி... காவல் படைக்கு அல்ல; கிராம மக்களுக்கு!

ஈராக்கில் பணியாற்றிக் கொண்டிருக்கும் அமெரிக்க ராணுவ வீரர்களும் இதைத்தான் சொல்கிறார்கள். பைத்தியம் பிடிக்கிறார்போல் இருக்கிறதாம். ஜூன் மாதமே எங்களை வீட்டுக்கு அனுப்புவதாகச் சொல்லிவிட்டு இப்போது இழுத்தடிக்கிறது அமெரிக்க அரசு... இனி செப்டெம்பர் வரை இங்கிருந்து நகர முடியாது... என்று புலம்புகிறார்கள். காலவரையறையின்றி ஈராக்கில் பணி செய்துவரும் ராணுவ வீரர்களை அமெரிக்காவிலிருக்கும் மனைவிமார் விவாகரத்து செய்யப் போவதாக அச்சுறுத்துகிறார்களாம்.

தமிழக மக்களுக்குப் பைத்தியம் பிடிக்கச் செய்ய தனி முயற்சியே வேண்டாம். அவரவரும் ஏற்கெனவே சின்னத்திரையிடம் பித்து கொண்டு அலைகிறார்களே. ஆனாலும், சில தயாரிப்பாளர்கள் / இயக்குனர்கள் அவர்களைச் சும்மா விடுவதாயில்லை. குறுக்கு வழியில் கிழ்ப்பாக்கம் அனுப்பி வைக்கிறேன் என்கிறார்கள். தாயும் மகனும் சேர்ந்து தண்ணியடிப்பதுபோன்ற மகத்தான காட்சிகளை வீடுகளின் வரவேற்பறைக்குள் விலாவாரியாக 'வழிய' விடுகிறார்கள். கதையில் எந்த கட்டத்தில் காட்சி வருகிறது? அது அவசியமானதா? என்ற கேள்விகள் ஒருபுறம் இருக்கட்டும்... இப்படி ஒரு கட்டம் இருப்பின் அதைச் சற்று இங்கிதமாக, சுருக்கமாக, அதிர்ச்சி மட்டுமே ஊட்டும் வகையில் சட்டென்று சொல்லிப் போக முடியாதா? மரபு மீறலையும் ஆபாசத்தையும் சேலம் தாம்புக் கயிறு போல் இழுத்து இழுத்துச் சொல்லும் அநாகரிகத்தைக் கேட்பாரே யில்லை! எந்த தொடரில் இப்படியொரு காட்சி? என்று கேட்பவர்கள் இரவு 9.30க்கு ஜெயா டீ.வி. பார்க்காதவர்கள்.

தங்கள் ஊர் தாம்புக் கயிறை உதாரணம் காட்டியதற்காக சேலத்துச் சிங்கங்கள் பிடறியைச் சிலுப்பிக் கொண்டு கோபப்படுவது புரிகிறது. பொதுவாக இதுபோன்ற காட்சிகளுக்கு உவமை சொல்லப்படும் * மென்பொருளுக்குத் தமிழ்ச்சொல் அறியாததால் தாம்புக் கயிறில் தஞ்சம் புக வேண்டியதாயிற்று! மாங்கனி இதயங்கொண்டு மன்னிப்பீர்களாக!

- பி.கு. : பழைய நடைதான் வேண்டும் என்று பக்கம் பக்கமாய்க் கடிதம் எழுதி மையை வீணாக்கி கையை ஒடித்துக் கொள்ளாதீர்கள்.

---

* அதாங்க, சூயிங் கம்!

- சுமி

கர்நாடக இசையில் தனி முத்திரை பதித்து வரும் ஓ.எஸ். தியாகராஜனுக்கு 'சங்கீத சூடாமணி' விருதை அளிக்க விருக்கிறது ஸ்ரீகிருஷ்ண கான சபா. அதே நிகழ்ச்சியில் அவரது தந்தை ஓ.வி.சுப்ரமணியமும் 'ஆசார்ய சூடாமணி' விருது பெறுகிறார்.

தாம் கடந்து வந்த பாதையையும் அதன் திருப்பு முனைகளையும் இங்கு பகிர்ந்து கொள்கிறார் ஓ.எஸ். தியாகராஜன்.

"நான் பிறந்தது தஞ்சாவூரில். வளர்ந்தது டெல்லியில். இப்போது சென்னையில்.

என் அப்பா ஓ.வி. சுப்ரமணியம் சங்கீதத்தைத் தொழிலாகக் கொண்டவர். டெல்லியில் இசை ஆசிரியராக இருந்தார். இப்படி ஒரு சூழலில் வளர்ந்ததாலோ என்னவோ, சிறு வயதிலிருந்தே பிரபல பாடகனாக வேண்டும் என்கிற ஆசை என் மனத்தில் வேர் விட்டிருந்தது.

ஒன்பது வயதிலிருந்தே அப்பாவிடம் இசையைக் கற்றுக் கொள்ளத் துவங்கிவிட்டேன். ஏழு வருடங்கள் பயின்று ஓரளவு திறமைசாலியாகவும் விளங்கினேன். ஆனால் முழு நேர இசைக் கலைஞனாவதற்கு வீட்டில் உள்ளவர்கள் கடுமையாக எதிர்ப்பு தெரிவித்தார்கள். பொருளாதாரத்தில் பின்னடைவு ஏற்படும் என்கிற பயம்தான் முக்கியக் காரணம்.

இதன் காரணமாக டெல்லி பல்கலைக் கழகத்தில் பட்டப்படிப்பை முடித்த கையோடு, தனியார் நிறுவனம் ஒன்றில் கணக்குப் பிரிவு அதிகாரியாகச் சேர்ந்தேன். 1970லிருந்து 1986 வரை மிகவும் சவாலான கால கட்டம். அலுவலகத்துக்கும் சென்று கொண்டு இசைக் கச்சேரிகளையும் செய்து வாழ்க்கையைச் சமாளிப்பது என்பது, கம்பிமேல் நடப்பது போல்தான் இருந்தது.

ஆல் இந்தியா ரேடியோவில் கச்சேரி செய்யும் வாய்ப்பு அவ்வப்போது கிடைத்துக் கொண்டிருந்தது. "பி ஹை" எனும் கிரேட் அங்கு எனக்குக் கிடைத்தது. அலுவலக நேரம் ஒன்பதிலிருந்து ஐந்து. சில சமயம் காலை வேளைகளில் வானொலிக் கச்சேரி இருக்கும். மாலையில் மேடைக்கச்சேரி. வெவ்வேறு உடைகளைக் கையோடு எடுத்துக் கொண்டு நடுநடுவே மாற்றிக் கொள்ள வேண்டும் (நடுவே அலுவலகத்துக்கான உடை வேறு). வெளியூர்க் கச்சேரி என்றால் விடுப்பு எடுத்துக் கொள்வது பெரும்பாடாக இருந்தது.

இசையில் நான் கற்றுக் கொள்ள வேண்டியவை ஏராளமாக இருந்தன. அவற்றையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டுமே என்ற ஏக்கம் வேறு மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. டெல்லியில் கர்நாடக இசைக் கச்சேரிக்கான வாய்ப்பு என்பது குறைவுதான்.



* ஓ.எஸ். தியாகராஜன்.

# "சாதித்தால்



## தொட்டினேன் திறந்தது

இந்தச் சூழலில் சென்னையில் உள்ள பல சபாக்களையும் கடிதம் மற்றும் தொலைபேசி மூலம் அணுகினேன். டெல்லியில் கர்நாடக இசை வட்டாரத்தில் என் பெயர் பரவியிருந்தது என்றாலும், சென்னையில் அதற்கு உடனடி அங்கீகாரம் கிடைக்கவில்லை. "பார்க்கலாம்" என்ற ஒற்றை வார்த்தைதான் பல செயலாளர்களின் மொத்த பதிலாக இருந்தது.

அந்தச் சமயத்தில் கிருஷ்ணகான சபா எனக்கு வாய்ப்பளித்தது. அது பெரும் வெற்றியாகவும் அமைய, அதற்குப் பிறகு சென்னையில் உள்ள பிற பிரபல சபாக்களும் எனக்கு வாய்ப்பளிக்கத் தொடங்கின.

நான் வேலை செய்து கொண்டிருந்த நிறுவனத்தின் சென்னைக் கிளைக்கு மிகவும் கஷ்டப்பட்டு மாற்றல் வாங்கிக் கொண்டேன். இதற்குள் என் சேமிப்பில் இருந்த விடுப்பையெல்லாம் காலி செய்துவிட்டிருந்தேன். எனவே நான் வேலை பார்த்துக் கொண்டிருந்த நிறுவனத்திற்கும் எனக்கும் உறவு சுமூகமாக இல்லை. 1986ல் என் வேலையை ராஜினாமா செய்துவிட்டு, முழுநேர இசைக் கலைஞனாக மாறினேன். வேலையை ராஜினாமா செய்யும் அளவுக்குத் தன்னம்பிக்கையும் பொருளாதாரச் சூழலும், கொஞ்சம் தாமதமாகத்தான் உண்டாயின.

சென்னையில் வசித்தபோது பத்மவிபூஷண் லால்குடி ஜெயராமனை அணுகி எனக்குப் பயிற்சி அளிக்கும்படி கேட்டுக் கொண்டேன். ஏற்கெனவே என்னைப் பற்றி ஓரளவு அறிந்திருந்தார் என்பதால், அவர் இதற்கு உடனடியாக ஒப்புக் கொண்டார். நிறைய ஊக்கம் கொடுத்தார். சில குறிப்பிட்ட கீர்த்தனைகளை அவரிடமிருந்து கற்றுக் கொண்டேன். என்னிடம் அசாத்தியத் திறமை மறைந்திருப்பதாக அவர் கூறுவதுண்டு. சில கச்சேரிகளில் எனக்கு வயலின் வாசிக்கவும் செய்தார். எனக்குத் தெரிந்து அவர் வயலின் வாசித்த சீடர்கள் வேறு யாரும் இல்லை. அது என் பாக்கியம். இசையை அனுபவிப்பது, அடிப்படை ஞானம், ரசிகர்களுக்கு ஏற்றாற்போல் ஓரளவு மாற்றிக் கொள்வது போன்ற பல விஷயங்களை இந்தக் காலகட்டத்தில் தெரிந்து கொண்டேன். லால்குடி சாரோடு இணைந்து செய்த கச்சேரிகள் பெரிதும் வரவேற்கப்பட்டன. சபாக்களிடையே என் புகழ் பரவ இவை காரணமாக அமைந்தன.

கூடவே சங்கீத கலாநிதி டி.எம். தியாகராஜன் அவர்களையும் குருவாக இருப்பதற்கு அணுகினேன். அவரிடமிருந்து நிறைய கீர்த்தனைகள் கற்றுக் கொள்ள வேண்டும் என்பது என் விருப்பமாக இருந்தது. இதற்கு அவர் அன்போடு ஒப்புக் கொண்டு, தன் மாணவனாக என்னை இணைத்துக் கொண்டார். பல கிருதிகளை எனக்குச் சொல்லிக் கொடுத்தவர் அவர்தான். அவரது மெட்டமைப்பு ஸ்டைல், கீர்த்தனைகளின் கட்டமைப்பு, சிட்டஸ்வரங்கள் ஆகியவை என்னைப் பெரிதும் கவர்ந்தன.

இந்த இடத்தில் மிருதங்க வித்வான் காரைக்குடி மணியைப் பற்றிக் குறிப்பிடுவது நியாயம். டி.எம். தியாகராஜனிடம் என்னைப் பரிந்துரை செய்தது அவர்தான்.

தொடக்க காலத்தில் என் கச்சேரிகள் பிரபலமாக நான் மட்டுமே காரணமல்ல. லால்குடி ஜெயராமன், காரைக்குடி மணி, பாலக்காடு ரகு போன்ற பெரும் பிரபலங்கள் எனக்குப் பக்கவாத்தியம் வாசிக்க ஒப்புக் கொண்ட

# எதிர்ப்புகள் மாயமாகும்!"



தும் என் புகழுக்கு முக்கியக் காரணம்.

இசையைத் தவிர வேறெதிலும் கவனம் செலுத்த வேண்டிய அவசியமில்லை என்கிற அளவுக்கு, குடும்பப் பொறுப்புகளை முழுமையாகச் சுமக்கும் என் மனைவி வைதேகிக்கும் நான் நன்றி கூற வேண்டும்.

பதினைந்து வயதிலேயே டெல்லியில் மேடைக் கச்சேரி செய்யத் தொடங்கி விட்டேன். என்றாலும் சென்னையில் என் அரங்கேற்றம் இருபத்தியெட்டாவது வயதில்தான். இதன் காரணமாகவோ என்னவோ, சில சக இசைக் கலைஞர்கள் இளம் வயதிலேயே வெகுவேகமாகப் புகழ் பெற்ற அளவுக்கு இல்லாமல், நான் கொஞ்சம் மெதுவாகத்தான் ரசிகர்களிடையே பிரபலமானேன். கர்நாடக இசை வாய்ப்புகள் பெரிய அளவில் வர வேண்டுமென்றால், சென்னையில் வசிப்பதுதான் ஒரே வழி என்பது கொஞ்சம் தாமதமாகத்தான் புரிந்தது. இளம் கலைஞர்கள் இதை மனத்தில் கொள்ள வேண்டும்.



"என் பசங்க வீட்டிலே ஒழுகா படிக்கறதுக்குக் காரணமே உங்க 'சீரியல்'தாங்க."

"அப்படியா?!"

"ஆமாம். 'சீரியலை போட்டுவிடுவேன்'னு பயமுறுத்திதான் அவங்களை படிக்க வைக்கிறேன்!"

- யமுனா ரெங்கநாதன்

இப்போது நான் அடைந்திருக்கும் நிலை குறித்து திருப்திதான். அதே சமயம் இன்னும் கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. இதற்கான ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறேன். சக கலைஞர்களில் பலரும் எண்ணிலடங்காத பக்திப் பாடல் ஒலி நாடாக்கள் வெளியிடுவதைப் பற்றிக் கேட்டால் என் பதில் இதுதான் : வாதாபி கணபதிம், சக்கனி ராஜ இவையெல்லாம் கூட நிச்சயம் பக்திப் பாடல்கள்தான். பழைமை நழுவாமல் கர்நாடக இசை வட்டத்துக்குள்ளேயே இருக்கத்தான் எனக்குப் பிடிக்கிறது, தெரிகிறது. தேவாவின் இசையில் சில திரைப்பாடல்களில் சிறு பகுதிகள் பாடியிருக்கிறேன். என்றாலும், கர்நாடக இசைதான் என் முதல் மற்றும் முக்கிய விருப்பம். ஃபியூஷன் பற்றி எனக்கு ஞானம் இல்லை என்பதால் அது குறித்து கருத்துக் கூற இயலவில்லை.

முதல் வெளிநாட்டுக் கச்சேரி துபாயில் நடைபெற்றது. இரு வருடங்களுக்குமுன் பாரீஸில் நடைபெற்ற இசை நிகழ்ச்சியை மறக்கவே முடியாது. கரகரப்ரியாவில் ராக ஆலாபனை செய்து முடித்தவுடன் எழுந்த கைதட்டல் இருக்கிறது பாருங்கள், அப்போது எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை விவரிக்க முடியாது.

எந்த ஸ்தாயியிலும் நின்று கார்வை கொடுத்துப் பாடக் கூடிய திறமைசாலி என்று என்னைப் பற்றி விமர்சகர்கள் குறிப்பிடும் போது நிறைவாக இருக்கிறது. "ஓ.எஸ். தியாகராஜனின் பாட்டு விச்ராந்தியானது" என்று சுப்புடு பாராட்டினார். மன அமைதிக்கு என் இசை உதவுகிறது என்றால், அதை விட வேறென்ன பேறு இருக்க முடியும்?

நான் சங்கீதத்தில் இந்த நிலைமை அடைந்ததற்கு என் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் மிகவும் மகிழ்ச்சி கொள்கிறார்கள். சொல்லப் போனால் தொடக்கத்தில் முழு நேர இசைக் கலைஞன் ஆக வேண்டாம் என்று கூறியதற்காக இப்போது வருத்தப் படுகிறார்கள். சாதித்து விட்டால் எதிர்ப்புகள் மாயமாகிவிடும்.

கர்நாடக இசைத் துறையில் சாதிக்க விரும்பும் இளைஞர்களுக்குச் சில வார்த்தைகள். நிறைய உழைப்பதற்குத் தயாராக இருங்கள். இன்று முன்னுக்கு வந்திருக்கும் ஒவ்வொரு இசைக் கலைஞருக்குப் பின்னும் ஏராளமான உழைப்பு இருக்கிறது. நிறைய கீர்த்தனைகளைப் பாடம் பண்ணுங்கள். குரலைக் காப்பாற்றுங்கள். இதற்குத் தொடர்ந்த பயிற்சியும், நல்ல பழக்க வழக்கங்களும் மிகவும் அவசியம். வருமானத்தைப் பற்றி ரொம்ப யோசிக்காதீர்கள். திறமையை நன்கு வளர்த்துக் கொண்டால் புகழ் பெருகும். தானாக வருமானமும் அதிகமாகும். ஏதாவது ஒரு ஏரியாவில் ஸ்பெஷலைஸ் செய்யுங்கள்.

**- ஜி.எஸ்.எஸ்.**

படங்கள் : **ஸ்ரீஹரி**



# மூட்டு வலியா! இனி கவலை வேண்டாம்



மூட்டு வலி என்பது மூட்டுக்களில் ஏற்படும் பாதிப்பை குறிக்கின்றது. இதனை கீழ்வாயு என்றும் அழைப்பார்கள். வாதம், பித்தம், கபம் போன்றவைகள் கூடுவதாலும், குறைவதாலும் இந்நோய் உண்டாகிறது.

மூட்டு வலி பல வகைப்படும் அவைகள் :

**வாதமூட்டு வலி** : வாயுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது. வாயுப் பொருட்கள், பயிறு வகைகள், பருப்பு வகைகள், கிழங்கு வகைகள் முதலியன. **பித்தமூட்டு வலி** : பித்தத்தை அதிகப்படுத்தும் உணவுப் பொருட்களை அதிகம் உண்பதால் உண்டாகிறது டீ, காபி, மது, காரமான உணவு வகைகள் முதலியன. **கப மூட்டு வலி** : கபகுற்றம் மிகுதியான உணவுப் பொருட்கள் அதிகம் உண்பதால் கப மூட்டுவலி உண்டாகிறது. இனிப்பு பண்டங்கள், தயிர், இறைச்சி, நெய், எண்ணெய் பண்டங்கள் முதலியன. **இதய கீழ் வாயு** : இதயத்தை நோய் கிருமிகள் தாக்குவதால் இதய மூட்டு வலி உண்டாகிறது. இதனால் ஜுரம், முழங்கால் மூட்டுகளில் வீக்கம், வலி, சூடு போன்றன தோன்றும். சோதனை செய்து பார்க்கும்போது இதயத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கும். **மேக கீழ் வாயு** : விலை மாதர் உறவால் நோய் கிருமிகள் உடலில் பரவி மூட்டுக்களில் பாதிக்கின்றது. இதனால் மூட்டுக்களில் சீழ் பிடித்தல், வீக்கம், வலி, குத்தல், குடைச்சல் போன்றன இருக்கும். **மூட்டு வலியின் அறிகுறிகள்** : மூட்டுக்களில் வலி, குத்தல், குடைச்சல், வீக்கம், நடக்க இயலாமை, சுரம் போன்றவை காணப்படும். மேலும் எலும்பு தேய்மானம், சீழ் பிடித்தல் போன்றவையும் உண்டாகும்.

**மூட்டு வலிக்கான மூலிகைகள்** : வேப்பிலை, வில்வம், அத்தி, நாவல், அருகம்புல், ஆாசன், வாத நாராயணன், முடக்கற்றான், கீழா நெல்லி, முருங்கை போன்ற மூலிகைகளை பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பின் உரலில் போட்டு நன்கு இடித்துத் தூள் செய்து, பின் சம அளவில் எல்லாவற்றையும் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் வைத்துக் கொள்ள வேண்டும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினமும் காலை, இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ள வேண்டும். இவ்வாறு சுமார் மூன்று மாதம் செய்து வந்தால் எல்லா வகை மூட்டு வலிகளும் பூரண குணம் கிட்டும். சுமார் பதினைந்து நாட்களில் குணம் தெரிய ஆரம்பிக்கும்.

**எண்ணெய் கலவை** : தேங்காய் எண்ணெய், விளக்கெண்ணெய், வேப்ப எண்ணெய் ஆகிய மூன்றையும் சம அளவு ஒன்றாக கலந்து (சுமார் வகைக்கு 50 மில்லி) ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து ஒரு டீஸ்பூன் அளவு உள்ளங்கையில் விட்டு உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக நாவினால் நக்கி சாப்பிட வேண்டும்.

**உணவு முறைகள்** : தினம் காலை, அல்லது ஏதேனும் ஒரு வேளை பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழ ஜூஸ்கள், வெஜிடபிள் சாலட், புருட் சாலட் போன்றவற்றில் ஏதேனும் இரண்டு அல்லது மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளவும். உதாரணம் பப்பாளி, மா, அன்னாசி, வாழை, பேரிட்சை நாவல், கொய்யா, மாதுளை, சப்போட்டா, திராட்சை, நொங்கு, இளநீர், பதனீர், தேங்காய், கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், கோவக்காய், பேரிக்காய் போன்றன உட்கொள்ளலாம். மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உண்பது நல்லது. இதிலும் ராகி கோதுமை, பார்லி, உளுவல் போன்ற தானியங்கள் அடிக்கடி சேர்த்துக் கொள்வது நல்லது. முள்ளங்கி, அவரை, கேரட், பீட்ரூட், வாழைத்தண்டு, கத்தரி, முருங்கை போன்றவைகளை பொறியல் அல்லது சூப் செய்து சாப்பிடுவது நல்ல பலன் அளிக்கும்.

**மூட்டுக்களை பாதுகாக்கும் முறைகள்** : எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் மூட்டுக்களில் எண்ணெய் சென்று நன்றாக செயல்படவும், மிருது படவும் செய்கின்றது.

**சத்தான உணவுகள் உண்பது** : மூட்டுக்களை பாதுகாக்கின்றது. மூட்டுக்களில் வீக்கம் ஏற்பட்டால் மூட்டுக்களில் விளக்கெண்ணெய் சிறிது தடவி ஐந்து நிமிடம் கழித்து உப்பை அல்லது அரிசி தவிடு அல்லது கோதுமை தவிட்டை சூடு செய்து, பின் இதனை துணியில் முடிந்து ஒற்றடம் கொடுக்கலாம். பின்னர் கக்கை தூள் செய்து வெந்நீரில் கரைத்து பற்று போட வீக்கம், வலி, குறையும். தினமும் காலை எழுந்தவுடன் இயன்ற அளவு தண்ணீர் குடிக்கவும். வாரம் ஒரு நாள் பகல் ஒரு வேளை உணவை தவிர்த்தல் வேண்டும். ஒவ்வொரு வேளையும் முக்கால் வயிறு ஆகாரமாக உட்கொள்ள வேண்டும். புகைத்தல், மதுவகைகள், குளிர்பானங்கள், காரமான உணவு, டீ, காபி போன்றவற்றை தவிர்க்க வேண்டும்.

**உடற்பயிற்சி** : நடத்தல், உட்கார்ந்து எழுதல், குனிந்து நிமிர்தல், கை, கால் விரல்களை, நீட்டி மடக்குதல், நின்ற இடத்தில் குதித்தல், ஓடுதல், நீந்துதல், மூச்சுப் பயிற்சி போன்றவைகள் சைக்கிள் ஓட்டுதல் முதலியன மூட்டுக்களை பலம் பெற செய்கின்றன. ஆகவே இதனை தினம் காலை, மாலை, சுமார் 20 நிமிடம் மெதுவாக செய்தல் நல்லது. சூரிய ஒளி தினமும் உடலில் படும்படி 10 நிமிடம் நிற்கவும். மேற்கூறிய முறைகளை பின்பற்றினால் எல்லாரக மூட்டு வலிகளில் இருந்தும் குணம் பெறலாம்.




தெய்வீக மூலிகை வைத்தியர்கள்

**Chennai Cell : 98410 45138  Vellore Cell : 98423 69696**

தலைமை முகவரி : **Dr.M.குருபரன் & Dr.M.சபாபதி, Dr.M.சிவசக்தி,** S/o **Dr.C.K.மாணிக்கவாசகம்**

P.B.No:30, No.3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A) -635 601 ✆ 04179-220469, 222769

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, (பிரின்ஸ் மேனர் பக்கத்தில்) கெல்லீஸ், சென்னை - 10

**இரு முகவரிகளிலும் ஆலோசனை நேரம் தினமும் காலை** 10 to 1, **மாலை** 5 to 7    ✆ 26424285, 26427638


**குறிப்பு :** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர், ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம் - விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல் :** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 28 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய **'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய **'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்'** என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.100/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.100/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

**7 & 8ந் தேதி** - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR). ✆ : 24011589, 42083879

**9ந் தேதி** - பெங்களூர் : காலை 11 to மாலை 1 மணி வரை, தோட்டடம் பிரபேட்வ, (கல்பனா தியேட்டர் அருகில்) செம்பேகவுடா ரோடு. ✆ : 080-2266374, 2873013

**20 & 21ந் தேதி** - புதுடெல்லி : காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 25717126, 25723651

"அப்போது எனக்கு ரயில்வேயில் வேலை. காலையில் ஆபீசுக்குப் போனால்,



'நான் உண்டு. என் வேலை உண்டு' என்று இருப்பேன். வேலை பார்த்தாலும் பார்க்கா விட்டாலும் தட்டிக் கேட்க ஆள் இல்லை. முதல் தேதியானால், சம்பளம் வந்துவிடும். ஒண்டிக் கட்டை. வாழ்க்கைச் சக்கரம் ஏதோ உருண்டோடிக் கொண்டிருந்தது.

ஒரு நாள், எனக்குள்ளே ஏதோ ஒரு வெறி! ஆபீசின் பல்வேறு பிரிவுகளுக்கும் போய், பலரிடமும், இங்கே பாட்டு, நாடகம் போன்ற விஷயங்களை ஊக்குவிக்கும் விதமாய் "கலாசாரப் பிரிவு" இயங்கி வருகிறதா? என்று கேட்டேன். பலருக்கும் எதுவும் தெரிந்திருக்க வில்லை. கடைசியாய் "ம.ரா." என்று ஒருவர், நாடகங்களை எழுதி, இயக்கி வருவதாக வும், அந்த நாடகத்தில் ரயில்வேயில் வேலை பார்க்கிறவர்கள் நடிப்பதாகவும் எனக்குத் தெரியவந்தது. அந்த ம.ரா. என்பவரைப் போய்ப் பார்த்தேன்.

ஒல்லியான உடம்பு கொண்ட நான், அவர் முன்னால்போய் நின்றேனே யொழிய நான் அவர் கண்ணுக்குத் தென்படவே இல்லை. மெதுவாகச் செருமி, ஒரு வழியாய் அவருடைய கவனத்தை நான் ஈர்க்க, "என்னய்யா வேணும்?" என்று கேட்டார்.

"நீங்க நாடகம் போடறீங்களாமே! அதுல நடிக்கணும்னு விரும்பறேன்" என்றேன்.

"இந்த உடம்பை வெச்சுக்கிட்டு நடிக்க வந்துட்டியா? இந்தக் காலத்துல யார் யாருக்கு நடிக்க ஆசை வரணும்னு விவஸ் தையே இல்லாமப் போயிடுச் சுப்பா!" என்றார் இடக்கான குரலில்.

அவர் சொன்னதற்காக நான் கவலைப்படவில்லை. "சார்! சார்! எனக்கு நடிக்கணும்னு ரொம்ப ஆசையா இருக்கு. உங்க நாடகத்துல ஏதாவது ஒரு சின்ன ரோல் கொடுத்தீங்கன்னாகூடப் போதும். நான் சந்தோஷமா ஏத்துக்குவேன்" என்று கெஞ்சும் குரலில் கேட்டேன்.

"நடிச்ச அனுபவம் ஏதாவது இருக்கா?" இது அவரது அடுத்த கேள்வி.

"இல்லை சார்! எனக்கு நடிப்புன்னா என்னன்னு தெரியாது சார்! ஆனா ஒரு சின்ன சான்ஸ் கொடுத்தீங் கன்னா, அதுல என் திறமையைக் காட்ட முடியும்னு தன்னம்பிக்கை இருக்கு சார்!"

"உனக்கு இருக்கு தன்னம்பிக்கை! ஆனா எனக்கு உன்மேல நம்பிக்கை வரலையே! மேடையில, வேகமா படுதா அசைஞ்சாக் கூட விழுந்துருவே போல இருக்கே!"

"அப்படியெல்லாம் சொல்லிடாதீங்க சார்! ஒரு சின்ன ரோல் குடுங்க சார்! ப்ளீஸ்!"

அடுத்த சில நிமிடங்களுக்கு, அவர் ஒன்றும் பேசாமல், ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தார். சட்டென்று "ம்... ஒரு சின்ன ரோல் இருக்கு! வயித்து வலிக்காரனா நடிக்கணும்."

"சரி சார்!"

"சின்ன ரோல்தானேன்னு நினைக்கக் கூடாது, சின்சியரா இருக்கணும். ரிகர்சலுக் கெலாம் தவறாம வந்துடணும்" என்றார்.

"சின்னரோலா இருந்தால் என்ன சார்! அதுல கூட என் திறமையைக் காட்ட முடியும்! ரொம்ப தேங்ஸ்!"

"நாளையிலேயிருந்து ரிகர்சல்! கரெக்டா

✓நாகேஷ்




# சிரித்து வாழ வேண்டும்

"பல்லாங்குழி வாழ்க்கையில் விழுந்து எழுந்த என்
நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறேன்"

நேரத்துக்கு வந்திடணும்"

எனக்கு சந்தோஷமான சந்தோஷம்! நாமும் மேடை ஏறப் போகிறோம் என்பதை என்னால் நம்பக் கூட முடியவில்லை.

மறுநாள் ஆபீஸ் முடிந்து நேரே நாடக ஒத்திகை நடக்கும் இடத்துக்குப் போனேன். "இப்படி உட்கார்! உன் சீன் வரும்போது சொல்லறேன்" டைரக்டர் சொல்லிவிட்டார்.

ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டு, ஒத்திகையைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். அடுத்த சீனில் கூப்பிடுவாரோ என்று ஒவ்வொரு காட்சியாக எதிர்பார்த்துக் காத்திருக்க, ஏறத்தாழ நாடகம் முடியப் போகிற கட்டத்தில், "ம்.. வா!" என்று கூப்பிட்டார் டைரக்டர்.

"காட்சியில டாக்டர் அம்மா உட்கார்ந்திருப்பாங்க! அவங்க ஒரு வயித்து வலி நோயாளியைப் பார்த்துக்கிட்டு இருக்கும் சமயம், ஹீரோ போய் அவங்களைப் பார்த்துப் பேசுகிறாற்போல சீன். நீதான் அந்த வயித்துவலி நோயாளி! உனக்கு பெரிசா வசனமெல்லாம் கிடையாது! டாக்டர் அம்மா, அடுத்த பேஷண்ட்டை வரச் சொன்னதும், நீங்க போறீங்க! என்ன பிரச்னைன்னு டாக்டர் கேட்க, நீங்க, "வயித்துவலி தாங்க முடியலையே!"ன்னு சொல்லணும். அவங்க மருந்து எழுதிக் கொடுத்ததும், நீங்க சீட்டை வாங்கிக்கிட்டு, வந்திடணும்! இதுதான் சீன்! ஒழுங்கா நடிக்கணும்" என்று காட்சியை விளக்கினார் டைரக்டர்.



நானும், ஏதோ இந்த மட்டுக்கும் ஒரு சிறிய ரோலாவது கிடைத்ததே என்று திருப்திப்பட்டேன்.

ஒருநாள் விடாமல் ஒத்திகைக்குப் போவேன். பதினேழாவது சீனில்தான் எனக்கு வேலை என்பதால், அதுவரை பொறுமையாகக் காத்திருப்பேன். சலிப்பாய் ஏதாவது சொல்லி, அது டைரக்டர் காதுக்கு எட்டினால், இந்த சான்ஸும் போய்விடுமே! என்கிற பயம் வேறு!

சுமார் ஒன்றரை மாத காலம் ஒத்திகை முடிந்து, நாடகத்தின் அரங்கேற்றத்துக்காக தேதி குறிக்கப்பட்டது. மயிலாப்பூர் கோகலே ஹாலில் நாடகம் நடத்த ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

முதல் தடவையாக மேடை ஏறப் போகிறோம் என்கிற சந்தோஷம்; ஒழுங்காக நடிக்க வேண்டுமே என்கிற பயம். இப்படி ஒரு கலவையான உணர்வுடன் மேடையின் பக்கவாட்டில், நான் நடிக்க வேண்டிய காட்சிக்காகக் காத்துக் கொண்டிருந்தேன்.

"அடுத்த பேஷண்ட்" என்று டாக்டர் சொல்ல, காட்சி ஆரம்பித்தது. "சட்டென்று உள்ளே போ!" என்று என்னை இலேசாகத் தள்ளினார் டைரக்டர்.

"டாக்டர் கூப்பிட்டவுடன் உள்ளே போவதற்கு நான் என்ன கம்பவுண்டரா சார்! பேஷண்ட்! அதுவும் வயிற்று வலியால் துடிக்கிற பேஷண்ட்! எப்படி என்னால், கிடுகிடுவென்று நடந்து போக முடியும்?" என்று இலேசான குரலில் ஆனால் அழுத்தமாக பதில் சொல்லிவிட்டு, "டாக்டர்!" என்று வீரிட்டு அலறியபடி மேடைக்குள் நுழைந்தேன்.

திடீரென்று இப்படி ஒரு வீரிடும் குரலை சற்றும் எதிர்பார்க்காத பார்வையாளர்கள், சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தனர். நிஜமாகவே வயிற்று வலியால் துடிக்கிற நோயாளி போல உடலை வளைத்து, நெளித்து கைகளால் வயிற்றைப் பிடித்துக் கொண்டே நடந்து, டாக்டருக்குப் பக்கத்தில் போடப்பட்டிருந்த ஸ்டூலில் போய் ஒருவழியாக உட்கார்ந்து கொண்டேன்.

"என்ன உடம்புக்கு?" என்று டாக்டர் கேட்க, நான் அதை சட்டையே பண்ணாமல், வயிற்றைப் பிடித்துக் கொண்டு 'அம்மா'

என்று துடித்தேன். என் கையில் ஒரு சீட்டு இருந்தது. அதை டாக்டரிடம் நீட்டினேன். அதை அவர் வாங்குவதற்குத் தன் கையைக் கொண்டு வந்தபோது, சட்டென்று என் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கி, 'ம்மாஆஆஆ..' என்றேன். மறுபடி சீட்டைக் கொடுக்க கையை நீட்டினேன். டாக்டர் அதை வாங்க கையை நீட்டியபோது, என் கையை பின்னால் இழுத்துக் கொண்டு "அம்ம்ம்ம்மா!" என்று கத்தினேன்.

ஒன்றரை நிமிடங்களுக்கு விதம் விதமான ஏற்ற இறக்கங்களைக் குரலில் கொண்டு வந்து 'அம்மா' என்று அலறி; துடித்து கதறி "யாரடா இவன்! திடீரென்று வந்து இப்படி அமர்க்களப்படுத்துகிறானே!'' என்று பார்வையாளர்களுக்கெல்லாம் அதிர்ச்சி கலந்த ஆச்சரியம்! கைத்தட்டலில் அரங்கம் அதிர்ந்தது.

முதல் வரிசையில் அமர்ந்து, நாடகம் பார்த்துக் கொண்டிருந்த செக்கச் சிவந்த மனிதர், கைதட்டி என் நடிப்பை ரொம்பவும் ரசித்ததையும் நான் கவனித்தேன்.

'அட! நம்மகிட்டேயும் விஷயம் இருக்கு போலிருக்கு! இத்தனை ஜனங்களும் எப்படி கைத்தட்டி ரசிக்கிறாங்க!' என்ற சந்தோஷம் ஒரு பக்கம் என்றாலும், "நான் சொன்னதைச் செய்யாம, நீ பாட்டுக்கு அதிகப்பிரசங்கித்தனமாக என்னென்னவோ பண்ணிட்டியே!" என்று டைரக்டர் கோபித்துக் கொள்ளுவாரோ என்ற பயம் இன்னொரு பக்கம்.

நான் சீனை முடித்துவிட்டு, விண்ணதிரும் கரகோஷங்களுக்கு இடையில், வந்தபோது, "அட! போனாப் போகுதுன்னு ஒரு சின்ன ரோல் கொடுத்தா, அதுலகூட என்னமாப் பிச்சு உதறிட்டே!'' என்று என்னைக் கட்டிப் பிடித்துக் கொண்டார் டைரக்டர்.

நாடகம் முடிந்தவுடன், மேடைக்கு அழைத்து வரப்பட்டார், முன் வரிசையில் அமர்ந்து நாடகம் பார்த்த சிவந்த மனிதர். அவர்தான் நாடகத்துக்குத் தலைமை விருந்தினர்.

மைக்கைப் பிடித்த அவர், "நாடகம் நன்றாக இருந்தது. ஒரே ஒரு சீனில் வந்தாலும் அபாரமாய் நடித்து, அனைவரையும் கவர்ந்து விட்டார் ஒருவர்! தீக்குச்சி போன்ற ஒல்லியான உருவில் வயிற்றுவலிக்காரராக வந்தாரே, அவரைத்தான் சொல்கிறேன்!" என்று சொல்லிவிட்டு, தன் பக்கத்தில் அமர்ந்திருந்த டைரக்டரிடம் "அவர் பெயர் என்ன?" என்று கேட்க, டைரக்டர், "நாகேஸ்வரன்!" என்று சொல்ல, "ம்ம். நாகேஸ்வரன் என்ற பெயர் கொண்ட அவருக்கு நடிப்புக்கான முதல் பரிசைக் கொடுக்கிறேன்!" என்று சொன்னபோது, என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை! வானில் மிதப்பது போன்ற உணர்வுடன் நடந்து சென்று, அவர் கொடுத்த முதல் பரிசுக்குரிய கோப்பையை வாங்கிக் கொண்டேன்.

மேக் அப் போட்டு மேடை ஏறிய அந்த முதல் நாளன்று நாகேஸ்வரன் என்கிற இளைஞனுக்குக் கிடைத்த கைத்தட்டலும் பரிசும், பாராட்டும்தான், நாகேஷ் என்கிற நடிகர் உருவானதற்குப் பிள்ளையார் சுழி!

அன்று என்னைப் பாராட்டி, கோப்பையைப் பரிசளித்த செக்கச் சிவந்த முதல் வரிசை சிறப்பு விருந்தினர் யார் தெரியுமா?

அடுத்த வாரம் வரை சஸ்பென்ஸ்!

(சிரிப்பு தொடரும்)

படங்கள் : **யோகா**



"நாடெங்கிலும் ஆறு, குளம், ஏரி இவற்றை வெட்டியதற்காக மக்கள் என்னைப் பாராட்டி பேசுகிறார்களா, அமைச்சரே?"

''ஆம் மன்னா! அதோடு, இவற்றை வெட்டுவதற்காக டெண்டர் எடுத்த காண்டிராக்டர்கள், மன்னருக்கு எவ்வளவு 'வெட்டி யிருப்பார்கள்!' என்றும் பேசிக் கொள்கிறார்கள்!"

- ரகோத்தமன்

# மூட்டு வலி! மூட்டு வலி! மூட்டு வலி!

பல வருட வேதனை
சில நாட்களில் பக்க
விளைவுகள் இல்லாத
முழுமையான ஆற்றல்

அசமந்த ஓமம்
(Celery Seeds)
ஆஸ்திரேலியாவின்
விஞ்ஞானப் புரட்சி
இப்பொழுது இந்தியக்
கூட்டு முயற்சி



Mrs. Akilamani
Old No.53/4, New No.111,
T.T.K.Road, Alwarpet,
Chennai - 600 018.

# ஆர்தோக்யூர்™






Product of
**NATURE REMEDIES (P) LIMITED**
CHENNAI-600 083

MARKETED BY:




CHENNAI-600083
PH: 044 2489 3013
044 2471 1719

*Super stockist for Karnataka:
**ARIES MARKETING**, Bangalore - 560010.
Ph: 3526356, Mobile: 9844152615.

இப்பொழுது தமிழகம் மற்றும்
*கர்நாடகம் எங்கும் கிடைக்கும்

## STOCKISTS

| | | |
|---|---|---|
| Chinmaya Nagar | Vasantha Enterprises | 24795251 |
| Sowcarpet | Srinath Medical Agencies | 25352799 |
| Annanagar | Perfect Medical Enterprises | 26150253 |
| Teynampet | Prisam Pharmaceuticals | 24338456 |
| Mylapore | S.V.S.Agencies | 24941057 |
| Perambur | Kumaran Pharma Agencies | 26704285 |
| Tiruvottiyur | Kumaran Agencies | 25734336 |
| Tambaram(W) | Sri Saravana Pharma | 22263890 |
| Nanganallur | Sunmoon Enterprises | 22310186 |
| Pallavaram | Ganesh Agencies | 22402189 |
| Pudukkottai | A.V.Medical Agencies | 220181 |
| Dindigul | Alagappa Agencies | 2433914 |
| Palani | Best Medical Agencies | 245049 |
| Mayiladuthurai | Chellas Enterprises | 243272 |
| Madurai | Dhanalakshmi & company | 2621421 |
| | Sri Pushpa Agencies | 2630371 |
| Nagapattinam | Eagammal Agencies | 220983 |
| Krishnagiri | Kuttiappa Agencies | 231211 |
| Tirupur | Kumaran Pharma | 2427193 |
| Kanchipuram | Kanagavalli Pharma | 220326 |
| Karaikal | Maragatham Medicals | 223079 |
| Coimbatore | M.S.Agencies | 2491564 |
| | Selva Rathna Agencies | 2397085 |
| Thiruvallur | Medicare Agencies | 264997 |
| Arakonam | Murugan Pharma | 224225 |
| Tiruvannamalai | Mohana Agencies | 537489 |

| | | |
|---|---|---|
| Tiruvarur | Maharaja Traders | 222894 |
| Pollachi | Pharmaceutical Services | 220435 |
| Pondicherry | Pharm House | 2212001 |
| Cuddalore | Arcot Agencies | 230592 |
| Tindivanam | P.R.R.Pharma | 224313 |
| Karur | Showraa Agencies | 236573 |
| Thanjavur | Sidharth Pharma | 224024 |
| Vandavasi | Srinivasa Medicals | 226135 |
| Chengalpattu | State Pharma Distributors | 222159 |
| Kumbakonam | Sri Bargavi Agencies | 2426426 |
| Ranipet | Sri Rajeswari Pharma | 222788 |
| Villupuram | Saraswathi Agencies | 224224 |
| Tiruppattur | Srinivasa Pharma | 227498 |
| Tirunelveli | SPM.Medical mart | 2333801 |
| Erode | Shri Ramana Medical Agencies | 2253421 |
| | ESS Jay Agencies | 2268855 |
| Chidambaram | Salamia Distributors | 220871 |
| Arni | Sri Guna & Company | 226470 |
| Nagercoil | Saravana Pharmaceutical | 232341 |
| Trichy | Uthra Marketing | 2760542 |
| | V.R.Agencies | 2740933 |
| Salem | Vinayaga Agencies | 2266098 |
| | Shri Ramana Medical Agencies | 2336365 |

# சிவகாமியின் சபதம்

## பூர்வ கதை

மகேந்திர வர்ம சக்கரவர்த்தியின் அரசாட்சியில் பல்லவ சாம்ராஜ்யம் உன்னத நிலைமையை அடைகிறது. பொருட் செல்வத்திலும் கலைச் செல்வத்திலும் பல்லவ ராஜ்யத்துக்கு இணையில்லை என்ற புகழ் பரவுகிறது. காஞ்சியின் சிறப்பைப் பற்றிக் கவி பாரவியின் வர்ணனையைக் கேட்ட வாதாபி சக்கரவர்த்தியான புலிகேசி பொறாமை கொள்கிறான். காஞ்சியை வென்று தன் வராகக் கொடியை அதன் மீது நாட்டுவதென்று தீர்மானிக்கிறான்.

புலிகேசி பல மாதங்கள் காஞ்சியை முற்றுகையிட்டும் அதைப் பணியவைக்க முடியவில்லை. மகேந்திர பல்லவருடைய முன்னேற்பாட்டினால் முற்றுகையிட்ட வாதாபிப் படைகளுக்குப் போதிய உணவு கிடைக்காமற் போகிறது. ஆகவே, காஞ்சி முற்றுகையை நிறுத்தி, மகேந்திர பல்லவருடன் சமாதானம் செய்து கொள்வதென்று புலிகேசி தீர்மானிக்கிறான். பெருங்குணம் படைத்த மகேந்திரவர்மர் புலிகேசியின் விருப்பத்தை அங்கீகரித்து, தம் அழகிய தலைநகரை வந்து பார்வையிடும்படி அழைக்கிறார்.

புலிகேசிக்கு வரவேற்பு அளிப்பதை விரும்பாத குமார சக்கரவர்த்தி மாமல்லர், பாண்டியன் படையோடு சண்டையிடத் தெற்கே போய் விடுகிறார். மகேந்திர வர்மர் புலிகேசிக்குப் பிரமாத வரவேற்பு அளித்ததுடன், பல்லவ ராஜ்யத்திலேயே நடனக் கலையில் புகழ்பெற்றவளான ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமியைப் புலிகேசியின் முன்னிலையில் நாட்டியமாட ஏற்பாடு செய்கிறார்.

**அமரர் கல்கி**

மாமல்ல நரசிம்மனைக் காதலித்த சிவகாமி, தன் காதலன் காஞ்சியில் இல்லையென்பதை அறிகிறாள். அவர் தன்னைத் தேடிக் கொண்டு தான் தங்கியிருந்த கிராமத்துக்குப் போகக் கூடும் என்று எண்ணி, இரகசிய சுரங்க வழியாகக் காஞ்சியை விட்டு வெளியேறு கிறாள்.

இதற்குள், புலிகேசி காஞ்சியிலிருந்து வாதாபியை நோக்கிக் கிளம்புகிறான். காஞ்சி யின் செல்வ வளத்தைக் கண்டு ஏற்பட்ட பொறாமையானது அவனுக்கு அளவில்லாத ஆத்திரத்தை ஊட்டுகின்றது. போகும் வழி யிலுள்ள பல்லவ நாட்டுக் கிராமங்களைக் கொளுத்தும்படியும் ஜனங்களைச் சிறைப் பிடிக்கும்படியும் உத்தரவிடுகிறான். எதிர் பாராதவிதமாக, கோட்டையிலிருந்து சுரங்க வழியாக வெளிப்பட்ட சிவகாமி வாதாபிப் படைகளின் கையில் சிக்குகிறாள்.

வாதாபி திரும்பிய புலிகேசி, மகேந்திர னைத் தான் போரில் புறங்கண்டு திரும்பிய தாகப் பறைசாற்றுகிறான். தமிழகத்திலிருந்து சிறைப்பிடித்து வந்தவர்களைச் சாட்டையால் அடித்துத் துன்புறுத்தியதுமின்றி, சிவகாமியை நாற்சந்தியில் நாட்டியமாடச் செய்து அவமானப் படுத்துகிறான்.

மாமல்லரும் அவருடைய தோழன் பரஞ் சோதியும் வாதாபிக்கு மாறுவேடம் பூண்டு வருகிறார்கள். சிவகாமியை இரகசியமாகச் சந்தித்துத் தம்முடன் வரும்படி மாமல்லர் அழைக்கிறார். அப்பொழுது சிவகாமி தான் செய்துள்ள சபதத்தை வெளியிடுகிறாள். வாதாபி நகரம் பற்றி எரிந்து சுடுகாடாகும் காட்சியைக் கண்ட பிறகுதான் வாதாபியை விட்டுக் கிளம்புவேன் என்று உறுதியாகச் சொல்கிறாள். மாமல்லர் அவளது சபதத்தை நிறைவேற்றுவதாக வாக்களித்து விட்டுத் திரும்புகிறார்.

மகேந்திரர் இறந்து மாமல்லர் பட்டத்துக்கு வருகிறார். இறக்கும் தறுவாயில் தந்தை இட்ட கட்டளைப்படி மாமல்லர் பாண்டியகுமாரியை மணந்து கொள்கிறார். இரண்டு குழந்தை களையும் அடைகிறார்.

வாதாபி படையெடுப்புக்கு வேண்டிய ஏற்பாடுகள் பூர்த்தியாவதற்குள் ஒன்பது வருஷங்கள் சென்று விடுகின்றன.

வாதாபிப் போருக்குப் பெரும்படை கிளம்பு கிறது. மாமல்லருடன் செல்லும் பல சிற்றரசர்களோடு சோழ குலத்தின் பிரதிநிதியாக விளங்கும் செம்பி யன்வளவனும் புறப்படுகிறான். தனது புதல்வி மங்கையர்க்கரசியைக் காலஞ் சென்ற மகேந்திர பல்லவரின் மனைவி புவன மகா தேவியிடம் ஒப்படைத்து விட்டுச் செல்லு கிறான்.

மாமல்லரின் பட்டமகிஷியான வானமாதேவி யின் தம்பி நெடுமாறன், மாமல்லரோடு வாதாபி செல்வதற்காகப் படையுடன் வந்தவன், தனக்கு தேக அசௌக்கியம் என்று சொல்லி வராக நதிக்கரையிலேயே தங்கி விடுகிறான். தேக அசௌக்கியம் குணமானதும் வந்து சேர்ந்து கொள்வதாகச் சேதி அனுப்புகிறான். சமணர் களுடன் அவனுக்கிருந்த தொடர்பு காரண மாக, அவனால் காஞ்சிக்கு ஏதேனும் ஆபத்து வரலாமென்றும் அப்படி வந்தால் அதைத் தடுத்து நிறுத்துமாறும் பொறுப்பைத் தமது பட்டமகிஷியிடம் ஒப்படைக்கிறார் மாமல்லர். வானமாதேவியும் அப்படியொரு நிலை ஏற் பட்டால், தானே தனது தம்பியைக் கத்தியால் குத்தியோ அல்லது விஷம் கொடுத்தோ கொன்று விடுவதாக உறுதியளித்து மாமல்லரை வழியனுப்புகிறாள்.

சமணர்கள் தங்கள் சூழ்ச்சியால் மாமல் லருக்கு எதிராக நெடுமாறனைத் திசை திருப்புவதையறிந்த ஒற்றர் தலைவன் சத்ருக்னன், வானமாதேவியிடம் வந்து சேதி சொல்லுகிறான். மாமல்லருக்குக் கொடுத்த வாக்குப்படி, நெடுமாறனைக் கொல்வதற்குப் புவனமகா தேவியிடம் அனுமதி கேட்கிறாள் வானமாதேவி.

அவர்களின் சம்பாஷணையை ஒற்றுக் கேட்ட மங்கையர்க்கரசி, தனது உள்ளங் கவர்ந்த நெடுமாறனைச் சந்தித்து, அவனுக்கு வானமா தேவியால் ஏற்படப் போகும் ஆபத்தை எடுத்துக் கூறி, உடனடியாக அந்த அரண் மனையை விட்டுப் போய் விடும்படி எச்சரிக் கிறாள்.

# தமக்கையும் தம்பியும்



ன்று சூரியாஸ்தமனம் ஆன பிறகு வானமாதேவி தன்னுடைய விலை மதிப்பில்லா ஆபரணங்கள் பத்திரமாக வைக்கப்பட்டிருந்த அறையில் வெள்ளிப் பெட்டிகளையும் தங்கப் பெட்டிகளையும் திறந்து எதையோ தேடிக் கொண்டிருந்தாள்.

திடீரென்று, "அக்கா! என்ன தேடுகிறாய்?" என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அவளுக்குத் தெரியாமல், ஓசை உண்டாக்காமல், அந்த அறைக்குள் நெடுமாறன் பிரவேசித்திருந்தான்.

அவனைக் கண்டதும் வானமாதேவியின் திகைப்பு அதிகமாயிற்று.

"அக்கா! என்ன தேடுகிறாய்?" என்று நெடுமாறன் மறுபடியும் கேட்டுவிட்டு ஏறிட்டுப் பார்த்தான்.

மறுமொழி சொல்ல முடியாமல் வானமாதேவி கொஞ்சம் தடுமாறிவிட்டு, "தம்பி! நீ எப்போது இங்கு வந்தாய்?" என்றாள்.

"நான் வந்து சிறிது நேரமாயிற்று. ஒருவேளை இந்தக் கத்தியைத்தான் தேடுகிறாயோ என்று கேட்பதற்காக வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே பின்புறமாக மறைத்து வைத்துக் கொண்டிருந்த ஒரு சிறு கத்தியை நெடுமாறன் நீட்டினான்.

வானமாதேவி அந்தக் கத்தியை வெறித்துப் பார்த்தவாறு நின்றாள். அவளுடைய முகத்தில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் துளித்து நின்றன.

"அக்கா! என்னைக் கத்தியால் குத்திக் கொல்வதென்று முடிவாகத் தீர்மானித்திருந்தாயானால், இதை வாங்கிக் கொண்டு இப்போதே அந்தக் காரியத்தைச் செய்துவிடு! வீரத்துக்குப் பெயர்போன பாண்டிய குலத்திலே பிறந்து, பல்லவ குலத்திலே வாழ்க்கைப்பட்ட வானமாதேவி தன் அருமைச் சகோதரனைத் தூங்கும்போது கத்தியால் குத்திக் கொல்லுவது அழகாயிராது. பிறந்த குலம், புகுந்த குலம் இரண்டுக்கும் அதனால் இழுக்கு உண்டாகும்!"

பரிகாசமும் பரிதாபமும் கலந்த குரலில் நெடுமாறன் கூறிய மேற்படி வார்த்தைகளைக் கேட்ட வானமாதேவியின் உள்ளம் என்ன பாடுபட்டது என்பதைச் சொல்லி முடியாது. ஒரு பக்கம் அவமானமும் ஆத்திரமும் அவளைப் பிடுங்கித் தின்றன; மற்றொரு பக்கம் கோபமும் ஆத்திரமும் பொங்கின.

எவ்வளவோ முயன்றும், அவளுடைய வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை. நெடுமாறன் மேலும் கூறினான்:

"அல்லது ஒருவேளை விஷங்கொடுத்து என்னைக் கொல்லுவதாகத் தீர்மானித்திருந்தாயானால், கொடுக்கிற விஷம் நிச்சயமாய்க் கொல்லக்கூடியதுதானா என்று தெரிந்து கொண்டு கொடு. நீ எவ்வளவோ சிரமப்பட்டு வாங்கி வைத்திருந்த விஷத்தை அரண்மனைத் தோட்டத்தில் உள்ள மான்குட்டிக்குக் கொடுத்துப் பார்த்தேன். அது உயிரை விடும் வழியாகக் காணப்படவில்லை. முன்னை விட அதிகமாகவே துள்ளி விளையாடுகிறது!"

நெடுமாறனுடைய வார்த்தை ஒவ்வொன்றும் விஷந்தோய்ந்த அம்பைப் போல் வானமாதேவியின் நெஞ்சில் பாய்ந்து அவளைக் கொல்லாமல் கொன்றது.

அந்த வேதனையை மேலும் பொறுக்க முடியாதவளாய், தயங்கித் தயங்கி, "தம்பி! இதெல்லாம் என்ன பேச்சு? நானாவது உன்னைக் கொல்லவாவது?.." என்றாள்

வானமாதேவி.

"அக்கா! பல்லவ குலத்தில் வாழ்க்கைப்பட்டதற்குப் பொய்யும் புனைசுருட்டும் கற்றுக் கொண்டு விட்டாயா? நேற்றிரவு புவன மகாதேவியிடம் யோசனை கேட்கப் போனாயே? அவர் இந்த யோசனைதான் சொல்லிக் கொடுத்தாரா?" என்றான் நெடுமாறன்.





வானமாதேவிக்கு அவளுடைய ஆத்திரத்தையெல்லாம் பிரயோகிக்க இப்போது ஒரு வழி கிடைத்தது.

கடுமை நிறைந்த குரலில், ''நான் நினைத்தபடியே ஆயிற்று. இதையெல்லாம் உனக்குச் சொன்னது அந்தச் சோழ நாட்டுப் பெண் தானே?" என்றாள்.

அந்தப் பேதைப் பெண் மீது உன் ஆத்திரத்தைக் காட்ட வேண்டாம், அக்கா! அவள் அதற்குப் பாத்திரமில்லாதவள். சற்று முன்னால் அவள் என்னிடம் இதைப் பற்றிப் பிரஸ்தாபித்தது உண்மைதான். ஆனால் இந்தக் கத்தி காணாமற்போனது இன்றைக்கல்லவே? இரண்டு நாளாக இதை நீ தேடுகிறாய் அல்லவா?"

வானமாதேவி மீண்டும் சிறிது நேரம் திகைத்து நின்றுவிட்டு, ''சமண சித்தர்களால் அறிய முடியாதது ஒன்றுமில்லை போலிருக்கிறது!" என்றாள்.

''ஆனால்,

உன்னுடைய மனத்திலுள்ளதை அறிவதற்குச் சித்தர்களின் சக்தி தேவையில்லை, அக்கா! பாவம்! நீ கள்ளங் கபடு அறியாதவள். வள்ளுவர் பெருமான்,

"அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்"

என்று சொன்னது உன்னைப் பற்றியே சொன்னதாகத் தோன்றுகிறது. உன் மனத்திலுள்ள எண்ணத்தை உன்னுடைய முகமே எனக்குக் காட்டிவிட்டது. மேலும் நான் கண் குருடாகவும், காது செவிடாகவும் பிறக்கவில்லையே? இந்த அரண்மனைக்கு வந்ததிலிருந்து என் கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொண்டுதானிருக்கிறேன். உன் இடுப்பிலே இந்தக் கத்தியை நீ சதா செருகி வைத்துக் கொண்டிருப்பதையும் பார்த்தேன். இதை நீ ஒரு தடவை ஞாபக மறதியாகத் தரையில் வைத்தாய். உனக்குத் தெரியாமல் இதை எடுத்துக் கொள்வதில் எனக்கு எவ்விதச் சிரமும் ஏற்படவில்லை..."

"ஆகா! எப்பேர்ப்பட்ட அசடு நான்?" என்று முணுமுணுத்தாள் வானமாதேவி.

"நீ அசடு இல்லை, அக்கா! ஆனால் இந்தக் காரியம் செய்வதற்கு உன் மனம் இடம் கொடுக்கவில்லை. அதனால்தான் மனத்திலுள்ளதை மறைக்கத் தெரியாமல் பைத்தியம் பிடித்தவள் போல் அலைந்தாய்!... ஆஹா! பத்து வருஷத்துக்கு முன்பு நீயும் நானும் மதுரை அரண்மனையில் இருந்தபோது, என் பேரில் நீ எவ்வளவு பிரியமாயிருந்தாய்? அந்த நாளை நினைத்தாலே எனக்கு மெய்சிலிர்க்கிறது. நான் விவரமறியாக் குழந்தையாயிருந்தபோதே, என் அன்னை இறந்து போனாள். பிறகு அரண்மனையில் சின்னராணி வைத்ததே சட்டமாயிருந்தது. தாயின் அன்பை அறியாத எனக்கு நீயே தமக்கையும் தாயுமாக இருந்து வந்தாய். வெகு காலம் வரையில் நீ என் சொந்தத் தமக்கையென்றே எண்ணிக் கொண்டிருந்தேன். உன் கலியாணத்தின் போதுதான், நீ என் மாற்றாந்தாயின் மகள் என்று அறிந்து கொண்டேன்."

வானமாதேவியின் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் பொழியலாயிற்று.

"நெடுமாறா! அதையெல்லாம் இப்போது எதற்காக நினைவூட்டுகிறாய்?" என்று விம்மலுக்கிடையே வானமாதேவி கேட்டாள்.

"அவ்வளவு அன்பாக என்னிடம் இருந்தாயே? அப்படிப்பட்டவள் எவ்வாறு இவ்வளவு கொடூர சித்தமுடையவள் ஆனாய்? என்னைக் கத்தியால் குத்தியோ விஷங் கொடுத்தோ கொல்லுவதற்கு எவ்வாறு துணிந்தாய்?..." என்றான் நெடுமாறன்.

"தம்பி! என்னை மன்னித்துவிடு. அவர் யுத்தத்துக்குப் புறப்படும்போது இவ்விடத்துப் பொறுப்பை என்னிடம் ஒப்புவித்து விட்டுச் சென்றார். உன்னால் ஏதாவது இங்கே அபாயம் நேரலாம் என்று எச்சரித்தார். அப்படி நேராமல் பார்த்துக் கொள்வதாக நான் வாக்குக் கொடுத்தேன். ஆனால் அவருக்கு வாக்குக் கொடுத்தபோது நீ இவ்விதம் சதி செய்யப் போகிறாய் என்று கனவிலும் கருதவில்லை!" என்று சொல்லி விட்டு மறுபடியும் கண்ணீர்விடத் தொடங்கினாள்.

"அக்கா! நீ கண்ணீர் விடுவதைப் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. நான் என்ன சதி செய்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. நீ உன் பதிக்கு என்ன வாக்குக் கொடுத்தாய் என்பதையும் நான் அறியேன். ஒருவேளை என்னைக் கத்தியால் குத்திக் கொன்று விடுவதாக வாக்குக் கொடுத்திருந்தாயானால், அதைப் பற்றிக் கவலைப்படாதே! இதோ என் மார்பைக் காட்டச் சித்தமாயிருக்கிறேன்; உன் வாக்கை நிறைவேற்று!" என்று சொல்லிய வண்ணம் நெடுமாறன் கத்தியை வானமாதேவியின் கையில் கொடுப்பதற்காக நீட்டிக் கொண்டே, தன் மார்பையும் காட்டினான்.

"தம்பி! பெருந் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் என்னோடு ஏன் விளையாடுகிறாய்? நீ என்ன உத்தேசத்தோடு இப்போது வந்தாயோ, அதைச் சொல்லு!" என்றாள் சக்கரவர்த்தினி.

"அக்கா! நான் விளையாடவில்லை. உண்மையாகவே சொல்லுகிறேன். உன்னைப் பற்றி நினைக்க நினைக்க எனக்கு எவ்வளவோ கர்வமாயிருக்கிறது. பாண்டியர் குலத்தில் பிறந்த பெண் இவ்வளவு பதிபக்தியுடையவளாயிருப்பது மிகப் பொருத்தமானதுதான். பாண்டியர் குலதெய்வமான மீனாக்ஷி தேவி, பெற்ற தகப்பனான தக்ஷனை நிராகரித்துவிட்டுச் சிவ பெருமானே கதி என்று வந்து விடவில்லையா! பிறந்த வீட்டாரால் புருஷனுக்கு ஏதேனும் கேடு நேர்வதாயிருந்தால், புருஷனுடைய நன்மைக்கான காரியத்தைத் திடமாகச் செய்வதுதான் பாண்டியகுலப் பெண்களின் மரபு. ஆனால் என்னால் என்ன கேடு வரும் என்று நீ சந்தேகப்பட்டாய்? எந்த விதத்தில் நான் உன்னுடைய மன வெறுப்புக்குப் பாத்திரமானேன்? அதை மட்டும் சொல்லிவிட்டு இந்தக் கத்தியை என்மார்பில் பாய்ச்சி விடு!" என்றான் நெடுமாறன்.

"தம்பி என் வாயினால் அதைச் சொல்லியே தீர வேண்டுமா? உன்னோடு அழைத்து வந்திருக்கும் பாண்டிய சைனியத்தைக் கொண்டு காஞ்சி நகரையும் பல்லவ சிம்மாசனத்தையும் கைப்பற்ற வேண்டுமென்று நீ சதி செய்ய



வில்லையா?"

"இம்மாதிரி துரோக சிந்தை எனக்கு ஏற்பட்டிருப்பதாக உனக்கு ஏன் சந்தேகம் வந்தது? யார் சொன்னார்கள், அக்கா!"

"யார் சொல்லவேண்டும்! உன் முகத் தோற்றம், நடவடிக்கை, பேச்சு எல்லாம் சந்தேகத்தை உண்டாக்கின. 'வாதாபிக்குப் போவது சந்தேகம்' என்று சொன்னாய், 'இந்த அரண்மனையிலேயே அடைக்கலந் தந்தால் இங்கேயே இருந்து விடுகிறேன்' என்று கூறினாய்; எப்போது பார்த்தாலும் ஏதோ சிந்தனையில் உள்ளவன் போல் காணப்பட்டாய். இதையெல்லாம் தவிர நள்ளிரவில் சமணசித்தர் கூட்டத்துக்குப் போய் வந்தாய். சமணர்களுடைய சூழ்ச்சியில் நீ அகப்பட்டுக் கொண்ட பிறகு நான் சந்தேகப்படுவதற்கு இன்னும் என்ன வேண்டும்?"

"அக்கா! வீணாகச் சமணர்களின் மீது பழி சொல்ல வேண்டாம். அவர்கள் வருங் கால நிகழ்ச்சிகள் சிலவற்றை எனக்குக் காட்டியது உண்மையே. ஆனால், அவற்றிலிருந்து நான் முடிவு செய்தது நீ நினைத்ததற்கு நேர் மாறானது. மாமல்லச் சக்கரவர்த்தி இங்கு இல்லாத சமயம் பார்த்து அவருடைய தலை நகரையும் ராஜ்யத்தையும் அபகரித்துக் கொள்ள நான் எண்ணவில்லை. 'மாமா! மாமா!' என்று சொல்லிக் கொண்டு என்னை ஓயாமல் சுற்றித் திரியும் குழந்தை மகேந்திரனுக்குத் துரோகம் செய்யவும் நான் எண்ணவில்லை. ஆனால் இந்த அரண்மனைக்கு வந்தது முதலாக எதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேனென்றால், எனக்கு நியாயமாக உரிய பாண்டிய ராஜ்யத்தையும் துறந்து, உலக வாழ்க்கையையும் துறந்து திகம்பர சமணனாகிவிடலாமா என்றுதான்!.."

"தம்பி! இது என்ன விபரீத யோசனை?" என்று வானமாதேவி திடுக்கிட்டுக் கேட்டாள்.

"எது விபரீத யோசனை, அக்கா! ஆறறிவுள்ள மனிதர்களைப் புலிகளாகவும் ஓநாய்களாகவும் ஆக்கி, லட்சக் கணக்கான ஜனங்கள் ஒருவரையொருவர் கொன்று மடிவதற்குக் காரணமாயிருக்கும் இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்வது விபரீத யோசனையா? அல்லது புழு பூச்சிகளின் உயிருக்குக் கூட ஊறு செய்யாத ஜீவ காருண்ய மதத்தைச் சேர்ந்து கொல்லா விரதம் மேற்கொண்டு வாழ்வது விபரீத யோசனையா?"

"தம்பி! நீ மிகப்படித்தவன். உன்னோடு தத்துவ விசாரணை செய்வதற்கு வேண்டிய தகுதியற்றவள் நான். ஆயினும் நீ சமண சந்நியாசி ஆகிற யோசனை விபரீதமானதுதான். அதை நினைக்கும் போதே எனக்கு என்னவோ செய்கிறது!"

"என்னை நீ கத்தியால் குத்திக் கொன்றாலும் கொல்லுவாய். ஆனால் நான் திகம்பர சமணன் ஆவதை மட்டும் விரும்ப மாட்டாய்! போனால் போகட்டும். அந்தக் கவலை உனக்கு வேண்டாம். நான் திகம்பர சமணன் ஆகப்போவதில்லை. அந்த யோசனையை நேற்றுச் சாயங்காலத்தோடு கைவிட்டு விட்டேன்..."

"பின்னே, என்ன செய்ய உத்தேசித்

## அருள்வாக்கு

ஏதோ ஒன்று உலக மக்கள் எல்லோரையும் ஏதோ ஒரு விதத்தில் தர்மத்தின் திசையில் திருப்பிக் கொண்டுதான் வந்திருக்கிறது. இதனால்தான் சகல தேசங்களிலும் மனிதன் தன்னுடைய பௌதிகத்தேவைகளைப் பூர்த்தி செய்வதோடு மட்டும் நிற்காமல், வேறு சில 'விசித்திரமான' காரியங்களைச் செய்து வருகிறான். ஒருவன் சிலுவை என்று ஒன்றை வைத்துக் கொண்டு, பைபிள் சொல்கிறான். இன்னொருவன் 'நமாஸ்' செய்கிறான். வேறொருவன் விபூதியைக் குழைத்துப் பூசிக் கொள்கிறான். இன்னொருவன் நாமக் கட்டியைக் குழைத்துப் போட்டுக் கொள்கிறான். இவற்றால் நேருக்கு நேர் எந்த பௌதிகப் பலனும் தெரியா விட்டாலும் தலைமுறை தத்துவமாக இவற்றை மனித சமுதாயம் பின்பற்றி வந்திருக்கிறது. ஏன் இப்படிச் செய்திருக்கிறது?

உலக வாழ்வுக்கு மனிதன் பணமும் பொருளும் சேர்த்தான். அன்றைய தேவையோடு போதாது என்று எதிர்காலத்துக்காகவும் பொருளீட்டினான். 'எதிர்காலம்' என்கிற போது, அது எத்தனை வருஷம் என்று கேள்வி வந்தது. எப்படியிருந்தாலும் ஒருவன் ஆயிரம் பதினாயிரம் வருஷம் இருக்கப் போவதில்லை என்று தெரிந்தது. ஒரு மனுஷ்யனின் ஆயுள் உள்ளவரைக்கும், அந்த மனுஷ்யனின் சந்ததிக்கும் தேவைப்படுகிற சொத்தைத் தேடினான்.



இந்த மனுஷ்ய ஆயுள் முடிந்த பின், அவன் என்ன ஆகிறான் என்ற கேள்வி வந்தது. இந்த உடம்பு போனதோடு மனுஷ்யனும் போய் விடவில்லை என்று அந்தந்த தேசத்திலும் தோன்றிய மகான்கள் கண்டார்கள். ஆனால், இந்த உடம்புக்காகத் தேடிய பணமும் பொருளும் உடம்பு போன பின், அந்த மனுஷ்யனுக்குச் சிறிதும் பிரயோஜனம் இல்லை என்று கண்டார்கள். உடம்பு போன பின் உயிர் நல்ல கதி அடைவதற்குச் செய்ய வேண்டியது எதுவோ, அதை அந்த மகான்கள் கண்டார்கள். பல தேசங்களில் பல விதத்தில் வழி கண்டார்கள். சிலுவை, நமாஸ், விபூதி, திருமண் எல்லாம் இப்படி வந்தவையே.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

இருக்கிறாய், தம்பி!" என்று அடங்காத ஆர்வத்துடன் பல்லவ சக்கரவர்த்தினி கேட்டாள்.

"நாளைய தினம் மதுரைக்குத் திரும்பிப் போகிறேன். அக்கா! ஒரு வேளை எனக்கு அந்தச் சிரமம் கொடுக்காமல் நீ என்னைக் கொன்று விடுவதாயிருந்தால்..." என்று கூறி மீண்டும் தன் கையிலிருந்த கத்தியை நீட்டினான்.

வானமாதேவி அவன் அருகில் வந்து அந்தக் கத்தியைப் பிடுங்கித் தூர எறிந்தாள். பிறகு, நெடுமாறனுடைய இரு கரங்களையும் பிடித்துக் கொண்டு கண்களில் நீர் ததும்ப, குரல் தழதழக்க, "நெடுமாறா! இந்தப் பைத்தியக்காரியைத் தண்டித்தது போதும், இனிமேல் அந்தப் பேச்சை எடுக்காதே! உன் பேரில் சந்தேகப்பட்டது பெரிய குற்றந்தான். என்னை மன்னித்துவிடு!" என்றாள்.

"உனக்கு இவ்வளவு மனக்கலக்கத்தை அளித்ததற்காக நான் தான் உன்னிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும். என்னை மனப்பூர்வமாக மன்னித்து ஆசீர்வாதம் செய், அக்கா!" என்றான் நெடுமாறன்.

"கடவுள் அருளால் உனக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும். சீக்கிரத்தில் உனக்குத் தகுந்த பத்தினியை மணந்து கொண்டு நெடுங்காலம் பாண்டிய சிம்மாசனத்தில் வீற்றிருப்பாய்..."

"அக்கா! எனக்குத் தகுந்த பத்தினியைத் தேடிக் கொண்டு தான் நான் காஞ்சி நகருக்கு வந்தேன். அவளைப் பார்ப்பதற்காகவே இத்தனை நாளும் இங்கே தாமதித்தேன். நேற்றுச் சாயங்காலம் அவளை உன்னுடைய அரண்மனைத் தோட்டத்தில் சந்தித்துப் பேசிய பிறகுதான் என் உள்ளம் தெளிவடைந்தது. உன் ஆசீர்வாதம் பலித்து நான் பாண்டிய சிம்மாசனம் ஏறினால் அந்தப் பெண்தான் என் பட்டமகிஷியாயிருப்பாள்!" என்றான் நெடுமாறன்.

(தொடரும்)



விஜய் மாதவன் சென்னைப் பல்கலைக் கழக மாலிக்யுலர் பயாலஜி எம்.எஸ்ஸி. பட்டதாரி. கூடவே பரத நாட்டியத்தில் பதினைந்து வருடங்களாக சித்ரா விசுவேசுவரனிடம் பயிற்சி. மெலட்டூர் பாகவத மேளாவில், பதிமூன்று வருடங்களாக விஜய்தான் 'கம்ஸ சரித்திர'த்தில் கிருஷ்ணர். சித்ரா 'விசுவேசுவரனிடம் ஒரு பையன் நடனம் பயில்கிறான் என்று கேள்விப்பட்டு, மெலட்டூர் பாகவத மேளா நடத்தும் நடராஜன், பதிமூன்று வருடங்களுக்கு முன்னால் இவரைத் தேடி வந்து அழைத்துக் கொண்டு போனாராம்.

சுமித்ரா வாசுதேவ், அதே பதிமூன்று வருடங்களாக 'சங்கீத கலாநிதி' வேதவல்லியிடம் கர்நாடக இசை கற்று வருகிறார். குவீன் மேரீஸில் எம்.ஏ. சமஸ்கிருதம். (சமஸ்கிருதம், ரொம்பப் பிடிக்குமாம்.) அம்மா வீணை வாசிப்பார். சுமித்ராவும் ஆரம்பத்தில் கொஞ்சம் வீணை வாசித்துப் பார்த்துவிட்டு, பிறகு விட்டு விட்டாராம். இசை இயல்பாக வந்து சுமித்ராவிடம் இடம் பிடித்துக் கொண்டு விட்டது.

விஜய் மாதவன் இப்போது நடத்தி வரும் நாட்டியப் பள்ளியில் முப்பதுக்கு மேற்பட்ட மாணவ - மாணவிகள் பரத நாட்டியம் கற்றுக் கொள்ளுகிறார்கள். "மாலிக்யுலர் பயாலஜி என்ன ஆச்சு?" என்றால், "அதை ஒரு பக்கம் இப்போதைக்கு ஒதுக்கி வைத்திருக்கிறேன். ஆனால் ஆப்ஷன்ஸ் ஆர் ஓப்பன்!" என்கிறார்.

விஜய்க்கு சினிமா பிடிக்கும். நிறையப் படங்களுக்குப் போவார்... ஃபேவரிட் ஆக்டர் ஷாருக்கான்.

சுமித்ராவிடம், "உங்களுக்குத்தான் குரல் இவ்வளவு நன்றாக இருக்கிறதே, சினிமாவில் பாடவில்லையா?" என்று கேட்டால், "ஊஹூம். வேண்டாம் என்று எப்பவோ தீர்மானம் பண்ணிவிட்டேன்!" என்கிறார்.

சுமித்ரா, குரு வேதவல்லியைத் தவிர, எம்.எல்.வி, ஆலத்தூர் பிரதர்ஸ், செம்மங்குடி, கே.வி.என். என்று ரசிப்பார் என்றால், விஜய் ரசிப்பது டி.கே.ரங்காச்சாரி, ராமநாதபுரம் கிருஷ்ணன், சஞ்சய் சுப்பிரமணியன்.

"நீங்கள் ரெண்டு பேரும் எப்போ முதல் முதலா சந்தித்தீர்கள், சுமித்ரா?"

• சுமித்ரா வாசுதேவ்



• விஜய் மாதவனுடன் சுமித்ரா

''போஸ்ட் கிராஜுவேஷன் முடியட்டும்னுதான் வெயிட் பண்ணினோம்!'' என்றார் விஜய் மாதவன்.

இரண்டு பேர் குடும்பமும் நன்றாகப் பரிச்சயம் ஆனது அப்போது தானாம். (பின்னால் வசிக்கும் மதுரை சேஷகோபாலன் வேறு, சுமித்ராவைப் பற்றி பிரமாதமாக சர்ட்டிஃபிகேட் கொடுத்திருக்கிறார் விஜய் குடும்பத்துக்கு. பிறகென்ன?)

சுமித்ராவின் கச்சேரியைக் கேட்க விஜய் வருவதுண்டாம். அதேபோல விஜய்யின் நடன நிகழ்ச்சிகளுக்கு, ஆடிடோரியத்தில் சுமித்ரா ஆஜர். விஜய்தான் கலகலப்பான டைப் என்றால், சுமித்ராவும் டிட்டோ.

ஆகஸ்ட் 31க்குப் பிறகு, யார் பாட்டுக்கு யார் ஆடப் போகிறார் என்பதுதான் சஸ்பென்ஸ். ஆமாம், அன்றுதான் செல்வி சுமித்ராவின் கழுத்தில், செல்வன் விஜய் மூன்று முடிச்சுப் போடுகிறார்.

''டேட் எல்லாம் இப்படிக் கேக்கறீங்களே'' என்றவர், சற்றுத் தயங்கிவிட்டு, ''கி.பி. 2000ல்'' என்றார் உற்சாகமாக.

''அப்போ ஏன் இவ்வளவு தாமதமாகக் கல்யாணம்?''

''காதல் கல்யாணம்தானே?'' என்று குடைந்தால், இரண்டு பேரும் ஒரே மாதிரி அபிநயத்தில் ''இல்லேப்பா, அரேஞ்ச்ட் மேரேஜ்தான்!'' என்கிறார்கள். (நாம்ப நம்பலேப்பா!)

எனிவே, கங்கிராட்ஸ் சுமித்ரா - விஜய்!

— எஸ்.வி.என்

படங்கள் : வெங்கடேஷ்

# பாட்டுக்கு பாடும் ஆடும் மூன்று முடிச்சு!

அம்புப் படுக்கையிலே பீஷ்மர் உத்தராயணத்தை எதிர்பார்த்துப் படுத்துக் கொண்டிருக்கிறார்.

சுவச்சந்த ம்ருத்யு என்று பெயர் அவருக்கு. பீஷ்மப் பிரதிக்ஞை என்று சொல்வதுண்டு. பீஷ்ம: என்றால் பயப்படத்தகுந்தவர் என்று அர்த்தம். அவரைப் பார்த்தாலே நடுங்கும். அப்படிப்பட்ட பயப்படத் தகுந்த பிரதிக்ஞை பண்ணியவர் அவர்.

## பாகம்-6

ராமாயணத்திலே பரதன் பிரதிக்ஞை பண்ணினார். பாரதத்திலே பீஷ்மர் பிரதிக்ஞை பண்ணினார். அவர் அப்பாவுக்காக அவர் 'கல்யாணமே பண்ணிக்க மாட்டேன்' என்று இருந்தார்.

# குறையொன்றுமில்லை

சந்தனு மகாராஜா இருக்கிறாரே, அவருக்கு சாந்தனவர் என்று பெயர். அந்த சந்தனு மகாராஜா தன் பிள்ளைக்கு வரம் கொடுத்தார் – நீயே விரும்பும்போதுதான் உன்னை ம்ருத்யு வந்தடையும்' என்று அனுக்கிரஹம் பண்ணினார் சந்தனு.

அவ்வாறே பீஷ்மர் சுவச்சந்த ம்ருத்யு, விரும்பும்போது மரணத்தைச் சந்திக்கக் கூடியவர் ஆனதனாலே, உத்தராயணத்தை எதிர்பார்த்து அவரால் காத்திருக்க முடிகிறது.

அப்படிப்பட்ட உத்தராயண புண்ணிய காலத்திலே, அந்த எம்பெருமானை நேரே சேவித்து, அவனை ஸ்தோத்திரம் பண்ணினார். பகவானும் அவரை அப்படியே ஆகர்ஷிக்கிறான்.

தன்னிடத்திலே இல்லாததையெல்லாம் பீஷ்மாச்சார்யாருக்குக் காட்டினான் பகவான்!

குதிரையை ஓட்டியதனாலே அவன் கைகள் சிவந்திருக்கின்றன.

குதிரையினுடைய குளம்பு பட்டுக் கிளப்பிய தூளியெல்லாம் மேலே படிந்திருக்கிறது.

அம்புகள் பட்டு, பகவான் உடம்பிலிருந்து ரத்தமாகக் கசிகிறது!...

ரத்தம் உண்டா பகவானுக்கு...?

வியர்வை உண்டா...?

சிரமம் உண்டா...?

– இதெல்லாம் பகவானுக்குக் கிடையாது. எது தன்னிடத்தில் இல்லையோ, அதையெல்லாம் அவருக்குக் காட்டினான்! பீஷ்மாச்சார்யார் அப்படியே நடுங்கிப் போகிறார்.

"இப்படியெல்லாம் கூட உண்டா...? ஆச்ருத பரதந்த்ரனாக, இவ்வளவு காரியம் பண்ணுகிறாயே...?" என்று நடுங்குகிறார்.

சுவதந்த்ரனான பகவான், தன்னை ஆச்ரயிக்கும் அடியார்களுக்காக,

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

அவர்கள் தேவைக்காக ஓடோடி வந்து, தன்னை மாற்றிக் கொள்கிறான் – பரதந்த்ர னாகிறான்.

அர்ஜுனன் என்ன பண்ணுகிறான்...? பகவானை வேலை வாங்குகிறான்.

''ரதத்தை அங்கே நிறுத்து, இங்கே நிறுத்து'' என்று சொல்கிறான். "எவ்வளவு நேரம் நிறுத்தினால் அவர்களையெல்லாம் என்னால் பார்க்க முடியுமோ, அவ்வளவு நாழி நிறுத்து..."

அர்ஜுனன் இட்ட வழக்காக பகவான் வேலை செய்து கொண்டிருக்கிறான். அவன் சொன்ன இடத்திலெல்லாம் நிறுத்துகிறான். நிறுத்தி, கையைச் சுட்டிக் காட்டிச் சொல்கிறான்:

"அதோ நிற்கிறாரே... அவர்தான் பீஷ்மர்.

அதோ நிற்கிறாரே... அவர்தான் துரோணர்.

அதோ இருக்கிறானே... அவன்தான் துரியோதனன்.

அதோ இருப்பது கர்ணன்" – இப்படி ஒவ்வொருத்தரையும் சுட்டிக் காட்டுகிறான்.

ஏன், அர்ஜுனனுக்குத் தெரியாதா...? இவர்களெல்லாம் யார் என்று தெரியாதா? பீஷ்மரைத் தெரியாதா? துரோணரை அவனுக்குத் தெரியாதா? ஏன் இப்படிச் சுட்டிக் காண்பிக்க வேண்டும்...?

பகவான் சுட்டிக் காண்பிக்கிற க்ஷணத்திலேயே தெரிந்து போய்விடும்... அப்படி அவர் சுட்டிக் காண்பிப்பவர் 'போய் விடுவார்' என்று உறுதியாகும். பகவானே அவர்களை முடிக்கிறான். நிமித்த மாத்திரம் முடிக்கிறான். நிமித்தமாக வைத்துக் கொண்டு, கையைக் காட்டியே முடிக்கிறான்! அதனால்தான் துரோணாச்சார்யாரிடம் பகவான் போனான். போய் அவரைப் பார்த்துக் கேட்டான்...

"துரோணாச்சார்யரே! உம்மை அழிக்க வேண்டுமானால் என்ன பண்ணுவது...?" அதற்கு அவர் சொல்கிறார்...

''என் கையில் ஆயுதங்கள் இருக்கும் வரைக்கும் என்னை யாராலும் அழிக்க முடியாது'' என்கிறார்.

''அப்படியா! ஓஹோ!'' என்று தலையைச் சொறிந்து கொண்டு திரும்பி வருகிறான் பகவான்!

ஏன்?... பகவானுக்கு ஒன்றும் தெரியாதா? அவரைக் கேட்டுத்தான் தெரிந்து கொள்ள வேண்டுமா...? இருந்தாலும் அப்படி ஒரு நாடகம் ஆடுகிறான் பாருங்கள், பகவான்! அஞ்ஞானியாக வேஷம் போடுகிறான்!

''உங்க வீட்டோட முன் தோற்றம் புதுமாதிரியா இருக்கே?''

''வயிற்றெரிச்சலைக் கிளப்பாதீங்க. கார்ப்பரேஷன்காரங்க வந்து இப்படி இடிச்சுட்டுப் போயிட்டாங்க!''

- ஞா. ஞானமுத்து

---

துரோணாச்சார்யருடைய நேர்மையைக் காட்ட வேண்டும் என்பதற்காகவும், அப்படி அவன் வேஷம் போடுகிறான். ஆயுதம் இருக்கிறவரை அவரை அழிக்க முடியாது.

மீண்டும் துரோணாச்சார்யரிடம் கேட்கிறான் பகவான்... "ஆயுதங்களை எப்போது நீ கீழே போடுவாய்...?"

அதற்கு அவர் சொல்கிறார்: "என்னால் தாள முடியாத ரொம்பவும் மனத்தை அப்படியே உலுக்கிவிடக் கூடிய கஷ்டத்தைக் கேட்டால், அனுபவித்தால், ஆயுதங்களைக் கீழே போட்டு விடுவேன். அதுவரையில் போட மாட்டேன்."

"ஓஹோ, அப்படியா!" என்று பகவான் நேரே அர்ஜுனனுடைய ரதத்துக்கு வரவில்லை... தர்மபுத்திரரின் ரதத்துக்குப் போனார். அங்கே போய்..." தர்ம நந்தனா! நீ ஒரு பொய் சொல்ல வேண்டும்" என்றார்.

அதற்கு தர்மபுத்திரர் சொல்கிறார்:

"என்னைப் போய் பொய் பேசும்படி சொல்கிறாயே அப்பா! நான் பொய் சொல்லலாமா...? நீ சொன்னால் அது பெருமை அடையும். பகவான் பொய் சொன்னால் அது தர்மமாகப் போய்விடும். ஆனால் நான் சொன்னால் தப்பு. நான் தர்மத்துக்கு விரோதமாகப் பொய் சொல்ல மாட்டேன்..." என்றார்.

இதிலே தர்மபுத்திரருடைய பெருமை தெரிகிறது. பகவானிடமே அவர் மறுக்கிறார். பொய் சொல்ல மாட்டேன் என்று மறுத்துப் பேசுகிறார்.

பகவான் விடுவானா! "அப்பா! நீ பொய் சொல்ல மாட்டாய் என்று தெரியும். இப்போது நான் ஒரு காரியம் பண்ணுகிறேன். நான் பண்ணுகிற காரியத்தைச் சொல்லுவாய் அல்லவா...?"

"சரி" என்றார் தர்மபுத்திரர்.

உடனே போய் ஒரு யானையைப் பிடித்துக் கொண்டு வந்தான் பகவான். அதற்கு நாமகரண உத்ஸவம் நடக்கிறது. குருக்ஷேத்ர பூமியிலே, அந்த யானைக்கு அஸ்வத்தாமா என்று பெயர் வைக்கப்படுகிறது. "இப்போது



இந்த ஸமர் அரங்கிலே இதற்கு அஸ்வத்தாமா என்று பெயர் வைக்கப்படும்" என்று பகவானே நாமகரணம் செய்கிறான்.

செய்துவிட்டு தர்மபுத்திரரைக் கேட்கிறான். "சரி, இப்போது இந்த அஸ்வத்தாமா என்கிற யானை இறந்து விட்டது என்று சொல்லுவாயா...?"

"அந்த மாதிரி மாண்டு போனால் சொல்லுவேன்..."

"மாண்டு போனால் என்ன சொல்லுவாய்?" என்று கேட்டான் பகவான்.

"குருக்ஷேத்திரம் என்கிற பூமியிலே, சமர் நடந்த போது, அஸ்வத்தாமா..." என்று நீண்ட நெடும் வாக்கியமாக ஒப்பிக்க ஆரம்பித்தார் தர்மபுத்திரர்.

"இந்த மாதிரி இவ்வளவு பெரிய வாக்கியமா சொல்லுவார்கள்? உன்னை யார் இப்போது உபன்யாசம் பண்ணச் சொன்னது! சூட்சுமமாகச் சொல்ல வேண்டும் .. நான் கற்றுக் கொடுக்கிறேன் பார்...

"அஸ்வத்தாமா ஹத: குஞ்சர:" என்று பகவானே வாக்கியம் அமைத்துக் கொடுத்தான்.

'அச்வத்தாமா என்கிற யானை விழுந்து மாண்டது' என்று பொருள்படச் சொன்னான்.

**யு**த்தத்திலே அந்த அஸ்வத்தாமா அடித்து வீழ்த்தப்படுகிறது. வீழ்த்தப்பட்டவுடனே தர்மபுத்திரருக்குக் கை காண்பிக்கிறான் பகவான்.

அப்போது பெருங் குரலில் தர்மபுத்திரர், "அஸ்வத்தாமா ஹத: குஞ்சர:" என்கிறார். அந்த க்ஷணத்திலே பகவான் என்ன பண்ணினான்...? துரோணர் காதில் இது நன்றாக விழவேண்டும் என்பதற்காக, ஸமர் அரங்கத்தையே நிசப்தமாக்கினான். அடுத்த க்ஷணமே சங்கத்தை எடுத்து 'பம்பம்பம்' என்று ஊத ஆரம்பித்தான்.

"ஹத: " என்று சொல்கிறவரை நிசப்தமாய் இருந்த அரங்கு, தர்மபுத்திரர் குஞ்சர: சப்தத்தைச் சொல்கிறபோது அப்படியே ஒலிமயமாகிவிட்டது. "குஞ்சர:" சப்தம் காதில் விழாமல், துரோணாச்சார்யர், அஸ்வத்தாமா என்ற தமது மகன் மாண்டதாக எண்ணி, சோகம் தாளாது ஆயுதத்தைக் கீழே போட்டார்.

அர்ஜுனனின் ரதத்திலே சித்தமாக உட்கார்ந்திருக்கிறான் பரமாத்மா. துரோணாச்சார்யாரைக் கொல்வதற்கு அர்ஜுனனிடம் சமிக்ஞை செய்தான்.

**து**ரோணாச்சார்யரை யார் கொன்றார்கள் என்று கேட்டால், அர்ஜுனனா கொன்றான்? அந்த பகவான் இந்த மாதிரி ஒரு காரியம் பண்ணியிராவிட்டால் அவரை முடிக்க முடியுமா...? யாரால் முடியும்?

**பீ**ஷ்மாச்சார்யார் சிரஸில் கிரீடத்தை எடுத்துப் போட்டுக் கொண்டிருக்கிறார். கவசங்களெல்லாம் அணிந்திருக்கிறார்... முதல் பத்து நாள் யுத்தத்தை நடத்தியவர் அவர்தான். அப்படிப்பட்டவர் யுத்தத்துக்கு ஆயத்தமாக வந்த போது, துரியோதனன் அவரைக் கேட்டான், "உங்களிடத்தில் ஒன்று கேட்க வேண்டும்..."

"என்ன கேட்க வேண்டும்?"

"இப்போது என் பக்கத்திலே இருந்து பத்து நாள் சண்டை போடப் போகிறீர்கள். பஞ்ச பாண்டவர்களை நீங்கள் எத்தனை நாளில் கொல்வீர்...?"

அவர் பார்த்தார்... 'மகா பாபி! அவர்களை அழிக்க வேண்டும் என்று நினைக்கிறானே? எவ்வளவு கெட்ட எண்ணம் இவனுக்கு!'

இருந்தாலும் மறுபடியும் கேட்டார்...

"நீ கேட்ட கேள்வி என்ன? மறுபடியும் கேளு..."

"எத்தனை நாளில் பாண்டவர்களை அழிப்பீர்?"

உடனே பீஷ்மர் சொன்னார்:

"அப்பா துரியோதனா! எனக்கு நாள் எதற்கடா? ஒரு நிமிஷத்துக்குள்ளே, ஒரே பாணத்துக்கு அத்தனை பேரையும் இலக்காக்குவேன். அத்தனை பேரையும் அழிப்பேன்..."

ஒரு எகிறு எகிறி, ஒரு குதி குதித்தான் துரியோதனன். அவர் பேசி முடிப்பதற்குள்ளாகக் குதித்துக் கொண்டேயிருக்கிறான்...

"ஆனால்..." என்று அவனை இடைமறித்தார் பீஷ்மாச்சார்யார்.

எகிறிக் குதித்தவனுக்குத் தயக்கம் வந்துவிட்டது.

'என்ன சொல்லப் போகிறாரோ...?' என்று அவரைப் பார்த்தான்!

(வளரும்)



# காதல் கொண்டேன்

மென்மையான காதல் கதையாக இருக்கலாம் என்ற உணர்வைத் தரும் கவித்துவமான தலைப்பு! காதல், பரிவு எனப் பாந்தமாய்த் தொடங்கும் படம், பட்டென்று நம் எதிர்பார்ப்புக்கு எதிரான திசையில், பயணப்படுகிறது. பாலியல் வக்கிரங்கள், பலாத்காரம், இரத்தம், கொலை, திகில் போன்ற ஆபத்தான ஹேர்பின் வளைவுகளைக் கடந்து, கரடுமுரடான கவிதையாய் முடிந்து போகிறது. முதல் வாசிப்பிலேயே புரிந்து விடுகிற கவிதைதான். ஆனால் முகம் சுளிக்க வைக்கிற கவிதை!

ஒடுக்குதலுக்கும், புறக்கணித்தலுக்கும் உள்ளான குழந்தைப் பருவம் வாய்க்கப் பெற்ற ஓர் இளைஞனின், அபாயகரமான மற்றொரு முகத்தை, மெல்ல மெல்ல விடுவித்துக் காட்டும் திரைக்கதை புதிதே தவிர, கதை புதிதல்ல. தாய்மைக்கும் அன்புக்கும் ஏங்கும் தனுஷ், தன் மேல் தனித்துவப் பரிவு காட்டும் சோனியாவுக்காக, விடைத்தாள்கள் வைக்கப்பட்டிருக்கும் அறைக்குத் தீ வைத்துவிட்டு வரும்போதே, இன்னொரு தனுஷ் பற்றிய சந்தேகத் தீக்குச்சி நமக்குள் பற்றிக் கொள்கிறது.

அதன் பிறகு படம் முடிகிறவரை தனுஷின் விபரீத வளையத்துக்குள் நாமும் சிக்கிக் கொண்டு விட்ட பதைபதைப்பு.

காட்சியமைப்பு, உடை, ஒளியளவு, கோணங்கள், பின்னணி இசை எனப் பார்த்துப் பார்த்து செதுக்கி இருப்பதில் செல்வராகவன், தனித்துவம் மிக்க இயக்குனராகத் தம்மை அடையாளம் காட்ட உழைத்திருக்கிறார். ஆனால் பாத்திரங்களின் இயல்பான போக்கிலேயே சென்று அவற்றைப் பட்டை தீட்டுவதை விட்டுவிட்டு, முற்றிலும் வியாபாரச் சிந்தனையை மட்டுமே மனத்தில் நிறுத்தி, பாத்திரங்களின் இயல்பை, தனது போக்கிற்கு வளைத்திருப்பதில் அவரது உழைப்பு அசல் பிழைப்பாகி விட்டிருக்கிறது.

பாவம்! சோனியா பாத்திரம். நட்புக்கும் காதலுக்குமான இடைவெளியை மிகத் துல்லியமாய்ப் புரிந்து கொண்டு தனுஷுடன் பழகினாலும், அதைப் புரிய வைக்கிறேன் பேர்வழி என்று நடுச்சாலையில் விபரீத பரீட்சையில் இறங்குவது, பாத்திரப் படைப்பின் கண்ணியத்தில் விழும் முதல் அடி!

பரிவுக்குரிய ஒரு நண்பனிடம், ஒரு பெண் இத்தனை நெருக்கம் காட்ட முடியுமா என்ற மெகா கேள்வி எழுவதால், பல சமயங்களில் தனுஷ் மீது சோனியாவுக்குக் காதல் வந்து விட்டதோ என்று குழம்புவதைத் தவிர்க்க முடியவில்லை.

குழந்தைத் தொழிலாளர் மீதான பாலியல் வன்முறையை அழுத்தமாகச் சொல்ல நினைத்திருக்கும் இயக்குனர், அதிலும் நாகரிகம் காத்திருக்கலாம்.

'பொசசிவ் சைக்கோபாத்'தாக கச்சிதமாய்ப் பொருந்தி, கனமான நடிப்பில் அசத்தியிருக்கிறார் தனுஷ்.

சோனியா, சுதிப்பும் கூட நடிப்பில் பட்டையைக் கிளப்பியிருக்கிறார்கள். தனுஷ் முதல் ஹீரோ என்றால் யுவன்சங்கர் ராஜா இரண்டாவது ஹீரோ.

ஒளிப்பதிவைக் குறை சொல்ல முடியாது. ஆனால், குடும்பத்தோடு படம் பார்க்க நினைக்கிறவர்களைத் தடுத்து நிறுத்தி விடும், தடம் மாறிய படம்.

– விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

பறவை, நதி, தென்றல், காற்றுக்கு
ஏது எல்லைக்கோடு
எல்லை என்பது மனிதர்களுக்கு தான்
மனிதனால் போடப்பட்டது...

சில வருடங்களுக்கு முன்னால் வெளிவந்த ஹிந்தி திரைப்படத்தில் இடம் பெற்ற பாடலின் மொழியாக்கம் தான் இது.

இந்தப் பாடலுக்காக அநேகமாக அத்தனை விருதுகளையும் வென்றார் கவிஞர் ஜாவேத். இந்தியா - பாகிஸ்தான் எல்லையில் மக்கள் படும் கஷ்டங்களை அருமையாகப் பிரதிபலிக்கும் கவிதை

பாடலை மெய்ப்பிக்கும் வகையில், லாகூர் - தில்லி பஸ்ஸில் ஜூலை 11 அன்று நதீம் ஸஜ்ஜாத் - தய்யபா தம்பதி தங்கள் இரண்டரை வயதுக் குழந்தை நூர் ஃபாத்திமாவுடன் வந்திறங்கினர் நூரின் இதயத்தில் ஏகப்பட்ட பிரச்னைகள். இந்தியாவில், குறிப்பாக பெங்களூரிலிருக்கும் நாராயண ஹ்ருதயலாவிற்குப் போனால் நூர் ஃபாத்திமாவுக்கு ஒரு புது வாழ்வு கிடைக்கும் என பெற்றோர் நம்பினர். அது வீண் போகவில்லை.

# நூறிலிருந்து விடுதலையான நூர்!

ஜூலை பதினைந்து அன்று சுமார் ஆறு மணி நேரம் நடந்த அறுவை சிகிச்சைக்குப் பின் நூர் தன்னுடைய நூறு பிரச்னைகளிலிருந்து விடுதலை பெற்றார். மருத்துவ குழுவுக்குத் தலைமை பொறுப்பு ஏற்று வெற்றிகரமாக சிகிச்சை செய்த சர்ஜன் டாக்டர் ராஜேஷ் ஷர்மா தான் இன்றைய தேதியில் ரியல் 'சாமி'!



• நதீம் ஸஜ்ஜாத் - தய்யபா தம்பதி

பிஞ்சுக் குழந்தை நூர் ஃபாத்திமாவுக்குப் பெங்களூரில் கிடைத்த வரவேற்பைப் பார்த்து, மக்களின் அன்பு ஆதரவை நினைத்து நெகிழ்ந்து போயிருக்கிறார்கள் அதன் பெற்றோர். பூங்கொத்துகளும் வாழ்த்து அட்டைகளும், வாழ்த்துச் செய்திகளும் ஆஸ்பத்திரி அறையில் நிறைந்து கிடக்கின்றன. ஜூலை 15 அன்று பள்ளிக் கூடங்களில் விசேஷ பிரார்த்தனைகள். அரசியல் பிரமுகர்கள், புள்ளிகள் தங்களுடைய பிஸியான நேரத்திலும் குழந்தையின் நலம் கேட்க மறக்கவில்லை அன்று. சோனியா காந்தி காங்கிரஸ் எம்.பி. மார்க்ரெட் ஆல்வா மூலம் அருமையான கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறார்.

"டியர் நூர் இத்தனைச் சிறு வயதிலும் உன் துணிச்சல் கண்டு பாராட்டுகிறேன். கூடவே உன் பூரண நலனுக்குப்

பிரார்த்திக்கிறேன் நீ குணமானவுடன் இந்தியாவைச் சுற்றிப் பார். ஆக்ராவிலிருக்கும் தாஜ்மகால் முன் நின்று ஒரு புகைப்படம் எடுத்து எனக்கு அனுப்பி வை. நம்மிருவரின் நாடுகளிலுமே பாரம்பர்ய ஒற்றுமை உண்டு. நாமெல்லோருமே ஒரே குடும்பமாக மகிழ்ச்சியுடன் அமைதியுடன் இருக்க வேண்டும். இந்தியா உனக்கு மறு வீடு. அடிக்கடி வா...'' என உருக்கமாக எழுதி இருக்கிறார் சோனியா.



* நூர்

நூரின் இதயத்தில் இரண்டு பெரிய துவாரங்கள். மேலும் 'பல்மனரி ஸ்டெனோசிஸ்' என்று சொல்லப்படும் வால்வு கோளாறு ஆபரேஷனில் இவை எல்லாம் சீர் செய்யப்பட்டுவிட்டது. டாக்டர் ராஜேஷ் ஷர்மா மற்றும் நாராயண ஹ்ருதயாலயாவின் டைரக்டர் மற்றும் தங்கமான இதயத்திற்குச் சொந்தமான டாக்டர் தேவி ஷெட்டி தான் இன்று நூர் ஆரோக்கியமான புன்னகை புரிவதற்குக் காரண கர்த்தாக்கள். தலையெழுத்தை மாற்றி எழுதிய நவீன பிரம்மாக்கள்!

நதீம் ஸஜ்ஜாத் - தய்யபா தம்பதிக்கு இப்போது தான் நிம்மதி கிடைத்திருக்கிறது. உறங்காத இரவுகள், கவலைகள், அன்பு மகளை இழந்து விடுவோமோ என துடித்த கணங்களிலிருந்து இனி விடுதலை.

"இந்தியாவில் எங்களுக்குக் கிடைத்த வரவேற்பைப் பார்த்து நெகிழ்ந்து போயிருக்கிறோம். இதய நோயாளியான குழந்தைகளுக்கென நிதியுதவியும், நான் ரிப்போர்டிங் விசாவும் தர இரு அரசுகளுமே முன் வர வேண்டும். இரு நாடுகளிலுமே சுகாதாரம், கல்வி இரண்டுமே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. வறுமை தாண்டவமாடுகிறது. ஒரு மனிதனின் சம்பளத்திலிருந்து 30 சதவிகிதம் இந்தியாவிலும், 50 சதவிகிதம் பாகிஸ்தானிலும் துப்பாக்கிகளுக்காக பயன்படுத்தப்படுகிறது எனக் கருதுகிறேன்" என துணிச்சலுடன் பேசுகிறார் நதீம்.

பாகிஸ்தானிலிருந்து வரும் ஏழை நோயாளிகளுக்கென சிறப்பு நிதியமைப்பு ஒன்று அமைக்குமாறு கேட்டதோடு அல்லாமல் ஐம்பதாயிரம் ரூபாயை தன்னுடைய பங்காகப் போட்டிருக்கிறார். மேலும் இந்தியக் குழந்தைகளின் ஆபரேஷனுக்கென சுமார் ஒன்றரை லட்சம் ரூபாய் வழங்கியிருக்கிறார்.

ஐ.சி.யு.விலிருந்து நூர் வெளி வந்தவுடனேயே பெற்றோர் மெதுவாக பெங்களூரைச் சுற்றி பார்க்கக் கிளம்பி இருக்கிறார்கள். சென்ற இடமெல்லாம் கனிவான விசாரிப்புகள். ஒரு ஹோட்டலில் சாப்பிட்டபோது அங்கு காசு வாங்க மறுத்துவிட்டார்களாம். பிறகு ஹரே ராமா ஹரே க்ருஷ்ணாவின் 'இஸ்கான்' கோயிலுக்குச் சென்றனர். அங்கு சிறுமி நூர் ஃபாத்திமாவின் நலனுக்கென சிறப்பு பூஜை செய்யப்பட்டது. இருவருக்கும் உருதுவில் எழுதப்பட்ட பகவத் கீதை புத்தகங்கள் பரிசாக அளிக்கப்பட்டிருக்கின்றன.

- லதா சேகர்

'நையாண்டி' கணேசுக்கு அப்படி ஒரு சந்தோஷம்.



அமரர் கல்கி நினைவு இளமைச் சிறுகதைப் போட்டியில் **10,000/-** ரூபாய் முதல் பரிசு பெறும் சிறுகதை.

ரயில் நிலையத்தில் தவிலோடு இறங்கும் போதுதான் கொஞ்சம் சங்கோஜமாக இருந்தது. 'மெட்ராசுக்காரர்கள் மேளக்காரனை 'ஒரு மாதிரி' பார்ப்பார்களோ' என்று உள்ளே ஏதோ நிமிண்டிக் கொண்டே இருந்தது. அவரவரும் ஆளுக்கொரு சுமையோடு ஆலாய்ப்பறக்கிறார்கள். பெரும்பாலும் யாரும் வெறுங்கையோடு இல்லையென்றே சொல்லலாம். கூட்டி வந்த ரவியைத்தவிர ஒருவர் கூட கவனிக்கவில்லை இவனை. அதுவே முதல் சந்தோஷமாக இருந்தது.

செய்கையால் ரவி அழைத்ததும் தவிலைத் தோளில் தூக்கி மாட்டினான். பின் முதுகில் அது தக்கென்று குந்திக் கொள்ள இலேசாய் ஒருக்களித்து நடந்தான்.

அடிக்கும் போது நடக்கும் நடையே தனி. தவிலைக் கழுத்தில் தொங்கவிட்டு, வலது முழங்காலில் தாங்கித் தாங்கி, தாளத்தோடு நடக்கும் நடை. இப்போது தொழிலுக்குப் போகும் நடை. இப்படி நடந்து திரிந்து எத்தனை நாளாகிவிட்டது!

யார் பின்னேயும் 'தொங்கு தொங்'கென்று அலைகிற ஆளில்லை கணேசு. அப்படி ஒரு வாத்தியக்காரன். அதனாலேயே ரவிக்கு, தன் ஊர் தவில்காரன் புனர்ஜென்மம் காண வேண்டும் என்கிற வீம்பு. அழைத்து வந்து விட்டான்.

இத்தனைக்கும் இரண்டு பேருக்கும் அவ்வளவு சிநேகிதம் இல்லை. கணேசோடு ரவி ஐந்தாம் வகுப்பு வரைதான் படித்தான். அப்புறம் ஹைஸ்கூல், காலேஜ் போய், சினிமாவில் 'ரெக்கார்டு பிரேக்' செய்ய நுழைந்து விட்டான்.

ஊருக்கு வந்த ரவி, கணேசைப் பார்த்ததும் 'ஆந்தாந்து' போய் விட்டான். நம்ம நையாண்டி கணேசு தானா இவன்? எப்பேர்ப்பட்ட வாத்தியக்காரன்! மயிலம்பட்டி கணேசு, நையாண்டி கணேசனானது சும்மாவா. அடிச்சான்னா அடி, சும்மா உங்க ஊர், எங்க ஊர் அடியா? சுத்துப்பட்டு கிராமத்தையெல்லாம் வாசிப்பிலேயே கூப்பிட்டுக் குந்தவைத்தல்லவா பேசுவான்!

அறவே ரசனை இல்லாத 'ஜென்மங்கள்' கூட, கணேசின் நையாண்டி ஓசையில் மனசுக்குள் ஓர் ஆட்டம் ஆடிக் கொள்ளும். தொப்புத் தொப்பென வேர்த்த கணேசுவின் மேனி மினுக்கும். கூட்டம் எகிற எகிற, பாதி சாமத்தில் அவனுக்கு நரம்பெல்லாம் தாள முறுக்கேறிவிட, தவிலில் தீப் பறக்கும். அவனின் கழுத்து ஆட்டத்திலிருந்தும் தாளம் வருவது போல் இருக்கும். கரகப் பெண்களும், குறத்திகளும் மூச்சுவாங்கித் திணறிப்போய், கணேசின் மேளத்தை அசிங்கமாக இடித்திடித்து ஆடி மீள்வார்கள். அதற்கெல்லாம் மசிகிறவனா கணேசு? விடிய விடிய வெளுத்து வாங்கி விடுவான்.

சேரியில் நடக்கிற சடங்கு, காதுகுத்து, கல்யாணம் எங்கும் இவன் வாசிப்புதான் கொடிகட்டும். இது மாதிரி 'தேவை'களுக்கு தவிலை வசம் மாற்றி, விரல்களில் 'கூடு' மாட்டி அடிப்பான். விரல்களில் வெள்ளை மின்னல் அதிர்வது போலத் தாளம் தெறிக்கும்.

எல்லாம் படுத்து விட்டது. தேவைகளுக்கெல்லாம் பேண்டு வாத்தியங்கள்

# கடவு

இரா.தனிக்கொடி

இறங்குகின்றன. கரகாட்டம் நடந்த இடத்தில் சினிமாவும், கச்சேரியும் நடந்து, இப்போது குலுக்கல் நடனங்கள் கலக்கத் தொடங்கி விட்டன. சாவுக்குக் கூட பேண்டு செட்டுக் குள்ளே தாழ்த்தப்பட்ட பிரிவு போல ஒன்று, ஆடிக் கொண்டே அடித்துக் காட்டுகிறது.

நையாண்டியை ஒத்த தொழில்காரர்கள் கேரளாவுக்கு ரோடு போட்டு கஞ்சிவெள்ளம் குடிக்கப் போய்விட்டார்கள். 'தெக்கி நாட்டு'க்கே வாத்தியம் செய்து கொடுத்த நையாண்டியின் அப்பாவும் தங்கச்சியும், எந்தக் கடவில் கிடக்கிறார்கள் என்றே தெரியவில்லை.

இரண்டு நாள் விட்டு, மூணு நாள் விட்டு அடுப்பு புகைந்தது. வீட்டுக்குள் வியாபித்து அடைத்துக் கிடந்த 'தரித்திரம்' எப்படியும் வாசலில் வந்து முகம் காட்டி விடும் போல. பிச்சை எடுப்பவர்கள் கூட இரண்டு வீடு தள்ளியே போய்க் கேட்கிறார்கள். இத்தனைக் கும் சாணம் தெளித்துக் கோலம் போட்டும், பிர யோசனம்? 'இல்லாத களை' எங்கும் மெழுகிக் கிடந்தது.

மயிலம்பட்டிக்குத் தற்சமயம் வந்திருந்த ரவி, வதங்கிப் போயிருந்த கணேசுவைக் கண்டு பதறிப் போனான். இரண்டு பேரும் நெடுங் குளக்கரையின் மடையில் வெகுநேரம் பேசி னார்கள். நையாண்டி கணேசு கண்களை எங்கோ எட்டிப்போட்டு வெறித்திருந்தான்.

"இருநாளெல்லாம் எங்கே போய் பொதஞ் சுச்சோ தெரியல ரவி. எல்லாம் அடிபட்டுப் போச்சு. இப்பெல்லாம் பொழுது ஏண்டா விடியுதுன்னு இருக்கு. நான் வாசிச்ச இடத்துல போயி இப்ப நிக்க முடியல, காலெல்லாம் சடசடத்து வருது. காதெல்லாம் அடைக்கிது. காவுந்து பண்ணிவச்ச மானம் மரியாதய

"கண்ணுல விழுந்த தூசி இன்னும் உறுத்திக்கிட்டே இருக்கு டாக்டர்...!"

"தொடர்ச்சியா ரெண்டு 'மெகா சீரியல்' பார்த்து அழுங்க! தானா வெளியே வந்துடும்!"

— கிரிஜா மணாளன்



வயித்துக்காக வித்தாச்சு. கட்டதான் இருக்கு"

கணேசு பேசப்பேச ரவி புறங் கையால் மூக்கைத் துடைத்தான். கண்ணிமைகள் கண்ணீரை வெளி வராமல் படபடத்து நிறுத் தின. மனசின் கனம் தாங்காமல் முகம் இணறு வதை மறைக்கவா முடியும்?

"வா கணேசு போவோம், நாட்டுப்புற கலைக்குன்னு டீவியில நெறைய சான்ஸ் இருக்கு. என்னோட வேலை செஞ்சவனுங்க ரொம்பப் பேர் அங்க இருக்கானுக வா."

அப்படித்தான் வந்திருக்கிறான் நையாண்டி கணேசு. இனி நையாண்டியோடு டீவி. புகழும் சேர்ந்து கொள்ளும்.

தெற்குப் பார்த்த மாடிவீடு. வீட்டின் மேற்குச் சுவரை ஒட்டி மாடிப்படி. மேலே அறையில்தான் தங்கியிருந்தார்கள். அறையின் துணிக்கொடியில் பாதி அழுக்கான இரண்டு மூன்று சட்டைகளும் கைலியும் கிடந்தன. சுவரில் பேண்ட்டுகள் தொங்கின. சன்னலில் தமிழ்ப் புத்தகத்தைவிட ஆங்கிலப் புத்தகங்கள் நிறைந்திருந்தன. இரண்டு பாய் தலையணைகள் நெட்டு வாக்கிலும், ஒரு பாய் தலையணை குறுக்கிலும் நிரந்தர கிடப்பாய்க் கிடந்தன. கதவின் பின்புறம் சிகரெட், பீடித் துண்டுகளை யும், காகிதக் குப்பைகளையும் பெருக்கிய ஒரு விளக்குமாறு கால்களைப் பரப்பிச் சாய்ந்திருந் தது.

முதல் நாள் கணேசு எங்கே தலைசாய்ப்ப தெனத் தடுமாறினான். ஒரு அகலப்பாயில் ரவி வம்படியாய்ப் படுக்க வைத்தான். கூச்சத் தோடு படுத்த நையாண்டிக்கு நான்கு நாள் ஆகியும் கூச்சம் முழுவதும் விட்டபாடில்லை.

மதியம் நண்பர்கள் கண்ணயர்ந்திருந்தார் கள். மாலை ஒரு மண்டபத்தில் டீவியின் நாட்டுப்புறக் கலை நிகழ்ச்சி ஷூட்டிங். எப்படி நடக்கப் போகிறதோ என்ற புதிரான பர பரப்பில், மனசு சுழன்று கொண்டே இருந்தது. திடீரென்று ஒரு ஆளின் தடித்த பேச்சு படி யேறி வந்தது.

"யாருப்பா மேலே...?"

கணேசு எட்டிப் பார்த்தான்.

"யாருய்யா நீ..."

"ரவி ஊர்லருந்து..."

"இந்த லட்சணத்துல நீ வேறயாக்கும்."

"............"

"காத்தால ரெண்டு மாசத்துக்கும் சேத்து கொண்டு வரச் சொல்லு, இல்லேன்னா பொழப்பு நாறும்..."

திட்டிக்கொண்டே இறங்கும்போது ஒன்றி

ரண்டு கெட்டவார்த்தைகளும் வந்தன.

**தே**வசபையில் வாசித்தால் இப்படித்தான் இருந்திருக்கும் என்பது போல் இருந்தது நையாண்டி கணேசுக்கு. மாட்டுவண்டி, உரல், குதிர், அம்மி, ஆட்டுக்கல் எல்லாமே செட்டிங். சொர்க்கலோகத்துக்குள் ஒரு வெளிச்ச வீட்டில் குந்தியிருந்ததுபோல் ஒருவித ஆனந்த மயக்கம். கொடுத்த பணத்தில் கூட எல்லாமே திருப்திதான். கடைசியில் நடந்த சலசலப்புதான் நிகழ்ச்சியில் ஒரு ஒச்சம்.

கணேசு வயதொத்த ஒருவனை, பேன்ட் சட்டை அணிந்து விபூதி பூசியிருந்த ஒரு ஆள் கன்னத்தில் அறைந்து, சட்டைக்காலரைப் பிடித்து இழுத்து வந்து, மண்டபத்துக்கு வெளியே தள்ளினார். அதைப் பற்றி ஆட்டோவில் வந்த அறை நண்பன் 'ராக்கி ராஜி'டம் கேட்டான். ஒன்பது மாத சம்பள பாக்கியை அந்தப் பையன் கேட்க, அவனை எப்படி வெளியே தள்ளுவது என்று யோசித்து வந்தான் விபூதிப் பூச்சு மேனேஜர். மதியம் சாப்பிடாமல் அந்தப் பையன் இப்போதுதான் சாப்பிட்டுவிட்டு, கொஞ்சம் லேட்டாக வந்தான். சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி விரட்டியதாகச் சொன்னான்.

அறைக்குள் நுழைந்ததும் கணேசை ரவி கைகளை இறுக்கி, குலுக்கி, கட்டிப் பிடித்தான். இலேசான பிராந்தி வாசனை வந்தது.

"இதுக்குத்தான் சீக்கிரம் வந்தியா?"

"அதுக்காக இல்ல......"

தரையில் ஒரு டிஸ்போசபில் டம்ளர் சாய்ந்து காற்றில் அரை வட்டம் போட்டது. அதை எடுத்த ரவி புத்தக சன்னலில் இருந்த பாட்டிலின் மீதத்தைக் கவிழ்த்து, சாப்பிட்டான். அதிகமாக வேர்த்திருந்தது அவனுக்கு.

"கோவுச்சுக்காதே நையாண்டி.. மண்டபத்துல பாக்கக் கூடாத ஆளப்பாத்துட்டேன். நிக்க முடியல வந்துட்டேன்... சரி.. பணம் குடுத்தாங்கல்ல... பத்திரமா கொண்டு போ..."

"பேச்ச மாத்தாத. பாத்தது யாரை? சண்டக்காரனையா? கடன்காரனையா?"

"சேச்..சே..பாத்தது.. பாத்தது.. என் மனச, என் உசுர எல்லாம். நல்லா ஆடுவா, கொடி மின்னலாட்டம் துவளுவா, சண்டாளி, நாலு வருஷம் நல்லாதான் சிரிச்சோம், பழகினோம். ஒரு நா 'நாம சேர முடியாது போல ரவி, மனசு சொல்றத வயிறு கேக்க மாட்டேங்குது. பசிய பசியால காப்பாத்த முடியாது ரவி. உன்ன எனக்கு ரொம்பப் புடிச்சிருக்கு. எப்படி மறக்கப் போறேன்னு தெரியலன்னா. இன்னக்கி மண்டபத்துல இண்டிகா கார்ல வந்து இறங்கினா, அப்படி வர வேண்டிய அழகுதான் அவ, ஆனா கூட்டி வந்தவன் பொறுக்கி. காசத் தவிர எந்தத் தகுதியும் இல்ல அவனுக்கு என்னைப் பாத்ததும் தயங்கி நின்னா. அவளும் அழுதுருவா போல இருந்துச்சு, வந்துட்டேன்.

இங்கே நிறைய்ய இப்புடிப் போச்சு நையாண்டி, சினிமாவுலர்ந்து டீவிக்கு, டீவிலருந்து தெருவுக்கு. நான் பிரமிச்ச பல பேர், என்ன ஆனாங்கன்னே தெரியல. தர்மாஸ்பத்திரியில சாகறாங்க. தற்கொலை பண்ணிக்



## சாமானியனா? சாதனையாளனா?

**சி**னிமா பி.ஆர்.ஓ. நிகில் முருகனுக்கு 'மக்கள் தொடர்புச் செம்மல்' என்ற விருதை மதுரை அமுத சுரபி கலைமன்றம் சமீபத்தில் அளித்திருக்கிறது.

"எத்தனை சோதனையிலும் உங்களால் இயல்பாக இருக்க முடிஞ்சதுன்னா, அதுதான் உங்களோட முதல் சாதனை. சாதிச்சே தீரணும்ன்னு நீங்க நினைக்கிறப்போ சமூகம் பல வேலிகளைப் போடும். வேலியைத் தாண்டினா விபரீத விளைவுகளை சந்திக்க வேண்டி வரும்ன்னு மிரட்டும். வலியைப் பார்க்காமல் வேலிகளைத் தாண்டி ஜெயிச்சுட்டா சாதனை யாளன். தாண்டாதவன் சாமான்யன். சாமானியனாகனுமா சாதனையாளனாகனு மான்னு நாமதான் முடிவு பண்ணனும்"என்று வெற்றிக்கு இலக்கணம் சொல்கிறார் நிகில்.

— ஸ்ரீ

கிறாங்க. என்ன நடக்குதுன்னே புரியல." பேசிக் கொண்டே போனான். கணேசுக்குப் பாவமாய் இருந்தது.

**வி**ழித்து எழுந்து ரவி பார்த்தபோது மணி ஒன்பது நாற்பது. கணேசு கிளம்பி இருந் தான்.

ராக்கி ராஜ் கொண்டு போய் பஸ் ஏற்றி விட்டு வந்தான். மாடியில் ஏறும்போது வீட்டுக்காரர் நின்றார். குனிந்து கொண்டே ஏறி னான். ரவி எட்டிப் பார்த்து விட்டு மாடி யிலேயே தேங்கினான். வீட்டுக்காரப் பெரி யவர் ராக்கியை அழைத்தார்.

"ராத்திரிக்குள்ள எப்புடிடா இவ்ளோ காகம் புரட்டினீங்க? அந்த வேட்டிக்காரப்பய காத்தாலயே குடுத்தான். ஊர்லர்ந்து கொண்டு வந்தானா?" அவனுக்கு ஒன்றும் விளங்க வில்லை. கேட்டுக் கொண்டிருந்த ரவிக்குச் கரீ ரென்றது.

ஆறு மாதத்திற்குப் பிறகு ரவி அம்மா விடமிருந்து ஒரு கடுதாசி வந்திருந்தது. அதில் கடைசி பத்தியில் 'நையாண்டி அவன் அம்மாவுடன் எப்படி இருக்கிறான்? அவ னாவது பிழைத்துக் கொள்வானா?' என்ற வரி, ரவியை மிகவும் குழம்ப வைத்தது.

**இ**ந்தப் படத்திலும் ரவி உதவி இயக்கு நர்தான். இதற்கே அவன் பெரிய போராட்டம் நடத்தி, ஆள் வைத்து இடம் பிடிக்க வேண்டியதாயிற்று. வேதாரண்யத்தில் படப்பிடிப்புக்காக லாட்ஜில் தங்கியிருந்தார் கள். கடற்கரையில் ஒரு பாட்டின் ஒரு பகுதியைப் படமெடுத்தாக வேண்டும். பாட லாசிரியர்,

'அலையின் கைகள் அட்சதையாக
தூவுது நுரைப்பூங்கொத்தை - அது
நுரையை விடவும் மெல்லிய பெண்ணில்
கண்டது புதுவாசத்தை' என்று எழுதி யிருந்தார்.

எழுத்துக்குத் தக்கபடி நுரைகள் கேம ராவுக்குள் அமையவில்லை. நுரை என்றதும் கடற்பஞ்சு, கடல் நுரை ஞாபகம் வர, ரவி இயக்குநரிடம் சொல்ல, அவர் அவனைத் தட்டிக் கொடுத்து, தர்மாகூல் ஷீட்டை பூப்பூ வாய் நறுக்கிப் பயன்படுத்தலாம் என்று ரவியை வாங்கிவரச் சொன்னார். இயக்குநரின் ஏ.சி. காரில் போகும்போது, அடுத்த ஆண்டிலாவது இதுபோல் சொந்தமாக காரில் வர வேண்டும், என்று பழைய தீர்மானத்தையே நிறைவேற்றி னான்.

கடைக்குச் சென்று திரும்பும் போது, பஸ் ஸ்டாண்டு பக்கத்தில் ஒரு கூட்டம் நின்றது. கார் ஓரமாய் வழி கேட்டது. கூட்டத்துக் குள்ளிருந்து ஒரு நாதஸ்வரம் 'நலந்தானா?' என்று கேட்டது. அதற்கு வாசித்த தவில் சத்தம், மெல்ல மெல்ல இவன் உடம்புக்குள் ஏறி, பதற வைத்தது. ○

# அரங்கன் அரைப் பட்டினியில் இல்லை!

## – இணை ஆணையர் மறுப்பு

ஸ்ரீரங்கம் ஸ்ரீரெங்கநாதசுவாமி திருக்கோயில் இணை ஆணையர் - செயல் அலுவலர் அவர்களின் அறிவுரையின் பேரில், தங்களது 15.06.2003 தேதிய கல்கி வார இதழ் பக்கம் 24 முதல் 27 முடிய 'அரைப்பட்டினியில் அரங்கன்' என்ற தலைப்பில் கட்டுரை வெளியிடப்பட்டுள்ளது தொடர்பாக, கீழ்க்கண்ட விவரப்படி தங்களுக்குத் தெரிவிக்கும் அறிவிப்பு :

ஆர்யபடாள் வாயிலுக்குள், பொன் கம்பத்தடியில், சேவார்த்திகள் தேங்காய் உடைக்க எப்போதும் அனுமதி மறுக்கப்பட்டதில்லை. கடந்த 1976ம் ஆண்டுக்கு முன்பு வரை தேங்காய்கள் ஆர்யபடாள் வாசலுக்குள் அனுமதிக்கப்பட்டு, மேற்படி தேங்காய்களை உடைத்து, துருவலாகச் செய்து நாட்டுச் சர்க்கரையுடன் சேர்த்துக் கலந்து, திருக்கோயிலால் அங்கீகரிக்கப்பட்ட பிராமண வழிகாட்டிகளால் எடுத்துச் செல்லப்பட்டு, மூலஸ்தானத்தில் அர்ச்சகர்களால் நைவேத்யம் செய்யப்பட்டு வந்தது.

மேற்படி முறையினால் ஆர்யபடாள் வாயிலுக்குள் உட்புறம் ஈக்கள் மொய்த்து அசுத்தமாகக் காணப்பட்டது என்பதாலும், மூலஸ்தானத்தில் மேற்படி தேங்காய்த் துருவல் நிவேதனம் செய்வதால், மேற்படி துருவல் அங்கு சிதறி கரப்பான் பூச்சிகள், ஈக்கள் அங்கு வந்து மொய்த்தும், சேவார்த்திகளுக்கு வழங்கப்படும் தீர்த்தத்திலும் கரப்பான் பூச்சிகள் பறந்து விழுந்து இறந்ததால், தீர்த்தத்தின் புனிதத்தன்மைக்கு மாசு ஏற்பட்டதுடன் கருவறைக்கும் ஊறு ஏற்பட்டதால், தேங்காய்த் துருவல் நிவேதன முறையை மாற்றி, 1976ம் ஆண்டு முதல் ரத்து செய்து பழம் கற்கண்டு முதலியவைகளை மட்டும் நிவேதனம் செய்யும் பழக்கம் நடைமுறைப் படுத்தப்பட்டது. மேற்படி முறை செயல்படுத்தப்பட்டதால் கருவறையிலிருந்து ஆர்யபடாள் வாயில் வரை, மிகச் சுத்தமாகப் பராமரிக்கப்பட்டு வருவதற்குச் சௌகரியமாக இருக்கிறது. தேங்காய் உடைக்க விரும்பும் சேவார்த்திகள், இத் திருக்கோயில் ரெங்கவிலாச மண்டபத்தில் அமைந்துள்ள கல்கம்பத்தடியில் உடைப்பது, நீண்ட காலப் பழக்கமாக இருந்து வருகிறது.

இத் திருக்கோயிலில் நடைமுறைப்படுத்தப்பட்டிருக்கும் நித்ய ஆராதனைக் கட்டளைத் திட்டத்தில் நித்யப்படி திருவாராதனைக் கட்டளைக்கு நாள் ஒன்றுக்கு ரூ. 1,000/- நிரந்தர முதலீடு செய்யப்பட வேண்டும் என நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அதன் அடிப்படையில் மனோரமா தேவி சோமானி என்பவரால் 365 நாட்களுக்கும் 3,65,000/- டெபாசிட் செய்யப்பட்டு கட்டளை நடைபெற்று வருகிறது.



மேற்படி கட்டளை, பூஜைக்கான கட்டளை மட்டுமே ஆகும். உங்கள் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளது போல், அதற்கும் தயிர்சாத விநியோகத்திற்கும் எந்தவிதத் தொடர்புமில்லை.

தயிர் சாதக் கட்டளை நடத்த பணம் செலுத்தியிருந்த சிலருக்கு, மேற்படி திட்டத்தை மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதான திட்டத்துடன் இணைத்து செயல்படுத்தவுள்

ளோம் என விளக்கி அறிவிப்பும் அனுப்பப்பட்டது. கடந்த பதினைந்து மாதங்களாக இது குறித்து எவரிடமிருந்தும் மறுப்பு ஏதும் வரப்பெறவில்லை. அன்னதானத் திட்டமும் சிறப்பான முறையில் பொது சேவார்த்திகள் ஆதரவுடன் நன்கு நடைபெற்று வருகிறது.

மூலஸ்தானத்தில் இரண்டு தொங்கு விளக்குகளும் ஒரு திருமுன் குத்து விளக்கும் நிறுவப்பட்டுள்ளது. திட்டப்படி மேற்படி இரு தொங்கு விளக்குகளுக்கும் நாள் ஒன்றுக்கு 1½ கிலோ நெய்யும், திருமுன் குத்துவிளக்கிற்கு நாள் ஒன்றுக்கு 3½ கிலோ விளக்கெண்ணெயும் இட்ட அனுமதிப்படி வழங்கப்பட்டு வருகிறது. மேற்படி விளக்குகள் அனைத்திற்கும் நெய் வழங்க, பொது மக்களிடமிருந்து நிரந்தர வைப்புத் தொகை தற்போது பெற நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. உங்கள் கட்டுரையில் தெரிவித்துள்ளது போல் நெய்க்காக எவரும் தொகை ஏதும் திரட்டித் தரவில்லை.

தினந்தோறும் காலநிர்ணயப்படி பிற்பகல் 1.00 மணியிலிருந்து 2.00 மணி வரை உச்சிக்கால பூஜை நடைபெற்று வருகிறது. நிர்ணயிக்கப்பட்டுள்ள ஒரு மணி நேர கால அவகாசம், மேற்படி பூஜை நடத்தப் போதுமானது. அதன்படியே எந்தவிதத் தாழ்வுமின்றி உரிய பூஜை நடத்தப்பட்டு வருகிறது. அரை மணி நேரத்திற்குள் மேற்படி பூஜையை நிறைவு செய்யுமாறு கட்டளை ஏதும் இடப்படவில்லை.

இத் திருக்கோயில் நிர்வாகம் ஸ்ரீ ராமானுஜர் ஏற்படுத்திய நிர்வாகத் திட்டப்படி நடைபெற்று வருகிறது. தமிழ்நாட்டில் எந்த திருக்கோயிலிலும் இல்லாத சிறப்பு, கால நேரப்படி பூஜைகள் நடைபெறுவது மற்றும் உற்சவங்கள் புறப்பாடு ஆவதும் இத் திருக்கோயிலின் தனித்தன்மையாகும். இத் திருக்கோயிலின் அங்கீகரிக்கப்பட்ட திட்ட அளவுகளின்படி சாமான்கள் நீண்ட காலமாக வழங்கப்பட்டு பிரசாதங்கள் தயாரிக்கப்பட்டு, நிவேதனம் செய்யப்பட்டு வருகிறது. எக்காரணத்தைக் கொண்டும் திட்டம் ஏதும் குறைக்கப்படவில்லை என்பது தெரிவித்துக் கொள்ளப்படுகிறது. பதினைந்து ஆண்டுகளாகப் பொருட்களைப் பாதி குறைத்து விட்டதாகத் தெரிவித்துள்ளது உண்மைக்கு மாறானது.

முகப்பு நுழைவு வாயிலின் முன்பு சேவார்த்திகள் வாகனங்களை விட்டுச் செல்ல கொட்டகை போடப்பட்டு, பணியாளர்கள் மூலம் பாதுகாப்பாக வாங்கி வைத்துப் பாதுகாப்பாகத் திரும்பக் கொடுக்கப்பட்டு வருகிறது. மேற்படி இடம் சேவார்த்திகள் வாகனங்களை நிறுத்திச் செல்லவே போதுமானதாக உள்ளது. இந் நிலையில் திருக்கோயிலில் பணியாளர்கள் கொண்டு வரும் வாகனங்களைத் திருக்கோயில் ஒதுக்குப்புற இடமாக உள்ள கிழக்கு வாயில் சேஷராயர் மண்டபத்தில் நிறுத்தி எடுத்துச் செல்லப்படுகிறது. அவ்வாறு கொண்டு வரப்படும் வாகனங்களும் கிழக்கு வெள்ளை கோபுர வாயிலுக்கு வெளியிலேயே நிறுத்தப்பட்டு, தள்ளிக் கொண்டு வந்து சேஷராயர் மண்டபத்தில் நிறுத்தப்படுகிறது. வாகனத்தில் அமர்ந்து வருவதாகத் தெரிவிக்கப்பட்டுள்ள செய்தி தவறானது. மேலும் இணை ஆணையர் - செயல் அலுவலர் காரில் அமர்ந்து அலுவலகம் வரை வருவதாகக் குறிப்பிட்டுள்ளதும் கற்பனையான செய்தி. முகப்பு வாயிலின் முன்பு காரை நிறுத்தி அதிலிருந்து இறங்கி நடந்து அலுவலகத்திற்கு வருவதே எப்போதும் நடைமுறையில் உள்ளது. மேலும், தற்போது திருக்கோயில் பணியாளர்கள் சேஷராயர் மண்டபத்தில் வாகனம் நிறுத்துவதற்கும் அனுமதிக்கப்படுவதில்லை.

''ஆபீசுல தூங்கறதையே விட்டுட்டீங்களாமே...ஏன்?''

''டிஸ்மிஸ் ஆகற மாதிரியே கனவு வருது!''

— அம்பை தேவா

சேவார்த்திகள் வசதிக்காக தெற்கு உத்தர வீதியில் கட்டணக் கழிப்பிடம் ஒன்று செயல்பட்டு வருகிறது. அதற்கென தனிப் பணியாளர்கள் ஒதுக்கீடு செய்யப்பட்டு, நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. செப்டிக் டேங்க் அவ்வப்போது மாநகராட்சி உதவியுடன் சுத்தம் செய்யப்பட்டு, டேங்கர்கள் மூலம் கழிவு நீர் வெளியே அனுப்பப்பட்டு வருகிறது. ஒருசில நேரங்களில் எதிர்பாராது கசிவு ஏற்பட்டு அது தெரியவந்ததும், உடனடியாக மாநகராட்சி மூலம் அப்புறப்படுத்தப்பட்டு வருகிறது.

வசந்த மண்டபம் தரைமட்டமாக இடிக்கப்பட்டதாகத் தெரிவித்துள்ளது பொய்யான தகவல். வசந்த மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளும் இடத்தைச் சுற்றி அமைந்துள்ள சுவரில் உள்ள ஜன்னல்கள் கரையான் பிடித்துச் சிதிலமடைந்து இருந்ததாலும், மேற்படி அடைப்பினால் பொதுமக்கள் பெருமாளை சேவிக்க வசதியின்றி இருந்ததாலும், உபயதாரர் மூலம் ஜன்னல்களை மட்டும் அப்புறப்படுத்தி, அனைவரும் சௌகரியமாக சேவிக்கும் வகையில் ஏற்பாடு செய்யப்பட்டது. 06.06.2003 முதல் வசந்த உற்சவம் நடைபெறவிருப்பதை

முன்னிட்டு வசந்த மண்டபம் முழுவதும் சுத்தப்படுத்தப்பட்டு, மிகவும் சிறப்பான முறையில் பொதுமக்களின் அமோக வரவேற்புக்கிடையில் 06.06.2003 முதல் 14.06.2003 முடிய நடைபெற்றது.

இத் திருக்கோயிலில் தினந்தோறும் காலை முதல் இரவு வரை நிர்ணயிக்கப்பட்ட நேரங்களின் படி 10½ மணி நேரம் சேவார்த்திகள் சேவைக்கு அனுமதிக்கப்படுகிறார்கள். மேற்படி நேரங்களில் கட்டணச் சேவை மற்றும்



தர்ம சேவை ஆகியவை தனித்தனியே நிர்ணயிக்கப்பட்டு அனுமதிக்கப்படுகிறது. கட்டண சேவைக் காலங்களில் மட்டும் வரிசையில் சென்று சேவிக்க நபர் ஒருவருக்கு ரூ. 2/- கட்டணம் வசூலிக்கப்படுகிறது. சேவை நேரங்களில் சிறப்பு வழியில் சென்று சேவிக்க விரும்புபவர்களுக்கு நபர் ஒருவருக்கு ரூ. 10/- கட்டணம் வசூலிக்கப்படுகிறது. நிர்வாகச் செலவினம் மிக அதிகமாக உள்ள திருக்கோயிலானதால், செலவினத்திற்கான பிரதான வருமானங்களாக, உண்டியல் மூலம் கிடைக்கும் தொகை மற்றும் கட்டணச் சீட்டுகளின் மூலம் கிடைக்கும் தொகையே உள்ளது. இருப்பினும் சேவார்த்திகள் நலன் கருதி கட்டணச் சேவை, தர்ம சேவை ஆகிய இரு சேவைகளுக்கும் தனித்தனியே நேரம் நிர்ணயிக்கப்பட்டு, கட்டணம் நடைமுறை படுத்தப்பட்டு வருகிறது. இது குறித்து பொது மக்களிடமிருந்து எந்தவித ஆட்சேபணையும் இல்லை. திருமஞ்சனமும் கிரமமாக நடைபெற்று வருகிறது.

ஆகம விதிகளின்படி தேவைக்கேற்ப பலிபீட திருமஞ்சனம் நடத்துவது நடைமுறையில் உள்ளது. இத் திருக்கோயிலில் ஆண்டில் பெரும்பகுதி உற்சவம் நடைபெறுவதாலும், உற்சவக் காலங்களில் பலிபீட திருமஞ்சனம் நடத்த விதிகளின்படி இயலாது என்பதாலும், அதனை அனுசரித்து செய்யத் தகுதியான நேரங்களில் செய்யப்பட்டு வருகிறது. பதினைந்து ஆண்டுகளாக நடைபெறவில்லை எனக் குறிப்பிட்டுள்ளது முற்றிலும் உண்மைக்கு மாறான செய்தியாகும்.

கடந்த சுமார் எட்டு மாதக் காலமாக இத் திருக்கோயில் இணை ஆணையர் செயல் அலுவலர் பணியிடம் திருச்சி மண்டல இணை ஆணையருக்குக் கூடுதல் பொறுப்பாக ஒதுக்கப்பட்டு, நிர்வகிக்கப்படுகிறது. திருச்சி மண்டலப் பணிகளைக் கவனிக்க முகாம்கள் செல்ல வேண்டியிருப்பதாலும், இரு அலுவலக நிர்வாகப் பணிகளைக் கவனிக்க வேண்டியிருப்பதாலும், முழு நேரம் திருகோயிலில் இருக்க இயலாது. கல்கி நிருபர் கோயில் அலுவலகத்திற்கு வந்து, மேலாளரைத் தொடர்பு கொண்டு, விவரங்களைத் தெரிந்து உண்மை நிலையறிந்து செய்தி வெளியிட்டிருக்கலாம். அல்லது இணை ஆணையர் செயல் அலுவலர் இருக்கும் நேரம் அறிந்து, சந்தித்து விவரங்களைக் கோரிப் பெற்றிருக்கலாம். அதை விடுத்து திருக்கோயில் பேரில் தவறான எண்ணம் கொண்டவர்கள் திருக்கோயிலுக்குக் கெட்ட பெயர் ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் வாய்மொழியாகத் தெரிவித்த, உண்மையற்ற, முற்றிலும் கற்பனையான தகவல்களைக் கொண்டு கட்டுரை வெளியிட்டுள்ளார்.

எனவே இவ்வறிவிப்பு கிடைத்த பதினைந்து தினங்களுக்குள் மறுப்பு வெளியிடுவதுடன், வருத்தம் தெரிவிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்படுகிறது. தவறினால் தங்கள் பெயரில் மான நஷ்ட வழக்குத் தொடரப்படும் என்பதை இவ்வறிவிப்பின் மூலம் தெரிவித்துக் கொள்வதுடன், அதனால் ஏற்படும் சகல நஷ்டங்களுக்கும் தாங்களே பொறுப்பாளியாவீர்கள் எனத் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

— ஆர். நாராயணன்,
வழக்கறிஞர்,
திருச்சி - 620 003.

15.6.2003 கல்கி இதழில் குறிப்பிட்டுள்ளபடி துணை ஆணையரை பேட்டிக்கு நாம் அணுகினோம். அச்சயம் பேட்டிக்குத் தயாராயில்லை என அவரது மானேஜர் வாயிலாக பதில் கிடைத்தது. அப்போதே மறுப்புகள் கூறப்பட்டிருப்பின் அவற்றை வெளியிட்டிருப்போம். இப்போது இதனை வெளியிடும் நிலைமை ஏற்பட்டுள்ளதற்கு வருந்துகிறோம்.

— ஆர்.

‘ஸண்டே எக்ஸ்பிரஸ்’ கட்டுரையொன்றில் அண்மையில் வெடித்துக் குமுறியிருக்கிறார் மேனகா காந்தி. ‘இரத்தத்தை உறைய வைக்கும் உண்மை’களைப் படிக்கிறபோது நமக்கு மூச்சே நின்று விடும் போலிருக்கிறது.

‘ஆக்ஸிடாஸின்’ என்பது பெண்களுக்குப் பேறு காலத்தில் பிரசவத்தைத் தூண்டுவதற்காகவும், பால் சுரப்பை அதிகப்படுத்துவதற்காகவும், டாக்டர்கள் பயன்படுத்துகிற ஒரு மருந்து; கருப்பையைச் சுருங்க வைத்துக் குழந்தை பிறப்பதை விரைவுபடுத்தக் கூடியது. அந்த வேதனையை ஆடவர்களால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது.

ஆக்ஸிடாஸின் ஒரு ஹார்மோன். இந்த மருந்தை மிகவும் மோசமான அவசர நிர்பந்தங்களில், அதுவும் ஒரு மகப்பேறு நிபுணர் மட்டுமே பயன்படுத்த வேண்டும் என்று மருந்து தயாரிப்பாளர்கள் எச்சரிக்கை செய்கிறார்கள். தவறாக இந்த மருந்து செலுத்தப்பட்டால், பெண்களின் கருப்பையே சிதைவுற்று விடும் (Rupture) என்கிறார்கள்.

# மாட்டுக்கு ஊசி மனிதனுக்கு நோய்!

“இந்த அபாயகரமான மருந்தைத் தினமும் நீங்கள் உட்கொள்கிறீர்கள் என்பது தெரிந்தால் எப்படியிருக்கும்?” என்று கேட்கிறார் மேனகா காந்தி.

இதே ஊசி மருந்தைப் பசு மாட்டுக்கும் எருமைக்கும் தினமும் இரண்டுமுறை செலுத்துகிற கொடுமையைப் பல பால்காரர்கள் செய்து வருகிறார்கள். இந்த ஊசி மருந்து, வாயில்லாப் பிராணியான மாடுகளின் கருப்பையை சுருங்கிப் போகச் செய்கிறது. அதனால் பால்சுரப்பு அதிகமாகிறது. அத்துடன் நில்லாமல் மாடுகள் மறுபடியும் சினை பிடிக்கும் வாய்ப்பையும் இழந்து மலடாகிவிடும். எல்லாம் எதற்காக? கறவை மாடுகளின் இயல்பான வாழ்நாளில் பத்தாண்டுகளைக் குறைத்துச் சீக்கிரத்திலேயே, இறைச்சிக்கான விலங்குகளாக அவற்றை விற்றுப் பணம் பார்ப்பதற்காக!

இந்த ஆக்ஸிடாஸின் மருந்து, நாம் பருகும் பாலில் சேருவதன் மூலம், மனிதர்களிடையேயும் மலட்டுத் தன்மை, கருப்பைப் புற்றுநோய், பெண்களுக்கு மிகையான உரோம வளர்ச்சி, ஆடவர்களுக்குத் தலை வழுக்கையாதல், விரைவான அல்லது தாறுமாறான மாதவிலக்கு, ஆண் - பெண் இரு பாலாருக்கும் விரைவான மார்பக வளர்ச்சி எல்லாம் ஏற்படக் காரணமாகிறதாம். முக்கியமாகக் குழந்தைகளுக்குப் பார்வைக் கோளாறுகள் ஏற்படுகின்றன. பெண்களுக்கு மலட்டுத் தன்மை ஏற்படுவதுடன், இந்தப் பாலை அருந்துகிற கருவுற்ற தாய்மார்களுக்கு, இரத்தப் போக்கு ஏற்படும் ஆபத்தும் அதிகம் என்கிறார் மேனகா காந்தி.

இந்தியா முழுவதும் விற்கப்படுகிற மாட்டிறைச்சியைச் சோதித்துப் பார்த்ததில் இந்த நச்சுப்பொருள் நிறையச் சேர்ந்திருப்பது தெரிய வருகிறதாம்.

இந்தியாவில், விலங்குகளுக்கு ஆக்ஸிடாஸின் செலுத்துவது தடை செய்யப்பட்டிருக்கிறது. இது ‘ஷெட்யூல் ஹெச்’ மருந்து என்று குறியிடப்பட்டு, டாக்டர்களின் மருந்துச் சீட்டில்லாமல் விற்பனை செய்யக் கூடாது என்றும் கட்டுப்படுத்தியிருக்கிறார்கள்.

மனிதர்களுக்கான இந்த மருந்து பதினைந்து ரூபாய் விலையில் விற்கப்படுகிறது. ஆனால் கறுப்புச் சந்தையில், பால் பண்ணைகளுக்கு அருகேயுள்ள கடைகளில், மொத்த விலை அடிப்படையில் வெறும் ஐம்பது காசுக்கும் குறைவாகவே இதை வாங்க முடிகிறது என்பது ஆபத்தின் உச்சம்!

‘பால்வளம்’ அதிகமான ஹரியானா, பீஹார் போன்ற மாநிலங்களில் உள்ள கடைகளுக்கு மொத்தமாகவே பெட்டிகளில் அனுப்பி விடுகிறார்களாம். அங்கே தகரக் கூரைக் கொட்டகைத் தொழிற்சாலைகளில் ‘கால்நடை ஆக்ஸிடாஸின்’ என்கிற பெயரில் சிறு சிறு குப்பிகளில் அடைத்துப் பால் பண்ணைகளுக்கு அனுப்பி விடுகிறார்

களாம். சிறிய மருந்துக் கடைகளில் கூட தாராளமாய் இந்த மருந்து கிடைக்கிறதாம்.

மருந்துக் கட்டுப்பாட்டு அதிகாரிகள் தடை செய்திருந்த போதிலும், கால்நடை மருத்துவத்துறை இதை ஊக்கப்படுத்துகிறதாம்.

அரசாங்கத்தின் இரண்டு துறைகள் - நல வாழ்வுத் துறையும் கால்நடைப் பராமரிப்புத் துறையும் வெவ்வேறு திசைகளில் போவதால், இந்த மருந்து விவகாரத்தில் ஒன்றும் நடைபெறப் போவதில்லை என்கிற மேனகா காந்தி, நம்மையே பால் பண்ணைகளுக்குப் போய்ப் பார்க்கச் சொல்கிறார்.

மாடுகளின் உடம்பில் சிராய்ப்புக்களோ வடுக்களோ காணப் பட்டாலும், பயன்படுத் தப்பட்ட மருந்துக் குப்பி





களோ, ஊசிகளோ கண்ணில் பட்டாலும், அங்கே ஆக்ஸிடாஸின் பயன்படுத்துவதை அறியலாம். மிருகவதைத் தடுப்புச் சட்டத்தின் பன்னிரண்டாம் பிரிவின்படியும், உணவுப் பொருட்கள் கலப்படத் தடுப்புச் சட்டம், மருந்துக் கட்டுப்பாட்டுச் சட்டங்களின் கீழும் மருந்து விற்கிறவனையும், பால் பண்ணைக்காரரையும் ஐந்து ஆண்டுகள் உள்ளே தள்ள முடியும். காவல் துறைக்கு, மருந்துக் கட்டுப்பாட்டு அலுவலகத்துக்கு அல்லது பொதுமக்கள் குறை தீர்க்கும் துறைக்கு உடனே தெரிவிக்கச் சொல்கிறார்.

**- சுப்ர.பாலன்**

*நன்றி : 'தி நியூ ஸண்டே எக்ஸ்பிரஸ்'*



# 'கால்' பிரச்னையில் 'கை'யில்லை!

போரிவிலி ட்ரெயினில், பெண்கள் கம்பார்ட்மெண்டில் ஒரு 'ப்ளாஸ்டிக் பாக்'கிலிருந்து திடீரென்று புகை கிளம்ப, உள்ளே யிருந்த மூன்று ஸ்கூல் டப்பாக் களில், ஒன்றில் ஆவி பறக்கும் ஜாமூன்... மற்றொன்றில் ஒன்றுமே யில்லை, மூன்றாவதில் டப்பா கருகிப்போன அடையாளம்... பிரச்னை இன்னும் தீர்ந்த பாடில்லை! 'மஹாராஷ்ட்ரா காலேஜ் ஆஃப் ஆர்ட்ஸ் சயன்ஸ் அண்ட் காமர்ஸில்' உள்ள ஏழு மாடிகளுக்காக இயங்கும் இரண்டு எஸ்கலேட்டர்களில் ஒன்று நெடுநாட்களாக பழுதாகிப் போய்க் கிடக்க, இருக்கும் ஒரு எஸ்கலேட்டரை பெண்கள் மட்டுமே உபயோகிக்கலாம் என்று நிர்வாகம் முடிவெடுத்ததில் ஆண் மாணாக்கர்களுக்குப் பிரச்னை! சாதாரணமாக இங்கே எல்லாக் கல்லூரிகளிலும் பி.எஸ்ஸி., வகுப்புகளில் இரண்டு மடங்கு மாணவர் களைத்தான் சேர்ப்பார்கள்... இன்ஜினியரிங் மெடிக்கல் காலேஜ்கள் திறந்தவுடன் இதில் பாதிக்கு மேல் வடிந்து விடும்! இம் முறை பின்னவை இன்னும் திறக்கப்படாமலிருக்க, சாதா டிகிரி வகுப்புகள் மாட்டுக் கொட்டில் களாக மாறி, ஏக இடப் பிரச்னை!

இப்படி அரைக்கால் பிரச்னைகள் வேர் விட்டுக் கொண்டே இருக்க, மும்பைக் காரர்களையே கலக்கிக் கொண்டிருக்கும் தலையாய பிரச்னை... கால் பிரச்னை! ஆம் விவேக் ஓபராயின் கால் பிரச்னை! மணி ரத்னம் படத்திற்காக கொல்கத்தாவில் 'ஷூட்' பண்ணிக் கொண்டிருந்தவரை, இப் படிக் கால்கட்டுப் போட்டு இந்துஜாவில் படுக்க வைத்து விட்டார்களே? இப்போது தான் ஐஸ்"க்காக இதே ஆஸ்பத்திரியில் இதே டாக்டரிடம் குசலம் விசாரித்த மாதிரி இருக்கிறது; அதற்குள் விவேக்கையே அறுவை சிகிச்சைக்கு ஆளாக்கி, ஆக்ஸிஜன் மாஸ்க் உதவியுடன் ஐ.சி.யூவில் சுவாசிக்க வைத்து, விசிறிகளை எல்லாம் படபடக்க வைத்து விட்டார்களே? வாஜ்பாய்க்கு அடுத்தபடியான (மேற்படியான?) விலை மதிப்பிட முடியாத கால் விவேக்கினுடை யதுதான் என்பதாக மீடியா முனக, கவலை தோய்ந்த முகங்களுடன் தந்தை சுரேஷ் ஓபராய், தாய் யசோதா, சகோதரி ஆகியோர் கலங்க, இவர் கால் பிரச்னையில் என் 'கை'யில்லை என்று சல்மான் கதற, விவேக்கை நம்பி நாலு படங்களில் பணம்

போட்டிருக்கும் தயாரிப்பாளர்கள் கண்ணீர்க் கடலில் மூழ்கியே விட்டார்கள்.

மூழ்கியே விட்டதாக நாம் நினைத்துக் கொண்டிருக்கும் காதல் கூட துளிர்த்தெழ வாய்ப்பிருக்கிறது. அட, ரியல் லைஃபில் இல்லை என்றால் ரீல் லைஃபில்! பாருங்களேன்... சல்மானும் ஐஸ்வர்யாவும் இணையப் போகிறார்கள்... இணைக்கப் போவது நந்தி.. ஆம் ப்ரிதீஷ் நந்தி! பாட்டுகள் ரீமிக்ஸ் ஸாகி புதுப்பிறவி எடுப்பது போல், இப்போது படங்களும் ரீமேக்காகி வர இருக்கின்றன. குரு தத்தின் பழைய 'சாஹேல் பீபி அவுர் குலாம்'தான் நந்தி தயவில் புனர் ஜன்மமெடுத்து, சல்மான் ஐஸ் காதலைத் திரையில் புதுப்பிக்கப் போகிறது. இதுபற்றி சல்லுவும் ஐஸூம் என்ன கதைக்கிறார்கள்..? ப்ரீதிஷ் நந்தியும் தீபா மேத்தாவும் அறிவித்து விட்டால், அது உண்மையாகத் தானிருக்குமாம்!

"உண்மையா? இல்லை இல்லை! சுத்தப் பொய்" என்று அலறுகின்றனர் காவிப் படையினர்! எதைப் பற்றி என்கிறீர்களா? எல்லாம் நம் சல்மான் ஸ்ரீராமராக நடிக்கப் போவது பற்றித்தான். மானைத் துரத்துவதில் சல்மானை யார் விஞ்ச முடியும் என்று நினைத்தோ என்னவோ, பண்டிவாலியா, தன் 'ராமாயண'ப் படத்தில் இவரை ஸ்ரீராமனாக்குவதாக இருந்தாராம். அதை ஒட்டி சல்மானுக்கு ஓரே ஃபோன் மிரட்டல்களாம்; வாலியாவுக்கும்தான்! சல்மான் போலீஸ் கம்ப்ளெயிண்ட் கொடுக்காவிட்டாலும் மிரட்டல்கள் உண்மைதான் என்கிறார். காவிப் படையால் ஒரு முஸ்லிமை ராமனாக ஏற்க முடியுமா என்கிறார்; வாலியா வாயே திறக்கவில்லை! கப்சாப்பாக சல்மானை ராமராக்கும் முயற்சியைக் கைவிட்டு விட்டாராம்! மறைவுத் தாக்குதல்களுக்குத் தன்னை பலியிட, இவரென்ன இராமாயண 'வாலி'யா? மும்பை வாலாங்க!

மும்பை வாலாக்களுக்கு இது ஃபாஷன் காலம்... ஆமாம்! லக்மே இண்டியா ஃபாஷன் வீக் ஆரம்பித்து விட்டதே? பெண் மாடல்களைப் பற்றிச் சொல்லலாமா? ஆஹா... நீண்ட கூந்தலும், கண்களில் மையும், நெற்றியில் சிந்தூரமும், தழையத் தழைய பாதம் வரை உடுத்திய நீண்ட ஜிப் வைத்த கற்புக்கரச ஸ்கர்ட்டுகளும்... ஐயோ சத்தியமா ஆண்களைப் பற்றித்தாங்க சொல்லிக்கிட்டிருக்கோம்... ரோஹித் பாயின் 'Asian Nomad Collection' ஐப் பார்த்தவர்கள் இனி பெண்களின் ராஜ்ஜியம்தான்.. நோ... நோ... ஆண்களின் ராஜ்ஜி.. நோ... நோ... பெண்... ஓ.. நோ... No mad Collection' ப்ளீஸ்!

'ப்ளீஸ்! என்னை விட்டு விடுங்கள்; வர்ல்ட் கப்புக்குப் பிறகு என் 'இமேஜ்' எக்கச்சக்கமாக உயர்ந்து விட்டது! இனி என்னால் வில்லித்தனமான பாத்திரங்களில் நடிக்க முடியாது' என்று வீறாப்பாகச் சொல்லி விட்டு, பிரபல 'ஸாஸ் பி கபி பஹூ தி' டீ.வி சீரியலிலிருந்து விலகி



• மருத்துவமனையில் விவேக் ஓபராய்

விட்டார் மந்திரா பேடி. 'உண்மையில் இந்தப் பாத்திரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக நல்லவளாக்கப் போகிறேன்' என்று வாக்குக் கொடுத்திருந்தார்கள்; ஆனால் கண்டுகொள்ளவேயில்லை; என் நல விரும்பிகளுக்கெல்லாம் சங்கடமாகி விட்டது; அதுதான் இந்த ரோலை வேண்டாம் என்று விட்டு விட்டேன்' என்று ஆணித்தரமாகச் சொல்கிறார்.

— ஜெய்ஸ்ரீ ராஜ்



# குல்லு மல்லு

–கதிர்










(சிறிது நேரத்துக்குப் பிறகு)









# கிளிகளும் மைனாக்களும் வளர்க்கப்படுவது குறித்து...

அன்பை
விளம்பி
முடித்துவிட்டார் ஏசு!
புத்தர் வந்து
காவி பண்ணிவிட்டார் கருணையை!
அன்றே கணித்துச்
சொல்லியாயிற்று கணியன் பூங்குன்றனார்!
இன்னும் அழியாமல் இருக்கின்றன
கோபதாபங்கள், குரோதங்கள், வன்மங்கள்!
கூடவே இயன்ற அளவுக்கு
பிரியம் பாசம் பரிவு!
கிளிகளையும் மைனாக்களையும்
வளர்ப்பதன் பின்னணி
இதுபோலத்தான் இருக்கும்!

✓ விக்ரமாதித்யன்

# புக் பேங்க்

2002-ம் ஆண்டுக்கானவை மட்டுமல்ல!

வானதி பதிப்பகம், 13. தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17. விலை ரூ. 45/-

## கலை உலக சக்ரவர்த்திகள்

**- எஸ்.எம். உமர்**

தேர்ந்தெடுத்த பத்துப் பேர். பத்துப் பேரும் முத்திரை பதித்த கலைஞர்கள். வாழ்வையே திரைக்கதையாக வாழ்ந்து, சோகமும், வீரமும், காதலும், நகைச் சுவையும் கலந்த காவியங்களைப் படைத்தவர்கள். இவர்களின் வாழ்வுகளோடு தமிழ்த் திரையுலகின் வரலாறு பிரிக்கவே முடியாமல் பின்னிக் கிடக்கிறது. இவர்களின்றி அதற்கு வரலாறும் கிடையாது. அந்த அரிய கலைஞர்களின் வாழ்க்கைத் தொகுப்பு.

**அல்லயன்ஸ், 244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலை, சென்னை-4. விலை ரூ. 200/-**

## சூளுரைத்த சுடர்க்கொடி

**- சி.வி. சிவராமகிருஷ்ண சர்மா**

பாரதியின் பாஞ்சாலி சபதத்தை இன்னும் எளிதான சொற்களில் வடித்த மாற்றுக் குறையாத மாற்றுப் பதிப்பு. 'துரியோதனாதிகளை முடிக்கும் வரை முடியேன் தலைமுடியை' என்று முடியா மல் நின்றவளின் சபதத்தை முடித்து வைத் தவன் நெடியோன் பரந்தாமன். அந்தப் பரந்தாமன் காட்டிய பாதை கீதை. அந்த ஐந்தாவது வேதத்தில் சாரமும் இணைந்த ஆன்மிகப் பெட்டகம்.

**சாரதா புக் பப்ளிஷர்ஸ், நேதாஜி ரோடு, ஒசூர். விலை ரூ.30/-**

## தொலைந்தவன்

**தொகுப்பு - இலக்கியச் சிந்தனை**

வேட்கையின் இருப்பே தேடலின் ஆதாரம். தேடல் எவ்வழியானாலும் கிடைப்பது உயர்ந்த பொருளானால் தேடல் காவியமாகி விடுகிறது; குறைந்த பட்சம் நல்ல கதையாகவாவது ஆகிறது. மனத் தேடல்களைக் காணும் மனிதத் தேடல்களான, பல்வேறு இதழ்களில் வெளியான பரிசுக் கதைகள். இவை

## அஜந்தாவும் எல்லோராவும்

**– ஓவியர் ஆழி**

1500 ஆண்டுகளுக்கு முன்பே சீனத்து யுவான் சுவாங் வந்து பார்த்து, வியந்து, பிரமித்துப் பதிவு செய்த கலை. சிற்பமும் ஓவியமும் சிகரத்திலிருந்த காலத்தில், காலத்தால் அழியாத காவியங்களை ஓவியமாகவும் சிற்பங்களாகவும் வடித்து வைத்த வற்றை ஓர் ஓவியராகக் கண்டு வரைந்த நூலோவியம்.

**சித்ரகலா பதிப்பகம், ஆழியூர், நாகை. விலை ரூ. 45/-**

## சங்கப்பேழை

செந்தமிழின் வழித்தடம் மிகமிகத் தொன்மை யானது, வளமானது, இனிமையானது, தமிழர் வாழ்வோடு இயைந்தது. காதலும் வீரமும் கலங்கரை விளக்கமாய், காவியங்களும் கற்பனைகளும் ஓயாது அலைவீசும் கடல் அது. பழம்புலவரின் எண்ணப் புதையல்களை எடுத்துக் கூறும், வாழ்வியலை வடித்துக் கூறும் காவியங்களின் களஞ்சியம். தமிழைக் காக்கவும், மீட்கவும் வேட்கையுள்ளவர் காண வேண்டிய நூலிது.

**ரமணி பரந்தாமன், 19, முதன்மைச் சாலை, விஜயலட்சுமிபுரம், சென்னை - 53. விலை ரூ.35/-**

**– விஷ்வக்**

# கணபதி Vs











'சாமி' படத்தில்
எஸ்.ஜ. ரமேஷ் கண்ணாவுக்கு ஏற்ற
கான்ஸ்டபிளாக வந்து கலக்கிய
நகைச்சுவை நடிகர் ஜெயமணிக்கு
ஏகப்பட்ட கண் திருஷ்டியாம்! கடகடவென்று
படக் கடைக்கு நடந்து, கண் திருஷ்டி கணபதியை வாங்கித்
திரும்பிய ஜெயமணியை நோட்டம்
விட்டார் நமது புகைப்பட நிபுணர் ஹரி.
இனி கணபதி Vs ஜெயமணி.

**கணபதி** : *டேய் ஜெயமணி! நீயே திருஷ்டி பொம்மை மாதிரிதானே இருக்கே! அப்புறம் எதுக்கு எம் படம்?!*

**ஜெயமணி** : *ஏது?! திருஷ்டிப் பூசணிக்காய் மேலே வரையிற மூஞ்சிக்கு நான்தான் மாடலிங் பண்ணினேன்னு சொல்லுவ*

# ஜயமணி











போல இருக்கு!

**கணபதி** : சரி! சரி! கடவுள் பக்தனா இருக்கிறதை வுட்டுப்புட்டு, காங்கிரஸ்காரனா ஆகிடப் போறோம்...! நமக்குள்ளே சண்டை வேண்டாம்; காரியத்தைக் கவனி!

**ஜெயமணி** : எல்லார் கண்ணுலே

யும் படுற மாதிரி உன்னை வரவேற்பறையிலே மாட்டப் போறேன்!

**கணபதி** : மாட்டறது தான் மாட்றே, காத்து வர திசையில மாட்டு... ஆவியில வைச்ச குழக்கட்டை மாதிரி புழுங்கித் தள்ளுது இங்கே...

**ஜெயமணி** : அப்பாடி! குழக்கட்டை செய்யற வேலை எனக்கு மிச்சமாச்சு.

இடத்தில் குமிழையும், குமிழ் இருக்க வேண்டிய இடத்துலே கூரையும் செஞ்சுட்டான்.

**கணபதி** : அட, அசடே! பிரச்னை ரொம்ப சிம்பிள்! ஆணியோட கூர் எந்த திசையைக் காட்டுதோ, அந்தத் திசையிலே இருக்கிற சுவத்துலே போய் ஆணியை அடிக்க வேண்டியதுதானே!

**ஜெயமணி** : கலக்கிபுட்டே கணபதி காட்! எதுக்கும் கொஞ்சம் கூர் தீட்டிக்கிறேன்.. இல்லேன்னா அரசு ஊழியர் மாதிரி அவஸ்தைப் படணும்.

**கணபதி** : பார்த்து ஆணியை இறக்கு! அவங்களுக்கு ஜூலை மாசச் சம்பளம் 'கட்டா'ன மாதிரி உன் கை 'கட்'டாகிடப் போகுது!

**ஜெயமணி** : ஆ! ஆ! அம்மா! கை போச்சே!

**கணபதி** : அடப்பாவி! 'அம்மா'ங்கிறே! 'கை'ங்கிறே! நல்லபடியா நடிச்சுப் பொழைக்கிறதை விட்டுட்டு எதுக்குடா உனக்கு ஆபத்தான அரசியல்?

**ஜெயமணி** : இந்தக் கிண்டல் தானே வேண்டாங்கிறது! சுவத்துலே ஆணி அடிக்கவே அல்லாடுறேன். இதுலே அரசியல் ஒரு கேடா!

**கணபதி** : டேய்! சத்தம் போடாதே! அரசியல் ஒரு கேடுகெட்டத் துறைன்னு சொல்லி, அதன் புனிதத் தன்மையை களங்கப்படுத்திட்டதா உம்மேல கேஸ் ஃபைல் பண்ணிடப் போறாங்க!

**ஜெயமணி** : உணர்ச்சி வசப்பட்டுட்டேன்! குடும்பப் பிரச்னையாகக் கருதி மன்னிக்க வேண்டும்ன்னு சரணாகதி அடைஞ்சுடுவேன்.



"என்னோட காதலிக்கு ரொம்ப ஸயண்டிஃபிக் மைண்ட்!"

"கொடுத்து வைச்சவன்டா, நீ!"

"நீ வேற... என்னோட நெஞ்சில் அவதான் இருக்காங்கறதை எக்ஸ் - ரே எடுத்துக்கிட்டு வந்து காட்டினாத் தான் நம்புவேன்னு சொல்றாப்பா!"

- ஆர். வேல்முருகன்

**கணபதி** : ஆனா, ஆணி அடிக்கற வேலை இருக்கு, அதை மறந்துடாதே...

**ஜெயமணி** : சாமி! இந்த ஆணியைத் தயாரிச்சவன், கூர் இருக்க வேண்டிய

**கணபதி** : ஆ! நிதிஷ்குமார் மாதிரி அந்தர்பல்டி அடிச்சுட்டியே!

**ஜெயமணி** : பல்டி மட்டுமா, ஆணியும் கூட அடிச்சு சாதிச்சுட்டேன்! சக்ஸஸ்!

கற்பனை : ஜெய்
படங்கள் : ஸ்ரீஹரி



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 14 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 180 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (180 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்

நிறுவனர்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

A. ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.



ஆண்டு முழுவதும் பனிப் பாறைகளால் சூழப்பட்டுள்ள அண்டார்டிகா கண்டத்தின் ஒரு பனி மலைக்குத் தமிழகத்தின் விஞ்ஞானி ஸ்ரீதர் ஆனந்த கிருஷ்ணன் பெயரை அமெரிக்கப் புவியியல் அறிவியல் குழு சூட்டியுள்ளது.

அண்டார்டிகா பனிப் பகுதிக்கு ஓர் இந்தியர் பெயரைச் சூட்டுவது இதுவே முதல் முறை. இப் பெருமைக்குரிய இளம் விஞ்ஞானி ஸ்ரீதர் ஆனந்த கிருஷ்ணன் (41), அண்ணா பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர், டாக்டர் மு. ஆனந்த கிருஷ்ணனின் கடைசி மகன்.



* ஆனந்த கிருஷ்ணன்



* ஸ்ரீதர்







உலகப்பந்தின் மேற்பரப்பை அங்குலம் அங்குலமாக ஆராய்ந்து வரும் விஞ்ஞானிகளுக்கு வட துருவமும், தென் துருவமும் இன்னமும் மர்மங்கள் நிறைந்ததாகவே நீடிக்கின்றன. அதிலும் தென் துருவமான அண்டார்டிகா

# அண்டார்டிகா பனிமலைக்குத் தமிழர் பெயர்!

கண்டம் எப்போதும் உறைபனியில் உறங்கிக் கொண்டிருப்பது, விஞ்ஞானிகளுக்கு ஆச்சரியம் அளிப்பதாகவே உள்ளது. இம் மர்ம முடிச்சுகள் விலகினால், உலகியல் மற்றும் மானுடவியல் ஆராய்ச்சியில் பெரும் புரட்சி ஏற்படும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

1820 வரை இத்துருவத்தை நோக்கி வந்தவர்களையெல்லாம் பனிக்குள் சமாதியாக்கி வந்தது அண்டார்டிகா. ஆனால் தொடர் முயற்சியால் இப்பகுதி படிப்படியாக வெற்றி கொள்ளப்பட்டு வருகிறது.

அண்டார்டிகா கண்டத்தில் கடந்த பத்து ஆண்டுகளாக ஆய்வுகளை மேற்கொண்டு வரும் ஸ்ரீதர், அடிப்படையில் எலக்ட்ரானிக் என்ஜினியர்தான். ஆனால் பனிப் பகுதிகளை ஆய்வு செய்யும் துறையோ, புவியியல் பௌதிகத் துறை (ஜியோபிசிக்ஸ்). எலக்ட்ரானிக் என்ஜினியர் பனிப் படல ஆய்வு விஞ்ஞானியாகப் பரிணமித்தது, சுவாரஸ்யமான குட்டிக் கதை!

புது டில்லியில் 1962ல் பிறந்த ஸ்ரீதர், நாட்டின் பிரபலமான கான்பூர் ஐ.ஐ.டி. வளாகப் பள்ளியில் படித்தார். பின்னர், டாக்டர் ஆனந்த கிருஷ்ணன் அமெரிக்காவில் உள்ள இந்தியத் தூதரகத்தில் அறிவியல் ஆலோசகராக நியமிக்கப்பட்டதால், ஸ்ரீதரின் பட்டப் படிப்பு அமெரிக்காவில் தொடர்ந்தது.

நியூயார்க்கின் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் மின்னணுவியல் பொறியாளராக பி.எ. மற்றும் எம்.எஸ்.பட்டங்களைப் பெற்றார். இதைத் தொடர்ந்து, விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் எலக்ட்ரானிக்ஸ் துறையில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றார்.

விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் இவரது துறை இருந்த அறைக்கு அடுத்த அறை ஜியோபிசிக்ஸ் துறை. அத்துறையைச் சேர்ந்த விஞ்ஞானிகள் குழு

அன்டார்டிகாவுக்குச் சென்று ஆய்வுகள் நடத்திக் கொண்டிருந்தது. அந்தச் சமயத்தில், ஸ்ரீதர் மின்னணு அதிர்வுகள் குறித்த சிறப்புப் பயிற்சி பெற்றிருந்தார். இதையறிந்த குழுவினர், தமது பயணத்தின் போது ஏற்படும் மின்னணுக் கோளாறுகளைச் சரி செய்வதற்காக அவரை அழைத்துச் சென்றது. இது நடந்தது பத்து ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு கோடையில்.

நான்கு மாதங்கள் அன்டார்ட்டிகாவில் தங்கியிருந்த போது, ஸ்ரீதரின் மனத்தில் புதிய ஆர்வம் கிளர்ந்தது. அப்போதே 'இனி தமது துறை ஜியோபிசிக்ஸ்தான்' என்று முடிவு செய்தார். தொடர்ந்து தென் துருவப் பனிப் பகுதிகள் தொடர்பான விஷயங்களில் கவனம் செலுத்தினார். கொஞ்சம் கொஞ்சமாகத் தம்மை துருவப் பனி ஆய்வுக்கே அர்ப்பணித்தார். அதே பல்கலைக் கழகத்தில் ஜியோபிசிக்ஸ் துறையில் ஆய்வுப் பட்டம் பெற்றார். இதுவரை ஒன்பது முறை அன்டார்டிகாவுக்கு பயணம் மேற்கொண்டுள்ளார். இன்று இத்துறையில் விரல்விட்டு எண்ணக் கூடிய நிபுணர்களில் ஸ்ரீதரும் ஒருவர்!



''என்னங்க! ஏதோ பேய்க் கமிஷனாம். போய் வாங்கிட்டு வாங்க.''

''அது 'பே' கமிஷன். உயிரோடு இருக்கிறவர்களுக்கு மட்டும்தான் கிடைக்குமாம்!''

- எம். அசோக் ராஜா

தென் துருவ ஆய்வுகளில் பல புதிய சாதனைகள் நிகழ்த்தி வரும் ஸ்ரீதரின் ஆய்வுப் பணிக்காக, அமெரிக்காவின் தேசிய அறிவியல் அமைப்பு ஏராளமான நிதியை ஒதுக்குகிறது. மெக்சிகோ பல்கலைக் கழகம், அலாபனா பல்கலைக் கழகம், பென்சில்வேனியா மாநில பல்கலைக் கழகம் ஆகியவற்றில் இத்துறையில் சிறப்புப் பேராசிரியராக விளங்குகிறார். தற்போது, ஸ்ரீதரின் பணி ஆய்வுக்காக அமெரிக்க அரசு நிறுவனம் ஒரு கோடி டாலர்களை ஒதுக்கியுள்ளது.

அன்டார்டிகாவின் ரூபர்ட் கடற்கரைக்கு அருகில் உள்ள பனிமலைக்கு, ஸ்ரீதர் ஆனந்த கிருஷ்ணன் பெயரைச் சூட்ட, இதற்கான அறிவியல் குழு முடிவு செய்தது. பூமத்திய ரேகையில் இருந்து 75 டிகிரி 32 மினிட் தொலைவில் தெற்கு நிரைகோடும், 140 டிகிரி 5 மினிட் மேற்கு வீச்சு எல்லைக் கோடும் சந்திக்கும் இடத்தில் இப்பனிமலை உள்ளது. இதன் நீளம் 15 மைல்.

''ஆய்வுப் பணிகளுக்கு அமெரிக்கா அதிக முக்கியத்துவம் தருகிறது. பல்கலைக் கழகங்கள் போன்ற நிறுவனங்களே இது போன்ற ஆய்வுகளை மேற்கொள்ள அனுமதிக்கப்படுகின்றன. இந்தியாவில் இதுபோன்ற ஆய்வுகள் தனி அமைப்புகளால் மேற்கொள்ளப்படுகின்றன. இவற்றிற்கும் கல்வி அமைப்புகளுக்கும் தொடர்பு இருப்பதில்லை.

''ஸ்ரீதர் கான்பூர் ஐ.ஐ.டி. வளாகப் பள்ளியில் படித்த போது, ஐ.ஐ.டி. பேராசிரியர்கள் அடிக்கடி பள்ளி மாணவர்களுக்குச் சிறப்பு வகுப்புகள் எடுப்பார்கள். அப்போது தங்களது சோதனைச் சாலைகளிலும், கணிப் பொறிகளிலும் பயிற்சி அளிப்பார்கள். இதனால் அந்த மாணவர்களில் பலர் பின்னாளில் துறை நிபுணர்களாகவும், அறிவியலாளர்களாகவும் வளர முடிந்தது'' என்கிறார் டாக்டர் ஆனந்த கிருஷ்ணன்!

**- அப்பணசாமி**

பித்ருக்களுக்கு தர்பணம் செய்வதால் நம் குலம் தழைக்கும் !

# பித்ரு தர்ப்பண க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில்

# மஹாளய அமாவாசைநாளில்

## அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்வோம் வாருங்கள் !

ஜெகத்குரு காஞ்சி ஸ்ரீ பரமாச்சார்யார் அனுக்கிரகத்துடன் பேரின்பமும், பெருவாழ்வும் தரும் புண்ய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்குகொள்ள அன்புடன் அழைக்கிறோம் !

**பேரன்புடையீர் ! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ இராமநாத சுவாமி தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.**

பன்னிரெண்டு ஜோதிர்லிங்க ஸ்தலங்களுள் ஒன்றான இராமேஸ்வரத்தில் ஸ்ரீ பர்வதவர்த்தினி சமேத ஸ்ரீ ராமநாத சுவாமி உடனிருந்து அருள் பாலிக்கிறார். மூர்த்தி, தீர்த்தம், தலம் மூவகையாலும் இராமேஸ்வரம் சிறப்புற்று சிவ விஷ்ணு ஸ்தலமாக பிரகாசிக்கிறது. மாங்கல்ய தோஷம், புத்திர தோஷம், செவ்வாய் தோஷம், நாக தோஷம் போன்ற எல்லாவிதமான தோஷங்களுக்கும் பரிகாரத்தலமாக இராமேஸ்வரம் விளங்குகிறது. இத்தகைய சிறப்பு மிக்க புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நேரில் சென்று அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய இயலாத அன்பர்களுக்காக, "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானத் திருப்பணி நடைபெறுகிறது. புண்ணிய பூமி இராமேஸ்வரத்தில் ஏழைகளுக்கும், அடியார்களுக்கும் அன்னதானம் அளிக்கும் பணியிலும், குடும்பம் நலம் பெற அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றும் பணியிலும் , நாமும் பங்கு கொண்டோம் என்ற ஆத்ம திருப்தியை அடைய இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

தங்கள் சார்பாக அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்ய தங்களால் இயன்ற நன்கொடையை அனுப்பலாம்.

- ரூ.500- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு வருடத்திற்க்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000- அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆறு வருடங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கும், அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்றுவதற்கும் நன்கொடையை அனுப்புவோர், விரும்பும் மாதத்தில் அமாவாசை தினத்தில் இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தத்திற்கு தீபமேற்றி அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ. 1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட "கோடி தீர்த்த சொம்பும்" வலம்புரி சங்கும் ஸ்ரீ பர்வத வர்த்தினி சமேத ஸ்ரீ இராமநாத சுவாமி வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும். ரூ.5000 - அனுப்பும் அன்பர்களுக்கு ஆறு வருடங்களுக்கு அன்னதானம் செய்து "இராமலிங்க தீபமும்" 336 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள "ஸ்ரீ மத் இராமாயணம்" புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு இராமேஸ்வரத்தில் நேரில் சென்று 'தர்ப்பணம்' செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு **"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்"** மூலம் தர்ப்பணம் செய்யப்படுகிறது. பித்ருக்களை குறித்து இராமேஸ்வரத்தில் செய்யப்படும் தர்ப்பணம் செல்வம், கீர்த்தி, ஆயுள் , ஸ்வர்க்கம் முதலிய நன்மைகளை அளிக்கும். எதிரிகளை விலக்கும். தன் வம்சம் தழைத்தோங்கச் செய்யும். மறைந்த முன்னோர்களுக்கு தர்ப்பணம் செய்ய ரூ. 750- அனுப்பும் போது யாருக்கு தர்ப்பணம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், மாதம், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறப்பு வாய்ந்த இராமேஸ்வரத்தில் தர்ப்பணம் செய்து கிடைத்தற்கரிய பேரருளைப் பெற்று க்ஷேமமாக வாழுங்கள்.

இராமேஸ்வரத்தில் அமாவாசை நாளில் அன்னதானம் செய்ய விரும்பும் அன்பர்கள் சார்பாக தாங்கள் எனை வேண்டுதலுக்காக அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்ற வேண்டும் என்பதையும், உங்கள் பெயர், நட்சத்திரத்தையும் குறிப்பிட்டு எங்களுக்கு எழுதி அனுப்பினால் அதன்படி அமாவாசை நாளில் அக்னி தீர்த்தத்திற்கு தீபம் ஏற்றி தங்களுக்கு பிரசாதம் அனுப்பிவைக்கப்படும். தீபமேற்றும் பணியிலும், அன்னதானப் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D. D/ M. O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai-4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். பெருவாழ்வும், பேரின்பமும் அளிக்கும் புண்ணிய க்ஷேத்ரமான இராமேஸ்வரத்தில் நடைபெறும் இச் சீரிய அன்னதானப் பணியிலும், அக்னி தீர்த்தத்திற்கு தீபவழிபாட்டு பணியிலும் பங்கு கொண்டு முன்னோர்களின் நல்லாசிகளைப்பெற உங்களை அழைக்கிறோம்.


ஸ்ரீ பர்வதவர்த்தினி தாயார்

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி


**ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்**

**SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)**

68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

TEL : 2495 9302, Fax : 2461 6466. E-mail:siva siva @ vsnl.net



ஸ்ரீ இராமநாத சுவாமி

பித்ருக்களுக்கு தர்ப்பண பூஜை செய்வது ஒவ்வொருவரின் இன்றியமையாத கடமையாகும்.

# தொலைக்காட்சித் தொடர்

**வேதகிரி:** அதுவும் சரிதான்... ஏம்மா... இது ஏரிக்கரை தெருதானே?

**சுசீலா:** ஆமாம்.

**வேதகிரி:** இங்க ஏரி ஒன்று இருந்துச்சே. சமயங்கள்ளே தண்ணி இருக்கும். பல சமயங்கள்ளே வறண்டு கிடக்கும். மழை பெய்தா, இந்தப் பகுதியே நல்லா இருக்கும்.

**சுசீலா:** அதைத் தூர்த்து 'பிளாட்' போட்டாச்சு மாமா. வீடுகள் நிறைய உருவாயிடுச்சு. இப்போ இதுக்கு ஏரிக்கரை நகர்னு பேர்.

**வேதகிரி:** மழை பெய்தா, தண்ணி எங்க போகும்?

**சுசீலா:** வீட்டுக்குள்ளே, தெருவிலே போகும். பத்திரிகைல செய்தி வரும். மந்திரி வருவார். ஏழைகளுக்கு உணவுப் பொட்டலம் தருவார், சிரிச்சுக்கிட்டு. அதுவும் பத்திரிகைல வரும். அடுத்த வருஷம் வரும். திரும்பவும் மழை வரும். இதெல்லாம், ஒரு வகையான விளையாட்டு மாமா. பழகிப் போன விளையாட்டு. எல்லாரும் ஆடற திருடன் போலீஸ் விளையாட்டு. திருடன், போலீஸா வருவான். போலீஸ், திருடனாவும் வருவான், மாறி, மாறி. எல்லாருக்கும் தெரிஞ்ச விளையாட்டு. வெட்கம் கெட்ட விளையாட்டு. புருஷன் பெண்டாட்டி விளையாட்டு மாதிரி.

**வேதகிரி:** சுசிலாம்மா...

இருண்ட தெருவுக்குள் திரும்புகிறார்கள்.

**காட்சி: 50**

**மாலை - இருள் மண்டும் நேரம், வீடு.**

**பாத்திரங்கள்: ரேணுகா, நல்லகண்ணு மற்றும் இருவர்.**

இலேசாக இருட்டும் நேரத்தில் மொட்டை மாடியில், நல்லகண்ணு பிரதானமாகவும், உடன் இருவருடன் அமர்ந்திருக்கிறார். அவர்கள் மது அருந்தியபடி உரையாடுகின்றனர். எல்லோரும் மிகவும் இயல்பாகவே இருக்கிறார்கள்.

**நல்லகண்ணு:** பார்த்தீங்களா, ஒரு சாதாரண மனுஷன், பணம், பதவி, ஆள், அம்பு என்று எதுவும் இல்லாத தனி மனுஷன். அவன்கிட்ட நாம் தோத்துக்கிட்டே போறோம். மேலிடத்தில, கேட்கிற கேள்விக்குப் பதில் சொல்ல முடியலை.

**இருவரில் ஒருவர்:** *(இவர் கண்ணியமாகக் காட்சி தருகிறார். கண்ணியமாகப் பேசுகிறார்)* அவனை ஜெயிக்க முடியும்னு எனக்குத் தோணலைண்ணே.

**நல்லகண்ணு:** காரணம்?

**ஒருவர்:** அவன் பக்கம் நியாயம் இருக்கு. நம்ம பக்கத்துல, அநியாயத்தைத் தவிர வேற எதுவும் இல்லை. அதுதான் காரணம். *(ஓர் அசாதாரண அமைதி சூழ்கிறது.)*

**நல்லகண்ணு:** நமக்கு இப்படித் தோணக் கூடாதே.

**மற்றவர்:** அண்ணே. நாம் வரம் வாங்கி, இந்தத் தொழி

17

பிரபஞ்சன்



# ஜீவநதி

னுக்கு வரலை. வேற வழி இல்லாமத்தான் வந்திருக்கோம். இந்தத் தொழிலை நாம் செய்றோம்ங்கிறதால, இது உத்தமர் தொழில் ஆயிடாது. கட்டப் பஞ்சாயத்து, வன்முறையால வீடு காலி பண்ண வைக்கிறது, நியாயமான ஆள்கிட்ட இருக்கிற இடத்தை, அநியாயக்காரனுக்கு எடுத்துக் கொடுக்கிறது, இதெல்லாம் நம்ப தொழில். ஆனா, பாவம், ஏழைப் பிள்ளைகளுக்குக் கண் திறந்து வைக்கிற பையன். இந்த வயசுல, சினிமாத் தியேட்டரைச் சுத்தாமே, காதல்னு அலையாமே, காக சேர்க்கணும்னு பறக்காமே, குடிசைப் பகுதிக்கு வந்து உழைக்கிறானே, அவனுக்குப் போய்த் தொந்தரவு கொடுக்கிறோம்.

**நல்லகண்ணு:** என்னப்பா, எல்லாரும் இப்படிப் பேசறீங்க. எனக்கு மட்டும்



ஆசையா, என்ன? மேலிடத்துக்கு என்ன பதில் சொல்றது?

**ஒருவர்:** முடியலைன்னு சொல்லிடுவோம்.

**நல்லகண்ணு:** அது, தப்பாப் போயிடும், வேறு கோஷ்டியைக் கொண்டு வந்து இறக்கிட்டா, அவங்க கொஞ்சமும் ஈரம் இல்லாமக் காரியம் பார்ப்பாங்க. செல்வம் உயிருக்கே அபாயம் வரும். இவனையும் காப்பாத்தணும். நமக்கும் பிரச்னை வந்துடக்கூடாது.

**ஒருவர்:** என்ன செய்யலாம்?

**நல்லகண்ணு:** நாமே செல்வத்துக்கு ஆதரவா இருக்கலாம். இது மறைமுகமா, ஆனா, வெளிப்படையா எதிர்க்கிற மாதிரியும் இருக்கணும். அந்த 'ஏரியா' ஜனங்களைத் தூண்டி, கலெக்டர் வீட்டுக்கு முன்னால 'தர்ணா' பண்ணச் சொல்லலாம். 'பேப்பர்ல' வரும். சட்டசபை நடக்கிற நேரம். விஷயத்தைப் பெரிசு பண்ணிடலாம். அப்புறம், செல்வத்தை யாரும் நெருங்கிட முடியாது.

**மற்றவர்:** நல்லதை நினைச்சா, நிறைய நல்ல விஷயம் எல்லாம் நினைவுக்கு வரும். நமக்கு, நம்ம மேலிடத்திலேந்து என்ன வரும்? கழுத்துக்குக் கத்தி வரும். யோசிச்சீங்களா?

**நல்லகண்ணு:** யோசிக்கணும்.... ஒரு விஷயம். இந்த திருந்திய யோசனை எல்லாம், இதுல மட்டும்தானா? நிரந்தரமா?

**ஒருவர்:** நிரந்தரமானா, நம் தலைமுறை பிழைச்சுடும். ஆனா நமக்குத்தான் பிரச்னை... பார்ப்போம்...

*(இருவரும் எழுந்து புறப்படுகிறார்கள். நல்லகண்ணு, வீட்டு மாடிக் கைப்பிடிச் சுவர் அருகில் வந்து நிற்கிறார். அவர் பார்வையில் தெரு. கொஞ்சமான வெளிச்சம். நிறைய இருட்டில் மனிதர்கள். அவர் அருகில் வந்து நிற்கிறாள் ரேணுகா. அவளைத் திரும்பிப் பார்த்து.)*

**நல்லகண்ணு:** உன்னாலதான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன், ரேணுகா. தினம் தினம், செல்வத்தைப் பத்திப் பேசிப் பேசி, என்னை மாத்திட்டே...

**ரேணுகா:** என்னாலதானா? உலகத்துக்கு அவர் நியாயம் புரியலையா?

**நல்லகண்ணு:** புரியுது. உணர்வோடதான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன். ஆனால், 'மேலிடம்' என்ன பண்ணுமோன்னு பயமா இருக்கு.

**ரேணுகா:** எனக்கும் அதே யோசனையா இருக்கு...

**நல்லகண்ணு:** ஒண்ணு செய்யலாம். எஸ்.பி.யைப் பார்த்து உண்மையை எல்லாம் சொல்லிடலாம்னு நினைக்கிறேன்.

**ரேணுகா:** போலீஸ் விஷயத்துல கவனமா இருக்கணும். போலீசுக்கு உங்க பக்கம் நிற்கிறதைவிட, அவங்க பக்கம் நின்னா லாபம் கூடுதல்.

**நல்லகண்ணு:** புரியுது. எஸ்.பி நல்ல மனுஷன், நியாயத்தின் பக்கம் நிற்கிறவர்னு கேள்விப்பட்டேன்.

**ரேணுகா:** நம் கண்ணன் சாருக்கு, அந்த அதிகாரி ரொம்ப வேண்டியவர்னு கேள்விப்பட்டேன். நீங்க கண்ணனைப் பாருங்களேன். நிச்சயம் அவர் உதவுவார்.

**நல்லகண்ணு:** ஆகட்டும். நாளைக்கே பார்க்கிறேன்.

### காட்சி: 51

**காலை நேரம் - வெளி**

**பாத்திரங்கள்: கண்ணன், கீதா**

*திறந்த வெளி மைதானம். சிலர் காலை நேரத்து நடை, சிலர் உடற்பயிற்சி போன்றவற்றில் ஆழ்ந்திருத்தல்.*

**கண்ணன்:** நீ சொல்றதைக் கேட்டு, ஒரு வாரமா, இப்படிக் காலை நேரம் நடக்க ஆரம்பிச்ச பிறகுதான், உடம்பே நல்லா இருக்கு.

**கீதா:** *(கிண்டலுடன்)* இப்படித் தொடர்ந்து நான் சொல்றதைக் கேட்டுக்கிட்டு இரு. எப்பவும் நல்லா இருப்பே... சூரியனுக்குப் பிறகு எழுந்திருக்கிறவனை, ஒளிக்கடவுள் திரும்பியே பார்க்கிறதில்லைன்னு எங்கயோ படிச்சேன்.

**கண்ணன்:** ஒளிக்கடவுள் கிடக்கட்டும். காக்கிக் கடவுள் செல்வத்தைத் திரும்பிப் பார்த்துட்டார்.

**கீதா:** என்ன சொன்னார் எஸ்.பி?

**கண்ணன்:** செல்வத்துக்குப் பிரச்னை, யார் மூலமா, எங்கேருந்து வந்ததுன்னு கேட்டுத் தெரிஞ்சுக்கிட்டார். நல்லகண்ணு எல்லாத்தையும் ரொம்ப உண்மையா, வெள்ளையாப் போட்டு உடைச்சுட்டார். எஸ்.பி.யே பயந்துட்டார். அவரை இயக்குகிற சக்தி, ரொம்பப் பெரிய சக்தி. தப்பு செய்யறதுல ஏதாவது ஆபத்துல சிக்கிக்காதீங்கன்னு சொன்னார். ரெண்டு பெரிய நன்மை நடந்து



இருக்கு. ஒன்னு, செல்வத்துக்குப் பாதுகாப்பு. இரண்டாவது, நல்லகண்ணு, இனி நிழல் காரியங்கள்ளே பிரவேசிக்க மாட்டார் என்பது.

**ஜோ:** இதுக்கு, நாம் ரேணுகாவுக்குத்தான் நன்றி சொல்லணும். *(தலையசைக்கிறார் கண்ணன்.)*

**கண்ணன்:** எனக்கு ரேணுகா பற்றியும் கவலையா இருக்கு.

**ஜோ:** ம்?

**கண்ணன்:** நல்லகண்ணு, தலைமறைவா வாழும்படியா நேரலாம். அல்லது, பாதிப்புக்கு உள்ளாகலாம். அப்போ, ரேணுகாவோட நிலைமை?

**ஜோ:** எப்பவும், எல்லாத்துலயும் பெண்கள் தான் அதிகம் பாதிக்கப்படறாங்க... *(நடக்கிறார்கள்)* நான் வேற ஒரு விஷயம் உங்ககிட்ட பேசியாகணும்.

**கண்ணன்:** சொல்லேன்.

**ஜோ:** உங்க அம்மா எனக்குக் கடிதம் எழுதி இருக்காங்க.

**கண்ணன்:** என்னைவிட, எங்க அம்மாவுக்கு உன் மேல ரொம்ப அன்பு.

**ஜோ:** என்ன விஷயம்னு கேட்கலியே.

**கண்ணன்:** சொல்லேன்.

**ஜோ:** என்னை ரொம்பவும் புகழ்ந்திருக்காங்க. அது விஷயம் இல்லை. என்னை மாதிரி ஒருத்தி, தனக்கு மருமகளா வந்தா நல்லா இருக்கும்னு எழுதி இருக்காங்க.

**கண்ணன்:** ஓகோ. இதுல உன் எண்ணம் என்ன ஜோ?

**ஜோ:** நீ என்ன நினைக்கிறே, கண்ணன்? உனக்கு என்மேல அப்படி ஒரு எண்ணம் இருந்தா, அது தப்பு இல்லை. நீ வெளிப்படையா பேசலாம்.

**கண்ணன்:** *(நிற்கிறான்.)* இப்படி உக்காரலாமா? *(அவர்கள் அமர்கிறார்கள். மைதானத்தின் சுற்றில், ஓரங்களில் வளர்ந்திருக்கும் மரங்களைப் பார்க்கிறான்.)* உன் மாதிரி ஒரு துணை, ஒரு மனிதனுக்கு அதிர்ஷ்டம், ஜோ..

**ஜோ:** சொல்லு.

**கண்ணன்:** நீ எனக்குக் கிடைச்ச அருமையான சிநேகிதி. எப்பாடு பட்டாகிலும், என்ன விலை கொடுத்தாகிலும், உன் சிநேகத்தை நான் காப்பாற்றியாகணும்.

**ஜோ:** உம்.

**கண்ணன்:** உன்னை வேறு மாதிரியா, நான் நினைச்சுப் பார்க்க முடியல்லை.

**ஜோ:** மேல சொல்லு.

**கண்ணன்:** நாம், எப்பவும் இப்படியே இருந்துடலாம் ஜோ. நமக்குள்ள வேற மாதிரியான உறவு தேவையா?

**ஜோ:** ரொம்ப சரி. கண்ணன். நீ எந்த முடிவை எடுத்தாலும் அது சரியா இருக்கும். எனக்கும் இது திருப்தியா இருக்கு. இப்பவே, நாம் நல்ல துணையாத்தான் இருக்கோம். சரியா?

**கண்ணன்:** நிம்மதியா இருக்கு. இன்னும் ரெண்டு ரவுண்ட் நடக்கலாம். *(அவர்கள் நடக்கிறார்கள்.)* நேற்று என்ன பண்ணீங்க?

**ஜோ:** செல்வமும், அவர் நண்பர்கள் மூன்று பேர், நான், இன்னொரு பெண் எல்லாரும் பி.எஸ். பள்ளிக்கூடம் போனோம். ஓர் அம்மாதான் பள்ளித் தலைவர். ரொம்ப அருமையான லேடி. பெரிய படிப்பாளியாம். ரொம்ப சாதாரணமா இருக்காங்க. பெரியவங்க எல்லாம் அப்படித்தான் இருப்பாங்க. அற்பர்கள்தான் வெளிச்சம் போட்டுக்கிட்டுத் திரியும் போல. போய்ச் சொன்ன உடனே, சம்மதம் கொடுத்துட்டாங்க. பத்தாம் வகுப்புப் பசங்க படிக்கணும்னு சொன்னதால, ஒன்பதாம் வகுப்பைத் தேர்வு செஞ்சோம். மொத்தம் நாற்பது பிள்ளைகளோட பெண்கள் பதினெட்டுப் பேர். எல்லார்கிட்டயும் ஆளுக்கொரு செடியைக் கொடுத்தோம். அதுல, பிள்ளைகள் பேர் எழுதி இருக்கும். ஒவ்வொருத்தரும் ஒரு செடியை நடணும். அடுத்த மாசம், நாம் போறோம். செடியை நல்லா வளர்த்திருக்கிறவங்களுக்குப் பரிசு நிச்சயம்.

**கண்ணன்:** பரிசு எல்லாருக்கும்தானே?

**ஜோ:** ஆமா... எல்லாக் குழந்தைகளுக்கும் பரிசு உண்டு.

**கண்ணன்:** பிள்ளைகள், ரொம்ப 'என்ஜாய்' பண்ணி இருப்பாங்களே.

**ஜோ:** ரொம்ப. சில பேர், செடிக்குப் பேர் வச்சுட்டாங்க. தங்கை பேர், தம்பி பேரையெல்லாம் செடிக்கு வச்சிக் கூப்பிட ஆரம்பிச்சுட்டாங்க.

**கண்ணன்:** கிரேட். நோக்கமும் அதுதான். மனிதர்களைப் போலவே செடி, மரம், பறவை இதுகளை நேசிக்கிறவங்களுக்குத்தான் யுத்தத்து மேல ஆசை இருக்காது.

*(தொடரும்)*

"ஓலையைக்
கொடுத்துவிட்டுக்
கையெழுத்து
வாங்குகிறாயே..."

"கொரியர் ஓலை
மன்னா..."

- மோகன்



# மண்ணில் பொன்னெடுக்கிறார்கள்!

'காண்டாமிருகவண்டு', 'கருந்தலைப் புழு' இவற்றைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? நீங்கள் வேளாண்துறை ஆசாமியாகவோ, அல்லது தென்னை விவசாயத்தில் ஊறியவராகவோ இருந்தால் தவிர, இந்தப் பயங்கரப் பூச்சிகளைப் பற்றித் தெரிந்திருக்க முடியாது.

இந்தப் பூச்சிகள் தென்னை மரத்தைக் குத்தகை எடுத்துக் கொண்டால், உற்பத்தி அவுட். குருத்துகள் உதிர்ந்து விடும்; மட்டைகள் பலவீனமாக விழுந்துவிடும். "இந்தப் பூச்சிகள் வந்து எங்கள் தென்னந் தோப்பையே வளைத்துவிட்டன. இதற்கு ஏதாவது வழி சொல்லுங்கள்" என்று வேளாண் ஆராய்ச்சி நிலையத்துக்கு எழுதினார் விஜயா நடேசன்.

"தண்ணீர் செல்லும் கால்வாயில் 50 கிலோ டி.டி.டி (D.D.T) பூச்சி மருந்தைப் போட்டு வையுங்கள். பூச்சிகள் காணாமல் போய் விடும்" என்று பதில் வந்தது.

வைத்தார் ரசாயன மருந்தை. கால்வாய் ஓரத்தில் குடியிருந்த நூற்றுக்கணக்கான மண் புழுக்கள் செத்து மிதந்தன. மண் புழுக்களின் உபயோகத்தைத் தெரிந்து கொண்ட விஜயா அதிர்ந்து போய் விழித்து நிற்க, அனுபவமிக்க விவசாயி ஒருவர், 'அட நீ ஒண்ணும்மா. வேப்பம் புண்ணாக்கு வை!" என்று சொல்ல, அதன்படி வைக்க, விடிவு காலம் வந்தது.

"நமது வேளாண் ஆராய்ச்சியாளர்கள் சிலர் இன்னமும் புத்தகப் புழுவாகவே இருக்கிறார்கள். யதார்த்தமாக நோக்கி, பிரச்னைகளுக்கு இயற்கை ரீதியிலேயே தீர்வு காணுவதைப் பற்றி

"நமது வேளாண் ஆராய்ச்சியாளர்கள் சிலர் இன்னமும் புத்தகப் புழுவாகவே இருக்கிறார்கள்."



• விஜயா நடேசன்



* கணவர் நடேசனுடன் விஜயா

யோசிப்பது இல்லை'' என்று சொல்கிறார் இன்று தென்னை விவசாயத்தில் சக்கைப் போடு போடும் விஜயா நடேசன். ரெட்ஹில்ஸ் அருகில் உள்ள இவரது ஆறு ஏக்கர் பண்ணையில் நுழைந்தால் 'மழைக்காடுகளில்' நுழைந்து விட்ட உணர்வு. தண்ணீர் கொட்டிக் கொண்டிருக்கும் சலசலப்பு ஒருபுறம், மரங்களின் மேலே குயில், மீன் கொத்தி, கிளி என்று பறவைகள் நடத்தும் கச்சேரி மறுபக்கம். 'அடப் போடா. சென்னையுமாச்சு, வேலையுமாச்சு' என்று அங்கேயே செட்டில் ஆக வேண்டும் போலச் சூழல். விவசாயத்தை வர்த்தக ரீதியாகச் செயல்படுத்துவது குறித்த தமது அனுபவங்களை, பல குளிர் சாதன அரங்குகளில் பகிர்ந்து கொண்டு, பாராட்டுப் பத்திரங்களைப் பெற்ற விவசாயி விஜயா நடேசன், வேளாண் விஞ்ஞானி எம்.எஸ். சுவாமிநாதனின் வழிகாட்டுதலைப் பெற்றவர். விஜயாவின் வெற்றிக்குப் பின்னால் மூன்று பேர் இருக்கிறார்கள்: அவரது கணவர் நடேசன். இவர் பொறியாளர். தனியார் நிறுவனத்தில் வேலை செய்து ஓய்வு பெற்றிருக்கிறார். மகன்கள் வசந்த், ஆனந்த். மொத்தத்தில் குடும்பமே பசுமைப் புரட்சியில் ஈடுபட்டிருக்கிறது. சமீபகாலமாக இவர்கள் அறிமுகப்படுத்தியிருப்பது ஒருங்கிணைந்த விவசாயம்!

''பண்ணையில் நடக்கும் செயல்களும், உற்பத்தியும் ஒன்றை ஒன்று சார்ந்தும், ஒன்றுக்கொன்று உதவியாகவும் இருப்பது தான் ஒருங்கிணைந்த விவசாயம். மண்புழு உரம் செடிகளுக்கு நல்லது, அதே போல் ஆடு மாடுகள் வளர்ப்பது மூலம் உரமும் கிடைக்கும். பணமும் வரும். அந்த வகையில் ஆடுகள், மாடுகள் வளர்த்து வருகிறோம். வாத்துகளும் வளர்த்தோம். ஆயிரக்கணக்கான பறவைகள் தினந்தோறும் எங்கள் பண்ணையை ஆக்ரமிப்பதால்... அவற்றின் எச்சமும், கழிவும், மண்ணில் கலந்து நல்ல உரமாக மாறி விடுகின்றன. இதைவிட முக்கியமாகத் தென்னை மரங்களுக்கு இடையில் பதினான்கு சிறு குளங்களை வெட்டியிருக்கிறோம். அவற்றில் அலங்கார மீன்கள் வளர்க்கிறோம். அந்த மீன்களின் கழிவும், எச்சமும் கொண்ட தண்ணீர், தென்னைகளுக்கு அற்புதமான உரமாக அமைந்து விடுகிறது'' என்கிறார் விஜயாவின் கணவர் நடேசன்.

இவர்களது பண்ணையில் ரசாயன உரமும், ரசாயனப் பூச்சி மருந்தும் நுழைய தடை போடப்பட்டிருக்கிறது. அலங்கார மீன்களைத் தவிர குரோட்டன்ஸ் மற்றும் land scapeக்குப் பயன்படும் அழகிய செடிகள், மீன் தொட்டிக்குள் வைக்கப்படும் சிறிய அரிய தாவரங்கள் என்று விற்பனைக்குப் பண்ணையில் பல சமாசாரங்கள் உண்டு. இது தவிர வழக்கமான, மா, கொய்யா, பலா, எலுமிச்சை என்று மனிதனுக்குப் பிடித்த மரங்களும் உண்டு. வௌவால்களுக்குப் பிடிக்கும் என்று செர்ரிப் பழ மரமும் வளர்க்கிறார்கள். (அந்த மரத்தில் இரவில் நூற்றுக்கணக்கில் வௌவால்கள் ஊஞ்சலாடிக் கொண்டிருக்குமாம்) ஆந்தை, கோட்டானுக்கும் கூட சாப்பிட பழங்கள் உண்டு!

1980களில் இந்த நிலத்தை வாங்கிய போது சுற்றியுள்ளவர்கள் 'கட்டாந்தரை' என்று கேலி பேசியிருக்கிறார்கள். கிணறும் பொய்த்துப் போக, இருபத்தியொரு இடங்களில் ஆழ்குழாய் முயற்சி செய்து பலனற்றுப் போக, இருபத்தியிரண்டாவது இடத்தில் தண்ணீர் கிடைத்ததாம். முயற்சி செய்து பார்த்த இருபத்தியொரு இடங்களில் மழைநீர் சேமிப்புக்கு வழி செய்ய, கடந்த இருபது வருடங்களாக கிணறு வற்றாமல் கை கொடுத்துக் கொண்டிருக்கிறது.

- கௌசி.

Juniortennis.com

அடுத்த ரவுண்டுக்குத் தயாராகிவிட்டார் சானியா மிர்ஸா!

தூங்கி எழுந்ததும் ராக்கெட்டும் பந்துமாக டென்னிஸ் கோர்ட்டிலேயே தவம் கிடக்கிறார் பயிற்சிக்காக.

"விம்பிள்டன் கிராண்ட்ஸ்லாம் போட்டியில் ஜூனியர் பெண்கள் பிரிவில், இரட்டையர் கோப்பையை வென்ற முதல் பெண் என்ற பெருமை கிடைச்சிருக்கே. அதைத் தக்க வச்சுக்க வேண்டாமா? அமெரிக்க ஓபன் டென்னிஸுக்காக இப்பவே பயிற்சியில் இறங்கிட்டேன்" என்கிற சானியாவின் குடும்பம், என்னதான் பிசினஸ் என்றாலும் சரியான விளையாட்டுக் குடும்பம்!

மாமா ஹைதராபாத் ரஞ்சிக்காக விளையாடியவர். அப்பாவின் மாமா குலாம் அகமத், இந்திய கிரிக்கெட் அணியின் முன்னாள் கேப்டன். அப்பாவின் அப்பா ஹாக்கி, கிரிக்கெட் இரண்டிலும் கலக்கியவர். அப்பா இம்ரான், கிரிக்கெட், டென்னிஸ் இரண்டுமே ஆடுவார்.

சானியா இப்படியொரு சாதனை புரிந்ததற்குக் குடும்ப வேர்தான் காரணமாம்!

• சானியாவுடன் அலிகா கிளேபனோவா...



• சானியா மிர்ஸா



"ஒவ்வொரு விஷயத்திலும் என்னை ஊக்கப்படுத்தியது பெற்றோர்தான். சின்ன அளவுல மனக கஷ்டம்னாலும் அதைப் பக்குவமா சொல்லி, என்னை டென்னிஸ்ல டெவலப் பண்ணியதற்கு அவங்கதான் காரணம்."

நம்மூர் சினிமாவில் பழைய ஹீரோக்கள் வில்லனிடம் மூன்று முறை அடி வாங்கி விட்டு நாலாவதாக அடியைத் திருப்பிக் கொடுப்பது மாதிரி, இரண்டு முறை தோல்வியைச் சந்தித்து விட்டு மூன்றாவது முறை வெற்றியைப் பறித்திருக்கிறார் சானியா.





• ஸ்டெபி கிராஃப்!

• மேரி பியர்ஸ்

"அன்றைக்கு நடந்த போட்டி ரொம்ப திரில்லிங்! அந்த மாதிரி ஆக்ரோஷமான ஆட்டத்தைத்தான் நான் விரும்பறேன். போட்டிக்காக லண்டன் போகறதுக்கு முன்னால உடல் தகுதிக்காக ரொம்ப கஷ்டப்பட்டேன். கஷ்டம்னு சொல்றதை விட, அதை வெற்றிக்கான ஒரு படியாகத்தான் எடுத்துக்கிட்டேன். இந்த வெற்றிக்கு என்னோடு ஆடிய ரஷ்யாவின் அலிகா கிளேபனோவாவும் காரணம். முதல்ல ஆடும் போது பெரிய எதிர்பார்ப்பு எதுவும் இல்லை. பதற்றம் இருந்தது. காலிறுதிக்கு மட்டும் தான் வருவோம்னு நினைச்சேன். முதல் ரவுண்ட்களிலேயே பெரிய ஆட்டக்காரர்களைத் தோற்கடித்ததும் பட்டம் நமக்குன்னு முடிவு பண்ணத் தோணுச்சு. அதே மாதிரியே ஜெயிச்சுட்டோம்'' என்று சொல்லும் சானியாவின் ரோல் மாடல் ஸ்டெபி கிராஃப்!



"ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு விதமா ஆடினாலும் ஸ்டெபியோட ஸ்டைல் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவங்களைப் போல ஸ்டைலா ஆடணுங்கற ஆசை இருக்கு. இன்னும் வயசிருக்கே. பார்க்கலாம்!"

சானியாவுக்கு இன்றும் புல்லரித்துக் கொண்டிருக்கும் விஷயம் ஒன்றிருக்கிறது.

"ஆம். மேரி பியர்ஸ் எவ்வளவு பெரிய ப்ளேயர். ஒரு முறை இந்தியா வந்திருந்தப்ப, நான் பந்தை அடிக்கற விதம், அவங்க அடிக்கறதை விட ஹார்டா இருக்குன்னு சொல்லியிருக்காங்க. இந்தப் பாராட்டுக்கு முன்னால எனக்கு வேறென்ன வேணும்?"

டாலர்கள் கொடுக்குமா இம்மாதிரியான சந்தோஷத்தை?

# சாதனை மீர்ஸா!

— ஏக்நாத்

படங்கள்: நன்றி 'தி ஹிந்து'



தன்னைப் பாதித்த சாதனை யாளர் பற்றிச் சொல்கிறார் கிரிக்கெட் வீரர் சடகோபன் ரமேஷ்.

"சச்சின்தான் சாதனை யாளர். சச்சின் காலத்துக்கு முன்பு 'பொடிசுகள்' மீது இந்திய அணி செலக்டர்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. அது ஏன்? இருபது வயதுக்குக் கீழே இருந்தால், இந்திய இளைஞர்கள் கிரிக்கெட் விளையாட்டைத் தொழில்ரீதியாக எடுத்துக் கொள்ள, நம்பிக்கை அளித்தவர் சச்சின்தான்!

சச்சின் இதுவரை ஆடிய டெஸ்ட் மற்றும் ஒரு நாள் பந்தயங்களில் எனக்குப் பிடித்தது, ஒரு முறை ஷார்ஜாவில் அவர் ஆடிய ஆட்டம்தான். அந்த ஒரு நாள் போட்டிகளில் ஆஸ்திரேலியாவை வெற்றி பெற்றால்தான், இறுதிப் போட்டிக்குப் போக முடியும் என்ற நிலை. சச்சின் அடித்த சதம் அதற்கு வழி செய்தது. பிறகு இறுதிப் போட்டியிலும் ஆஸ்திரேலியாவை வென்று கோப்பையைக் கைப்பற்றினோம். இறுதிப் போட்டியிலும் அடித்தாரே சதம்! மறக்க முடியாத ஒன் டே மாட்ச்!

ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால், அவரது உழைப்புதான். மும்பையில் ஒரு மேட்ச்



# சச்சின் போலாகுமா?

அணிக்குத் தேர்வு செய்யப்படுவது என்பது எட்டாக் கனி. ஆனால் சச்சின் பதினாறு வயதில் தேர்வு செய்யப்பட்டு, "அட்ரா சக்கை" என்று முதல் ஆஸ்திரேலியா டூரிலேயே ஆஸ்திரேலியாவுக்கு எதிராகப் போட்டாரே சதம், அப்போதே இந்தியக் கிரிக்கெட் அணியின் கதவைப் பொடிசுகளுக்காக திறந்து விட்டார் சச்சின். இன்று ஆயிரக்கணக்கான முதல்நாள் இரவு இரண்டு மணிக்குத்தான் வந்திறங்கினார். உடனே காலை ஏழு மணிக்கு நெட் பிராக்டிஸுக்கு வந்து விட்டார். அவர் அதற்கு வராமல், நேரடியாகப் போட்டிக்குக் கூட வந்திருக்கலாம். தினசரி உடற்பயிற்சி, பிராக்டீஸ் என்று கடுமையாக உழைக்கிறார். அதன் பலன்



தைக் கொடுத்ததில்லை. பொது மக்களோடு பழகும் போது சில காரணங்களுக்காகக் கொஞ்சம் விலகி இருக்க நேரிடும். நான் கூட முதலில் பழகுவாரோ என்று பயந்தேன். ஆனால் அது தவறான கணிப்பு. இப்போது நாங்கள் ரொம்ப தோஸ்த். பல மேட்சுகளில் சதத்தை நெருங்கும் போது அவுட் டாகியிருக்கிறார். அந்தச் சமயத்தில் எத்தனை திறமையான ஆட்டக்காரருக்கும் ஒரு நடுக்கம் இருக்கத்தான் செய்யும். அதை எதிர் அணி பயன் படுத்திக் கொள்ளும்.

சச்சின் போலிங் போடுவது பற்றி யாரும் சீரிய ஸாக எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. அவரே கூட சீரியஸான பந்து வீச்சாளர் ஆக முடியவில்லை என்பது என் கருத்து. அதே போல சச்சின் கேப்டன்




மேட்சுகளில் தெரிகிறது. ரசிகர் களுக்குக் கொண்டாட்டமாகிறது. சச்சினது வீக்னஸ் என்று நான் நினைப்பது அவரது புகழ்தான். இத்தனை புகழுக்குக் காரணமாக இருப்பதால் அதுவே ஒரு சுமை யாக அவருக்கு இருக்கிறதோ என்று நான் எண்ணுவதுண்டு. ஆனால் அந்தப் பெயர், புகழ் எல்லாம் அவ ருக்கு என்றைக்கும் தலைக்கனத்

பொறுப்பில் வெற்றிகரமாக இல்லை என்ற கருத்தும் இருக்கிறது. ஆனால் அவர் கேப்டன் பொறுப்பை ஏற்றது மிகவும் கஷ்டமான, தென் ஆப்பிக்கா மற்றும் ஆஸ்திரேலியா பயணத்தின் போது அவர் களது நாட்டில் அவர்களை வெல்வது கடினம். மொத்தத்தில் ஒரே வார்த்தையில் சொல்வதானால், நமது கிரிக்கெட் வரலாற்றில் நிரந்தர இடம் சச்சினுக்கு உண்டு."

— கௌசி

படம்: ராஜன்

தமிழ்ச் சங்கத்தில் சொற்பொழிவு. 'மனிதம்' என்ற தலைப்பில் பேராசிரியர் ஒருவர் பேசுகிறார். பொதுவாக இலக்கியத் தலைப்பிலான கூட்டங்கள்தான் தமிழ்ச் சங்கத்தில் நடைபெறுவது வழக்கம். வாரத்தில் இரண்டு நாள், ஓய்வு பெற்ற பேராசிரியர்கள் யாராவது பேச, என்னைப் போன்ற ஓய்வு பெற்ற பிரகிருதிகளுக்கு ஒரு மணி நேரம் உபயோகமான பொழுது போக்கு. வாழ்க்கையை ஊடுருவும் இலக்கியக் காட்சிகள், மனசுக்கு இதமாக இருக்கும்.

ஆயினும் எல்லாக் கூட்டங்களுக்கும் என்னால் போக முடிவதில்லை. காரணம், நான் மாநகருக்கு வெளியே பத்துக் கிலோ மீட்டர் தொலைவில் வாழ்கிறவன். சாயந்திரச் சந்தடியில் பஸ் பிடித்துப் போவது சிரமமாய் இருக்கும். எனவே தலைப்பைத் தேர்ந்தெடுத்துத்தான் செல்வேன். அதேபோல் இன்றைய தலைப்பும், பேசக் கூடியவரின் பெயரும் எனக்குப் பிடித்திருந்தன.

புறப்பட்டேன்.

பால் பண்ணை வரை வழக்கமாய்ச் சென்ற பஸ் காந்தி சந்தையை நோக்கித் தொடராமல், ஜங்ஷன் பக்கம் திசை மாறியது.

"ஏன்?" பொதுவான என் முணுமுணுப்பு கண்டக்டரின் காதில் விழுந்து விட்டது.

"இன்று வணிகர் ஊர்வலம் சார். அதனால் போக்குவரத்துத் தடங்களை டவுனுக்குள் விடாமல் மாற்றி இருக்கிறார்கள்" என்றார். எனக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. மென்குரலில் எழுந்த ஒரு பொதுவான சந்தேகத்துக்குப் பொறுப்பாய், பவ்யமாய், பதில் சொல்கிறாரே என்று.

டிவிஎஸ் டோல் கேட்டில் திரும்பி சேது ராம் காலனி, மேம்பாலம், மத்திய தபால் நிலையம் வழியாகத் தென்னூர், தில்லை நகர் என்று பெரிய ரவுண்ட் அடித்து, கரூர் பைபாஸ் ரோடு வந்த போது – சிக்னல். மணி 6.30. சங்கத்தில் ஒரு நல்ல பழக்கம். பார்வையாளர்கள் கூடினாலும், கூடாவிட்டாலும், 6.30க்கு நிகழ்ச்சி துவங்கி 7.30க்கு முடித்து விடுவார்கள்.

மணி இப்போது ஆறரை. இன்னும் கால்மணிக்குள்ளாவது போனால்தான் நல்லது. ஆனால் பைபாஸ் ரோடைச் சுற்றி சத்திரம் வந்து, அங்கிருந்து ஒரு கி.மீ. தமிழ்ச் சங்கம்; நடந்து வந்தால் நிகழ்ச்சியே முடிந்து விடுமே!

என் பரிதவிப்பைப் புரிந்து கொண்டோ என்னவோ, பக்கத்திலிருந்த பிரயாணி ஒரு யோசனை சொன்னார்.

"சார்... இங்கேயே இறங்கி கோட்டை ரயில்வே ஸ்டேஷன் வழியாய் குறுக்காலே போனால், பத்து நிமிஷத்திலே தமிழ்ச்சங்கம் போய் விடலாம்" என்றார்.

"நன்றி" சொல்லிவிட்டு உடனே இறங்கினேன். அருகில் கோட்டை ஸ்டேஷன் இருப்பதும், அதைக் குறுக்காகக் கடந்தால் தமிழ்ச்சங்கம் போகலாம் என்ற ஊகம் எனக்கும் இருந்ததுதான். ஆனால் வழி தெரியாது.

சைக்கிள் ரிப்பேர் கடையில் வழி

நான் வேகமாய் அவனைப் பின் தொடர்ந்தேன். கடைக்காரர் தலை சொறிந்தது போல் அரிசிக் கடை வந்ததும்தான் சிக்கல்.

விசாரித்தேன். "நேரே போய் முதல் கட்டிங் லெப்டிலே திரும்புங்க சார். ரெண்டு வீடு தள்ளி இடப்பக்கமா ஒரு சந்து போகும். அது முடியற இடத்திலே ஒரு அரிசிக் கடை இருக்கும். அதுக்கு முன்




தமிழினியன்

னாடி பாதையை இடித்துக் குழி தோண்டி இருப்பாங்க. அங்கே.. கொஞ்சம் இருங்க... அந்த இடத்திலே உங்களாலே போக முடியாது. பையனை வரச் சொல்றேன். டேய் முருகேசு... சார் கூடப் போய் அந்த சந்தைக் காட்டிட்டு வா."

இவ்வளவு பொறுமையாய் வழி சொன்னதே பெரிய விஷயம். போதாக் குறைக்குப் பையனை வேறு அனுப்புகிறாரே. எனக்கு



''மன்னா...! நம் போர் வீரர்களை வேலையை விட்டுப் போகச் சொன்னது தப்பாப் போச்சு!''

''ஏன்...?''

''பக்கத்து நாட்டு மன்னர் நம்மீது இப்போது போர் தொடுக்கப் போகிறாராம்!''

— தூத்துக்குடி வீரமுடி

சங்கோஜமாக இருந்தது. அதோடு பையன் என்னை 'கழுத்தறுப்பு கிராக்கி' என்று அலுத்துக் கொண்டால்...? அனாவசிய சங்கடம் அவனுக்கும் எனக்கும்.

ஆனால் நான் நினைத்தது போல் இல்லை. சிரித்துக் கொண்டே சட்டையை மாட்டிக் கொண்டு வந்து "வாங்க சார்... போகலாம்" என்றான்.

நான் வேகமாய் அவனைப் பின் தொடர்ந்தேன். கடைக்காரர் தலை சொறிந்தது போல் அரிசிக் கடை வந்ததும்தான் சிக்கல்.

பாதையின் குறுக்கே எதற்கோ குழிபறித்து, முதல் நாள் பெய்த மழையில் நீர் தேங்கி, வழுக்கி விடும் அபாயம் இருந்தது. அதைத் தவிர்க்க வேண்டுமானால் 'லாங் ஜம்ப்' பண்ண வேண்டும். முடியுமா?

"இதிலே உங்களாலே போக முடியாது சார்" என்ற பையன் அருகில் ஒரு வீட்டுக்குள் நுழைந்தான். ''என்ன தம்பி?'' என்றார் வீட்டுக்காரர். "சார் கோட்டை ஸ்டேஷனுக்குப் போகணுமாம். இந்த வழியில் சாராலே போக முடியாது. கொஞ்சம் மனசு வச்சிங்கன்னா, வாசல் பக்கமா புகுந்து கொல்லைப்புற வழியாலே அடுத்த தெருவுக்குப் போயிடலாம். அப்புறம் சாருக்குக் கஷ்டமில்லை. எதிராலே பார்த்தா கோட்டை ஸ்டேஷன் தெரியும்."

''அட... அதுக்கென்ன... சாரை வரச் சொல்லு."

வீட்டுக்குள் நுழைகிறோமே என்று ஷூவைக் கழற்றக் குனிந்தேன், நான்.

"வேணாம் சார். முகப்பிலேருந்து புறக்கடை வரையிலும் வெறும் ஆளோடிதான். சும்மா போங்க."

பையனுக்கும், வீட்டுக்காரருக்கும் மனசார நன்றி சொன்னேன். மனசுக்குள் பால்போல் பொங்கும் பரவசம். மனிதர்கள் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்!

6.45. திட்டமிட்டதுபோல் தமிழ்ச் சங்கத்தை எட்டி விட்டேன். ஆனால் — 'வணிகர் சங்க ஊர்வலத்தை முன்னிட்டு, இன்றைய சொற்பொழிவு அடுத்த வாரத்துக்கு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.' அறிவிப்பு எழுதி இருந்தார்கள்.

எத்தனைச் செலவு. எவ்வளவு பிரயாசை. முகம் அறியா மனிதர்கள் எல்லாம் எனக்காகப்பட்ட சிரமங்கள்தான் எத்தனை! ஆனாலும் எனக்கு அது ஏமாற்றமாக இல்லை. சொற்பொழிவில் இழந்ததைக் கடைக்காரரும், வழிகாட்டிய பையனும், சகபிரயாணியும், முகமறியாத அந்த வீட்டுக்காரரும் ஈடுசெய்திருந்தார்கள். ○



## வட்டமேஜை

# கசப்பு வாழ்க்கை!

✉ க. சுப்புவின் அரசியல் வாழ்க்கை கசப்பு என்ற வகையிலேயே இருந்திருப்பதை அறிய முடிந்தது.
சென்னை – 5, கே. தெய்வசிகாமணி.

✉ மக்களுக்கு நீதிமன்றங்கள் மீதும் நம்பிக்கை அற்றுப் போகச் செய்யும் விதமாக நடந்த குஜராத் விரைவு நீதிமன்ற நடவடிக்கைகள் தொடரக் கூடாது!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ அன்பின் ஊற்று தொடரில் 'பொறுமை' வேறு, 'மந்தம்' வேறு... என்பதை நன்கு உணர்த்தியிருந்தார் குருஜி. "மனத்தில் பொறுமையையும் செயலில் சக்தியையும், உந்து வேகத்தையும் கொள்வது சரியான வழி!" என்ற அவரது வரிகள் தாரக மந்திரம்!
திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

✉ வாழைப்பழத்துக்கு இவ்வளவு மருத்துவ குணங்களா! அப்பப்பா! வியந்தோம். தெரியாத பல புதிய தகவல்களை அறிந்து கொண்டோம்.
சிதம்பரம் - 2, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ தலையங்கத்தில் அரசு ஊழியர்களின் இன்றைய அவல நிலை தெளிவாக்கப்பட்டிருந்தது. அரசு ஊழியர்கள் ஜனத் தொகையில் 2% என்றாலும், அவர்களும் பொதுமக்களில் ஓர் அங்கம்தான். இழந்த உரிமைக்காகப் போராடிய அவர்களிடம் இருப்பதையும் பறித்துக் கொள்ளாமல், முதல்வர் அவர்களைப் பணிக்கு அனுமதிக்க வேண்டும்.
மதுரை - 7,
இரா. சக்கரபாணி.

✉ சுஜாதாவின் 'குறைந்த செலவில் தமிழ் பி.சி' நல்ல வரவேற்புக்குரிய முயற்சி.
மதுரை - 1, பாலு.

✉ கொக்கி போட்டுத் திருடும் பலகோடி ரூபாய் மின் திருட்டை அறிய 'சேனல் சென்சார்' செயல்பாட்டைக் கண்டுபிடித்த திருச்சி மின்துறை மாணவர்களை அரசு கண்டுகொள்ள வேண்டும்.
சென்னை - 14, அய்யாறு வாசுதேவன்

✉ கிராமத்துக் காதலுக்கு மணம் கூட்டுகிறது அழகிய பெரியவனின் 'நாணல் மனம்'.
கள்ளிப்பேட்டை, காதல் விரும்பி.

✉ காயலான் கடைக்குத் தள்ளி விடுவதற்கு வைத்திருந்த வானொலிப் பெட்டிகளெல்லாம் இன்று தூசி தட்டி, துடைத்தெடுத்து, மேக்கப் போட்டு வீட்டின் நடு ஹாலில் கம்பீரமாய் வைக்கப்பட்டிருப்பதற்கு எஃப்.எம். ஒலிபரப்புதான் காரணம். இதனால் தொலைக்காட்சிப் பெட்டிகளும் ஆங்காங்கே சற்று ஓய்வு பெற்றுக் கொண்டிருக்கின்றன!
நெல்லையப்பபுரம்,
டி. செல்வன்.



# “ஜெயமோகனுக்கு இணை யாருமில்லை!”

இலக்கிய உலகில் தாம் சாதனையாளராக நினைக்கிறவர் யாரென்று கவிஞர் மனுஷ்யபுத்திரனிடம் கேட்டோம்.

இலக்கிய உலகில் சாதனைகளை ஒரு ஓட்டப்பந்தயத்தில் முடிவு செய்வதுபோல நம்மால் முடிவு செய்ய முடிவதில்லை. ஒரு கடலில் அதன் பிரமாண்டமான அலைகளும், சின்னஞ்சிறு மீன்களும் சேர்ந்துதான் கடலாக இருப்பது போல, ஒரேயொரு மகத்தான கவிதையை எழுதியவனும் ஆயிரக்கணக்கான பக்கங்கள் எழுதியவனும் இலக்கிய நீரோட்டத்தில் முக்கியமான இடத்தையே வகிக்கின்றனர்.

ஆனால் தன்னளவில் ஓர் இயக்கமாக செயல்படும் படைப்பாளிகள் இலக்கியத்தில் ஒரு தீர்மானமான இடத்தை வகிக்கிறார்கள். அவ்வாறு தானே இயக்கமாக மாறி செயல்பட்ட படைப்பாளிகளாக முந்தைய தலைமுறையில் பாரதி, பாரதிதாசன், ஜெயகாந்தன், சுஜாதா, சுந்தரராமசாமி ஆகியோரைக் குறிப்பிடலாம். இவர்களது படைப்பாளுமையும் வெளிப்பாட்டுக்களன்களும் முற்றிலும் வேறு வேறானவை, மாறுபட்ட மதிப்பீடுகளைச் சார்ந்தவை. ஆனால் தாங்கள் இயங்கிய களன்களில் எண்ணற்ற சாத்தியங்களுடன் அழுத்தமான பாதிப்புகளை இவர்கள் ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

என்னுடைய தலைமுறையில் அவ்வாறு தன்னையே இயக்கமாக மாற்றிக் கொண்டு உக்கிரமாக செயல்படும் படைப்பாளி யார் என்று யோசித்தால், முதலில் நினைவுக்கு வரும் பெயர் ஜெயமோகன்தான். கடந்த பதினைந்தாண்டுகளுக்கும் மேலாக நவீன தமிழ் இலக்கியத்தின் பல்வேறு சாதனைகளோடும், சர்ச்சைகளோடும், ஜெயமோகனின் பெயர் சம்பந்தப்பட்டிருக்கிறது.

‘ரப்பர்’ நாவல் வெளிவந்தபோதே ஜெயமோகனின் உக்கிரமான தனித்த படைப்பாளுமை, தமிழ் வாசகப்பரப்பால் கவனிக்கப்பட்டது. அதன்பின் ‘திசைகளின் நடுவே’ சிறுகதைத் தொகுப்பு வெளிவந்தது. தமிழ்க் கதையுலகில் பல புதிய சாத்தியங்களை அத் தொகுப்பு திறந்து விட்டது. பல்வேறு விதமான கதைகளைப் பிரக்ஞை பூர்வமாக அத் தொகுப்பில் ஜெயமோகன் முயற்சித்திருந்தார். ‘விஷ்ணுபுரம்’ நாவலில் ஜெயமோகனின் படைப்பு நிலை தன்

• மனுஷ்யபுத்திரன்

உச்சக்கட்டங்களை நோக்கிப் பயணம் செய்தது எனலாம். தமிழ்நாவலின் எல்லைகளை விஷ்ணுபுரம் ஒரே பாய்ச்சலில் தாண்டிக் கடந்து சென்றது. குடும்பக் கதைகளால் நசிந்துபோன தமிழ்நாவல் இலக்கியத்தில் விஷ்ணுபுரம் ஏற்படுத்திய உடைப்பு மிகத் தீவிரமானது. இந்திய தத்துவ மரபின் மாபெரும் கருத்துப் போராட்டங்களை விஷ்ணுபுரம் காவியத் தன்மையுடனும் நவீன பிரக்ஞையுடனும் எதிர்கொண்டது. பின்னர் வெளிவந்த பின்தொடரும் நிழலின் குரல் நாவல் மார்க்சியத்தின் பெயரால் இழைக்கப்பட்ட குற்றங்களை மனிதாறம் என்ற நோக்கில் கடுமையாக விமர்சித்தது. தமிழ்ச் சூழலில் அந்த நாவல் பல்வேறு மனோநிலைகளில் விமர்சனங்களைச் சந்தித்தது.



• ஜெயமோகன்

இலக்கிய விமர்சகராக ஜெயமோகனின் கருத்துக் கள் முரண்பாடுகளைக் கொண்டிருந்த போதிலும் நவீன இலக்கியம் குறித்த கருத்துருவாக்கங்களில் ஜெயமோகன் தொடர்ந்து ஈடுபட்டு வந்திருக்கிறார். 90களில் அரசியல்வாதிகளும் தொழில்முறைக் கோட்பாட்டாளர்களும், மோஸ்தர்களைப் பின்தொடர்ந்து செல்பவர்களுமே தமிழில் இலக்கிய விமர்சனத்தைத் தங்கள் கையில் வைத்துக் கொண்டு, படைப்பாளிகளையும் வாசகர்களையும் மிரட்டிவந்தனர். இந்தக் காலத்தில், படைப்பின் அழகியல் மற்றும் தத்துவார்த்தத்தை படைப்பியல் நோக்கில் பேசிய ஜெயமோகனின் விமர்சனங்கள் பலவிதங்களிலும் முக்கியமானவை. ஜெயமோகனின் விமர்சனங்களை தனிப்பட்ட உறவு நிலைகள் பாதித்து வந்திருப்பதுதான் அவரது மிகப் பெரிய பலவீனம். எனினும் இந்தப் பலவீனம் ஏற்படுத்தும் முரண்பாடுகளைத் தாண்டி இலக்கியத்தின் அடிப்படைப் பிரச்னைகளைப் பற்றி ஜெயமோகன் தொடர்ந்து பல்வேறு விதங்களிலும் உரையாடிக் கொண்டிருக்கிறார். இவ்வளவு பரந்த தளத்தில் இந்த உரையாடலை நிகழ்த்தக்கூடிய அவருக்கு இணையான இன்னொருவர், தமிழ் இலக்கியத்தில் இன்றைய கால கட்டத்தில் இல்லை.

– ஏக்ஜி



**—மனுஷ்யபுத்திரன்**

அக்னி சர்மா பக்கம்

# நடக்குமென்பார்;

## ஜூலை 30 முதல் ஆகஸ்டு 5 வரை

**மேஷம்** : உத்தியோக சம்பந்தமுள்ள எல்லா விஷயங்களும் திருப்தியாக நடந்து உங்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தும். புதிய பொறுப்பு, பதவி உயர்வு, இடமாற்றம் என அனுகூலமான திருப்பங்களே உண்டாகும். அதிலும், சட்டம், இராணுவம், காவல் துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். ராசிநாதனாகிய செவ்வாய் 11ல் லாபஸ்தானத்தில் பலமாக விளங்குவதால் தாராளமான பண வசதியும் புதிய பொருள் சேர்க்கையும் உண்டாகும். அப்புறமென்ன... கொண்டாட்டம் கொண்டாட்டம்தான்.

**ரிஷபம்** : குடும்பஸ்தானம் சம்பந்தமுள்ள எல்லா விஷயங்களும் திருப்தியாக நடந்து உங்களைச் சந்தோஷக் கடலில் ஆழ்த்தும். சுப காரிய முயற்சிகள் அனுகூலம் தரும். தள்ளிப் போய்க் கொண்டிருந்த மங்கலகரமான விஷயங்கள் எல்லாமே கை கூடி வரும். பிரிந்து போனவர்கள் ஒன்று சேர்வார்கள். உடன்பிறந்தவர்களால் மகிழ்ச்சி உண்டாகும். கணவன் - மனைவி இடையே அன்பும் பாசமும் இறுக்கமாகப் பிணைந்து காணப்படும். பிதுரார்ஜித சொத்து வகையில் சமாதானப் போக்கு ஏற்பட்டு, வில்லங்கங்கள் விலகும். குல தெய்வப் பிரார்த்தனை நிறைவேற்ற நல்ல சமயம்.

**மிதுனம்** : தொழில் சம்பந்தமுள்ள எல்லா விஷயங்களும் திருப்தியாக நடந்து உங்களைச் செல்வக் கடலில் ஆழ்த்தும். குறிப்பாக, சுய தொழில் வியாபாரம் 'ஓஹோ' என நடக்கும். புதிய தொழிலில் ஈடுபடும் சூழ்நிலை உருவாகும். கூட்டுத் தொழில் மேன்மை அடையும். கொடுக்கல் வாங்கல் தக்க சமயத்தில் கை கொடுக்கும். வெளிநாட்டுத் தொடர்புள்ள தொழில்களில் இதுவரை இருந்துவந்த சிக்கல்கள் மறைந்து, ஏற்றமான பலன்கள் ஏற்படும். கடன் தொல்லை காணாமல் போகும். வர வேண்டிய தொகை வந்து சேரும். 'ஜென்ம ராசியில் சனி' என்று பயம் தேவையில்லை. கிரக சஞ்சாரம் காரணமாக அதிர்ஷ்டமான பலன்களே ஏற்படும்.

**கடகம்** : உயர் கல்வி, படிப்பு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் திருப்தியாக நடந்து உங்களை வெற்றிக் கடலில் ஆழ்த்தும். மாணவர்களின் உழைப்பு, திறமை வீண் போகாது. எதிர்பார்த்துக் காத்திருந்த வெளிநாட்டுத் தகவல் இனிய செய்தி கொண்டு வரும். பிரபுவான், தனவான்களின் ஆதரவில் வேகமான வளர்ச்சி கிடைக்கும். பெண்களின் எண்ணம் நிறைவேறும் கமிஷன், காண்ட்ராக்ட்ஸ், இண்டஸ்ட்ரீஸ், போக்குவரத்துச் சாதனங்கள், வாகன உபகரணங்கள் ஆகியவை ஆதாயம் கொண்டு தரும். தான, தரும காரியங்களில் ஈடுபட்டு, மேலும் மேன்மை அடையலாம்.

**சிம்மம்** : உடல் ஆரோக்கியம் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் திருப்தியாக நடந்து உங்களை நிம்மதிக் கடலில் ஆழ்த்தும். குறிப்பாக, பெண்களைப் பீடித்திருந்த வலி, சூடு சம்பந்தப்பட்ட நோய்கள் பாதியாகக் குறைந்துவிடும். உத்தியோக வகையில் சில பிரச்னைகள் ஏற்பட்டு, குழப்பமான சூழ்நிலை இருக்கும். ஆனால் குருவின் சஞ்சாரத்தால் வாரத்தின் பின் பகுதியில் நிவர்த்தியாகும். எனவே, மேல் அதிகாரிகளிடம் சுமுகமான போக்கைக் கடை பிடிப்பது நல்லது. கிரக வழிபாடு, தெய்வ தரிசனம் நலம் தரும்.

**கன்னி** : எதிரிகள் சம்பந்தப்பட்ட எல்லா பிரச்னைகளும் இலகுவாகத் தீர்ந்து உங்களை அமைதிக் கடலில் ஆழ்த்தும். மறைமுகமாக இம்சித்து வந்தவர்கள்கூட விலகிப் போவார்கள். ராசிநாதன் புதன் 12ல் மறைந்து குருவுடன் கூடி, சஞ்சாரம் 11ல் சூரியன், சுக்ரன் 6ல் செவ்வாய் ஆகியோர் சஞ்சாரம் என்பதால், தெய்வ பலம் அபரிமிதமாக இருக்கிறது. அதனால் குடும்பத்திலும், உத்தியோகத்திலும் சகல விதத்திலும் ஆரோக்கியமான சூழ்நிலை அமையும். அரசு விவகாரங்கள் அனுகூலமாகும். பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**துலாம்** : புதிய முயற்சிகள் சம்பந்தப்பட்ட எல்லாப் பிரச்னைகளும் நல்ல

# நடக்கும்!



**கவிஞர் பழனிபாரதிக்கு (மீனம்) இந்த வாரம் இனிமையான பலனாமே!**

படியாக நடந்து உங்களை, பூரிப்புக் கடலில் ஆழ்த்தும். குறிப்பாக உத்தியோகம், சுய தொழில் முயற்சிகள் நல்ல திருப்பத்தைக் கொண்டு வரும். பொருளாதாரச் சிக்கல் படிப்படியாகக் குறைந்து, கூட்டுத் தொழில் முயற்சிகள் அளவான நன்மை தர ஆரம்பிக்கும். புதிய வர்கள் அறிமுகம், பிரபு தனவான்களின் ஆதரவு, என எது கிடைத்தாலும், விழுது போலப் பிடித்துக் கொண்டு உயர்ந்து விடுவீர்கள். ஞான மார்க்கம் நலம் தரும்.

**விருச்சிகம்** : தெய்வ காரியம் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் திருப்திகரமாக நடந்து உங்களை பக்திக் கடலில் ஆழ்த்தும். நீண்ட நாட்களாக நடைபெற இயலாமல் தள்ளிப் போன குல தெய்வப் பிரார்த்தனை நடத்த இதுவே சிறந்த தருணம். ராசிநாதன் செவ்வாய் 4ல், குடும்பத்தில் சஞ்சாரம். இதுவரை, 9ல் பாக்கியஸ்தானத்தில் சஞ்சாரத்தில் இருந்த குரு, சிம்மராசிக்குப் பிரவேசித்துள்ளார். இதனால் சஞ்சலமான மனநிலையே எதிலும் நிலவும். ஆனால் தெய்வ பலம் அதிகரித்துள்ள சூழ்நிலையில், எல்லாமே உடனுக்குடன் நிவர்த்தியாகும், கவலை வேண்டாம். பெண்களுக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். கிரக வழிபாடு கோடி நன்மை தரும்.

**தனுசு** : சுபகாரியம் சம்பந்தப்பட்ட மங்கலகரமான விஷயங்கள் எல்லாம் திருப்தியாக நடந்து உங்களை இன்பக் கடலில் ஆழ்த்தும் குரு பலம் ஆரம்பமாகி யிருப்பதால், திருமணம், புதுமனை புகுவிழா போன்ற இனிய விஷயங்களுக்கான முயற்சிகளைத் தாராளமாகச் செய்யலாம். நீண்ட நாட்களாக, குழந்தைப்பேறு இல்லாதவர்களுக்குக் கூட புத்திரபாக்கியம் வாய்க்கும். பூர்வீகச் சொத்து சம்பந்தப் பட்ட சிக்கல்கள் மறையும். கன்னிப் பெண்களுக்கு, உற்சாகமான மனநிலை அமையும். மாணவர்களுக்கு, வெளிநாட்டுப் பயணம் அதிர்ஷ்டமானதாக இருக்கும்.

**மகரம்** : வங்கி, அரசு, அரசாங்கம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் எல்லாம் திருப்தியாக நடந்து உங்களை நிம்மதிக் கடலில் ஆழ்த்தும். இழுபறியாக இருந்த நிதி நிலைமை ஜிங்கென்று உயர்ந்து கஜானாவை நிரப்பும். 6ம் இடத்தில் உலவும் சனிபகவானின் பரிபூரண அருளால், தொழிலில் இருந்து வந்த போட்டிகளும், எதிர்ப்புகளும் மறைந்து முன்னேற்றப் பாதை தென்படும். உலோகம், எண்ணெய், இரும்பு, இயந்திரம், தோல் வகை அதிக ஆதாயம் தரும் என்பதால் நம்பி ஈடுபடலாம். சகல காரியங்களையும் சாதித்துக் காட்டுவீர்கள். மாணவர்களுக்கு மாமூலான பலன்களே நடைபெறும்.

**கும்பம்** : வாழ்க்கைத் தரம், பணம் காசு சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் திருப்திகரமாக நடந்து, உங்களைச் செல்வக் கடலில் ஆழ்த்தும். கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் தொட்டதெல்லாம் பொன்னாகும். கையிருப்பு அதிகரிக்கும். குரு பகவான் 7ல் சஞ்சாரம் என்பதால் சுப காரிய முயற்சிகள் அனுகூலமாகும். பொன், பொருள், ஆடை ஆபரணச் சேர்க்கை ஏற்பட்டு வாழ்க்கை வசதிகள் பெருகும். பிரிந்தவர்கள் ஒன்று கூடுவார்கள். பெண்களுக்கு எதிர்ப்புகள் விலகி, இனிமையான மனநிலை உருவாகும். விளையாட்டு, கேளிக்கை மனமகிழ்ச்சி தரும்.

**மீனம்** : கலைத்துறை சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களும் திருப்திகரமாக நடந்து, புகழ்க் கடலில் ஆழ்த்தும். புத்தகம், பத்திரிகை, அச்சகம் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு சுபிட்சமான காலமாக அமையும். புதிய முயற்சிகள் பாராட்டு பெறும். குடத்திலிட்ட விளக்கு போலிருந்த உங்களின் திறமை, குன்றிலிட்ட விளக்குப் போல பிரகாசிக்கும். புதிய பொருள் சேர்க்கை, மக்களால் மகிழ்ச்சி, தெய்வ பலம் கூடுதல், என இனிமையான பலன்களே நடக்கும். குரு 2ம் இடத்தைப் பார்ப்பதால், சுப காரிய முயற்சி வெற்றி தரும். கிரக வழிபாடு நன்மை தரும்.

# 1

# கிராமம் நகரம் மாநகரம்

நா.முத்துக்குமார்



வாழ்க்கை ஒரு வழியைப் போல உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறது. வழிப்போக்கர்கள் வருவார்கள், போவார்கள். வழி எங்கே போகும்?

கிராமத்தில் பிறந்து வளர்ந்து, நகரத்தில் படித்து, தற்சமயம் மாநகரத்தில் வாழ்ந்து கொண்டிருப்பவன் நான்.

இந்த மூன்று நிலவியலின் அனுபவங்களும், மனிதர்களும், எனக்குக் கொடுத்த சில வளையல் துண்டுகளைக் கொண்டு ஒரு கலைடாஸ்கோப் தயாரித்துள்ளேன்.

இனி ஒவ்வொரு வாரமும் கலைடாஸ்கோப் உருள உருள, வெவ்வேறு சித்திரங்கள் விரிந்து கொண்டிருக்கும்.



கருக்குப் பைகளில் உள்ள சில்லறைகளில் விபூதி வாசனை வருவதை நீங்கள் கவனித்தது உண்டா?

ஒரு முறை எங்கள் பாட்டியின் சுருக்குப்பையை அவளறியாமல் திருடி, பிரித்துப் பார்த்தேன். அதில் கடவுள் ஒளிந்து கொண்டிருந்தார். கொஞ்சம் மிரட்சியும், கொஞ்சம் அதிர்ச்சியுமாய் இருந்த என்னை நோக்கி, காலம் அந்தச் சுருக்குப் பையில் சில்லறைகளைத் திருடிக் கொண்டு, அடகுச் சீட்டு ரசீதுகளை வைப்பது குறித்து கவலைப்படுவதாய்ச் சொன்னார். கைகள் நடுங்க திரும்ப வைத்து விட்டேன்.

நகரம், அம்மாக்களின் அஞ்சறைப் பெட்டியில் உள்ள சில்லறைகளைப் போன்றது.

அம்மாக்களின் உலகம் அஞ்சறைப் பெட்டிகளால் ஆனது. ஒவ்வொரு அஞ்சறைப் பெட்டியைத் திறக்கும்போதும் அதற்குள் ஓர் அம்மா அழுது கொண்டிருக்கிறாள்.

அதன் ஒவ்வொரு அறையிலும் அவளது கனவுகள் ஒளித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அதன் மஞ்சள் தூளில் அவள் காதல். அதன் மிளகாய்த் தூளில் அவள் கோபம். அதன் சில்லறைகளில் அவள் பாசம்.

சதுரங்க ஆட்டத்தில் சிப்பாய்களை வெட்டுக் கொடுக்காமல் சேமிப்பது மாதிரி, சேர்த்து வைக்கப்பட்ட சில்லறைகள் அவை.

காலம்காலமாய் அவளது பிறந்தகத்தின் வறுமையையும், பதற்றத்தையும் அவை

கிராமம், பாட்டிகளின் சுருக்குப்பையில் உள்ள சில்லறைகளைப் போன்றது. சுருக்குப்பைகளின் உலகம் வேறு உலகம். அதன் முடிச்சுகள் பிரியங்களால் ஆனவை. காலத்தின் இடுப்பில் அதே பழைய வாஞ்சையுடன் நிராதரவாய்த் தொங்கிக் கொண்டிருப்பவை.

அதன் எளிமையும் அழகும், எந்த விதத்திலும் நம்மை நோக்கிச் சவால் விடாதவை.

ஒரு மலைப்பிரதேசத்துக் காற்று மாதிரி எப்போது கேட்டாலும் பிள்ளைகளுக்கும் பேரன்களுக்கும் எடுத்துக் கொடுக்க, அதில் இன்னமும் சில்லறைகள் இருந்து கொண்டிருக்கின்றன.

சொல்லிக் கொண்டிருக்கின்றன.

புருஷனுக்கும், பிள்ளைகளுக்கும் தெரியாமல் பிறந்த வீட்டில் இருந்து வரும் சகோதரனுக்கு, அஞ்சறைப் பெட்டியில் இருந்து காசு எடுத்துத் தரும் அம்மாக்களை நீங்கள் பார்த்ததுண்டா? அம்மாக்கள் அக்காக்களாகும் அழகிய தருணம் அது.

அஞ்சறைப் பெட்டிக்குள்ளும் ஒரு கடவுள் ஒளிந்திருந்தார். ஆனால் இவரது கவலை வேறு வகையாக இருந்தது. தன்னுள் சேமிக்கப்படும் சில்லறைகள் எளிதில் கறை படிந்து விடுகின்றன என்பது அவரது வருத்தம்

**மா**நகரம், அப்பாவின் சட்டைப் பையில் உள்ள ரூபாய் நோட்டுக்களைப் போன்றது.

அப்பாவின் உலகம் திறக்கவே முடியாத கதவுகளால் ஆனது. அதன் ஒவ்வொரு வாசலிலும் கண்டிப்புகளால் ஆன கனத்தபூட்டு.

அப்பாவின் சாயலில் உள்ள பெட்டிக்கடைக்காரரிடம் சிகரெட் வாங்கும் போதெல்லாம் உங்கள் விரல்கள் நடுங்குவதுண்டா? அப்பாக்கள் சாயல்களிலும் நம்மைத் துரத்திக் கொண்டிருக்கிறார்கள்.

அப்பா பயமில்லாத ஒரே ஒரு மனிதன் ஆதாம் மட்டுமே. நம் பால்யங்கள் நம்மை ஆதாமாக மாறவே தூண்டுகின்றன.

ஆயின் அப்பாக்களின் கவலை அப்பாவாக இருந்து பார்த்தால்தான் தெரியும். ஒரு நாள், அப்பா தோழனாகும் தருணங்கள் வாய்க்கும். அந்தக் காலத்தில் நீங்கள் அப்பாவாகியிருப்பீர்கள்.

அப்பாவின் சட்டைப் பையிலும் ஒரு கடவுள் அமர்ந்திருந்தார். ரூபாய் நோட்டுக்களால் மூச்சுத் திணறும் அவருக்கு இதயங்கள் பணப் பெட்டிகளாக மாறுவது குறித்து பயம் இருந்தது.



''இவ்வளவு வரதட்சணை கேட்கறீங்களே... போலீஸ் பயம் இல்லியா?''

''மாமூலுக்கும் சேர்த்துதான் கேட்கறோம்!''

- அம்பை தேவா

**கி**ராமத்தில் வாழ்ந்தாலும், நகரத்தில் வாழ்ந்தாலும், மாநகரத்தில் வாழ்ந்தாலும், நாமெல்லாம் காடுகளின் பிள்ளைகள். காடுகளில் வேட்டையாடித் திரிந்து குகைகளில் வாழ்ந்தவர்கள். அதன் நினைவலைகள் எங்கு வாழ்ந்தாலும் நம்மைத் துரத்திக் கொண்டேயிருக்கும்.

ஜார்ஜ் தாம்சன் போன்ற மானுடவியல் ஆய்வாளர்கள், நம் சமூகத்தைத் தாய் வழி சமூகமாகச் சித்திரிக்கின்றனர். இனக் குழுவின் தலைவியாக பெண்ணே இருந்தாள். அதனால் தான் இன்றும் சிறு தெய்வங்கள் பல பெண் தெய்வங்களாக இருக்கின்றன.

குகைகளில் வாழ நேர்ந்தபோது தீ நமக்குக் கடவுளாக இருந்தது. உணவுக்கும், வெளிச்சத்துக்குமான தீ. சிக்கிமுக்கிக் கற்களில் உரசி

உருவான தீ. மனிதனின் முதல் விஞ்ஞானத் தீ.

இரவுகளில் தீயைப் பாதுகாக்கவும், மிருகங்களிடமிருந்து தப்பிக்கவும், ஆண் காவல் புரிய வேண்டி வந்தது. ஆண், குகை வாசலைப் பார்த்து அமர்ந்திருக்க, இரவுகள் பூச்சிகளின் சப்தத்துடன் நீண்டு கொண்டே இருந்தன. அந்தக் குகைவாசல் இன்னமும் யுகங்கள் தாண்டி, ஒவ்வொரு ஆணின் உதிரத்தில் இருந்து கொண்டு துரத்திக் கொண்டே இருக்கிறது.

இன்றும் நான் எந்த உணவகம் அல்லது கடைக்குச் சென்றாலும், வாசல் பார்த்த நாற்காலிகளையே தேர்வு செய்து அமர்கின்றேன். நான் மட்டும் அல்ல, எல்லா ஆண்களின் முதல் தேர்வும் வாசல் பார்த்த நாற்காலிகளே. அது காலியாக இல்லாத பட்சத்தில்தான் மற்ற நாற்காலிகள். பெண்களுக்கு இந்த வாசல்களின் துரத்துதல் இல்லை. தன்னிச்சையாக அவர்களின் இருக்கை தேர்ந்தெடுக்கப்படுகிறது.

சமீபத்தில் மலையாளக் கவிஞர் சச்சிதானந்தனின் கவிதை ஒன்றைப் படித்தேன். மேலே சொன்ன பின்னணியில் அந்தக் கவிதையை அணுகிய போது அதன் ஒவ்வொரு வரியும் காட்டுத் தீயுடன் என்னைத் துரத்திக் கொண்டேயிருந்தன.

அந்த கவிதை :

**நினைவில் காடுள்ள மிருகம்**

நினைவில் காடுள்ள மிருகத்தை
எளிதாகப் பழக்க முடியாது
அதன் தோலில்
காட்டுச் சதுப்பு நிலங்களின் குளிர்ச்சி
அதன் மயிர்க் கால்களில்
காட்டுப் பூக்களின் உக்கிர வாசனை
அதன் கண்மணிகளில்
பாறைகளில் வழுக்கி விழும்
காட்டுச் சூரியன்
அதன் வாயில்
காட்டாறுகள் கர்ஜிக்கின்றன
அதன் நாவில்
காட்டுத்தேன் எரிகின்றது
அதன் செவிகளில்
அடவிகளின் மேகங்கள் முழங்குகின்றன
அதன் ரத்தத்தில்
காட்டானைகள் பிளிறுகின்றன
அதன் சிந்தனைகள்
காட்டுப் பாதைகளில்



குதித்தோடுகின்றன
நினைவில் காடுள்ள மிருகத்தை
எளிதாகப் பழக்க முடியாது
என் நினைவில்
காடுகள் இருக்கின்றன

- என்று அந்தக் கவிதை முடிகிறது. என் நினைவிலும் காடுகள் இருக்கின்றன. உங்கள் நினைவில்?...

(சந்திக்கிறேன்...)

படம் : **ஸ்ரீஹரி**

கண்மணியின் இளம் கைகள் வியர்த்து, கசகசப்புடன் தெரிந்தன. மாசிலானின் அடிவயிறு சிலீரிட்டது. அவளைக் கண்கொண்டு பார்க்க முடியவில்லை. அவளைத் துன்பப்படுத்துகின்றோமோ என்கிற குற்ற உணர்வினால், உற்சாகம் குன்றியவனாக தழையறுப்பில் பின் தங்கினான்.

அவன் அம்மாவோ, ஒடுங்கிய வயதிலும் கூலிக்குப் போவதில் சுணங்கியதில்லை. அப்பனோ, கூலிக்கு ஆடுகளை மேய்க்க மலைக்கு ஓட்டிப் போகிறான்.

"எம்மா, நீ ஊட்டப் பார்த்துக்க. வேற ஒண்ணும் வாணாம்'' என்றார்கள் அவர்கள். அவனும்தான் சொன்னான். அவள் கேட்கவில்லை. அவனோடு அரிவாளைத் தூக்கிக் கொண்டு தழையறுக்கக் காடேறிவிட்டாள்.

தரைக்காடே அல்லோல கல்லோலப் பட்டுக் கொண்டிருந்தது. அங்கங்கே சனங்கள் தழையறுத்தார்கள். ஆந்திராவிலிருந்து தழை எருவேண்டி காலையிலேயே ஊருக்குள் ஒரு லாரி வந்தது. ஆவலோடு ஒப்புக் கொண்டது சனம். ஒரு தழைக் கட்டுக்கு ஒரு ரூபாய் என்று விலை முடிவானதும், காட்டில் இறங்கிவிட்டார்கள் சனங்கள்.

பீடி வேலை நின்று மாதத்துக்கும் மேலாகிறது. மண்டிகளை மூடி விட்டார்கள். புகையிலை வாசமும், பீடி இலையின் வெறுட்டும் மணமும் பழக்கத்துக்குத் தப்பி நினைவிலிருந்தே மறைந்து விட்டன. ஊரின் முக்கால் பாகம் பேருக்கு பீடித் தொழில் தான். வேலை நின்றதும் வாழ்க்கையும் நின்று விட்டது.

நேற்றெல்லாம் தனியாளாக மலையடி வாரத்திலே இருந்து வேர்களைத் தோண்டினான் மாசிலான். துரிஞ்சி, முள்வேலி என்று அடியோடு வெட்டி, காய்ந்து போயிருக்கும் வேர்திம்மைகளை தோண்டத் தோண்ட, கண்மணி எடுத்து



ரவில் யோசித்துக் கொண்டு நெடு நேரம் விழித்துக் கொண்டிருந்தான்.
ஆர்ப்பாட்டத்தில் கைதாகி பல வருடங்களுக்கு அவனை சிறை வைத்து விட்டது போல நினைவுகள் புரண்டன.

அழகிய பெரியவன்

# நாணல் மனம்

## 3



லான் வேர்களைப் பெயர்க்கக் காத்திரமாய்ப் போடும் குத்துக்கள் அவளின் உறுதியைக் குலைத்தன. அவற்றை ஒழுங்காய் வெட்டித் தறித்து, திண்டு கட்டிக் கொண்டு போய் டவுனில் விற்று விட்டு வந்தான் மாசிலான். இரவில் சாப்பிடும் போது கையை ஊதிக் கொண்டிருந்தான் அவன். அவனின் கையைப் பிடுங்கிப் பார்த்தாள். கடப்பாரை பிடித்ததால் உள்ளங் கையின் சதை மேடுகள் கன்றி கொப்புளங் களாகியிருந்தன. அவள் கட்டுப்படுத்திக் கொண் டிருந்த அழுகை இப் போது பெருக்கெடுத்தது.

கட்டுக் கொடிகளையும், சுண்டைச் செடியின் தழைகளையும் கண்மணி தழுவி அறுத்தாள். அரிவாளின் சத்தமும், அவள் மூச்சும் ஒருசேரக் கேட்டன. வியர்வையால் முன்னெற்றியில் முடிக் கற்றைகள் ஒட்டிக் கொண்டிருந்தன. கடும் வியர்வையின் வாசம் அவள் மீது வீசியது.

"முடியல்லைன்னா ஒக்காந்துக்கம்மே! நானு பாத்துக்கிறேன்."

"ஏம் முடியாது? நீ கம்முனு அறுய்யா!"

செடிகள் சில இடங்களில் நெருக்க வைத்தாள். முதுகிலும் நெஞ்சிலுமாக வியர்வை முத்துக்கள் போல அரும்பி உடைந்தன. கண்மணிக்கு துக்கம் அடைத்தது. மாசி

மாகவும், சில இடங்களில் விலகியும் இருந்தன. நெருங்கியும் விலகியும் அறுத்தபடி போனார்கள். அங்கங்கு பேச்சுச் சப்தங்கள் கேட்டன. கிளியம்மாளக்காளின் இடுப்புக்குப் பின்னால் அரிவாள் செருகியிருந்தது. அவள் இலேசாய் குனிந்தவாறே கண்மணியை ஒட்டி அறுத்துப் போனாள்.

"என்னா கிளியம்மா, முள்ளு குத்திடுச்சா? கீழ



"உன் மருமகள் 'கல்நெஞ்சக்காரி'ன்னு எப்படி மாமி சொல்றீங்க?"

"வயித்துல கல்'லுன்னு டாக்டர் கிட்ட டெஸ்ட் பண்ணிப் பார்த்தப்ப நெஞ்சுல 'கல்' இருந்துச்சாம்டி!"

— கிரிஜா மணாளன்

என்னா இருக்குன்னு பாத்து ஒக்காரக் கூடாதா?"

அவளையொட்டி அறுத்துக் கொண்டிருந்த சுப்பிரமணி கேட்டான்.

"ஓ மாசிலான். ஆச்சாடா? பொழுது ஏறுது. உன்னுமேல்ட்டு போயி கத்தைகள எண்ணி வண்டியில ஏத்தணும்."

தழையறுப்பை மேற்பார்வையிடும் தன்ராஜ், ஒரு ஓசப்புப் பாறையின் மேல் ஏறி நின்று கத்தினான்.

"ஓய்... ஆச்சினோவ்" என்று திரும்ப சத்தம் போட்டான் மாசிலான்.

"கண்மணி, போதும் நிறுத்தும்மே. நானு கத்தக்கட்ட கொஞ்சம் கட்டுக்கொடி பார்க்கிறேன்."

சொல்லிக் கொண்டே நகர்ந்தவனை கண்மணியின் அலறல் பதறச் செய்தது. ஓடி வந்தான் மாசிலான். அவளின் உள்ளங்கையின் அடிப்புறத்திலிருந்து இரத்தம் சொட்டியது. தழையறுக்கையில் அறுத்துக் கொண்டிருந்தாள் கண்மணி. அரிவாளைக் கீழே போட்டு விட்டு உட்கார்ந்து மடியில் கையை வைத்துக் கொண்டு, குறுகி அழுதாள் கண்மணி. துக்கமும், பதற்றமுமாக துண்டிலிருந்து கிழித்து காயத்தை இறுக்கிக் கட்டினான் மாசிலான். இரத்தம் துண்டை நனைத்துக் கசிந்தது. கிளியம்மாளக்காள் ஒரு மூலிகைத் தழையைக் கொண்டு வந்து கசக்கி சாற்றைப் பிழிந்தாள். தழைக்கட்டுகளை ஊர் எல்லைக்குத் தூக்கிக் கொண்டு போய் போட்டு, கணக்கு தரும்வரை கண்மணியை கிட்ட நெருங்க விடவில்லை. அவளை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டான் மாசிலான். அறுத்த தழைக்கட்டுகளுக்கு ஈடாய் ரூபாயைக் கையில் வாங்கியபோது, அவனுக்குள் கொஞ்சம் தெம்பு பிறந்தது.

வீட்டுக்குப் போனதும் கண்மணியின் கையைப் பார்த்தான். பச்சிலைச் சாற்றில் காயம் இறுகியிருந்தது.

"இனிமே நீ வீட்டுலயே இருந்தாப் போதும். என்னான்னாலும் நான் பாத்துக்கிறேன்."

"இப்ப என்னா ஆயிடுச்சிய்யா? உன்ன தனியா உட்டுட்டு நானு ஊட்டுல இருக்கறதுக்கு இந்த ஒடம்புல ரத்தம் ஓடுதா, சீவு ஓடுதா? உனுக்கு ஆனதுதான் எனக்கும்."

சாயங்காலத்தில் வீட்டு வாசலில் அமர்ந்து கதை பேசிக் கொண்டிருந்தார்கள் அவர்கள். எல்லாமே நேற்று நடந்தது போலிருந்தது அவர்களுக்கு. தன்ராஜ் அவர்களைத் தேடி வந்து சேர்ந்தான்.

"என்னாடா மாசிலான், எப்படிப் போது பொளப்பு? நீயி கல்யாணம் கட்டிக்கிட்ட நேரம் இப்புடியா இருக்கணும்?"

"எது வந்தாலும் சமாளிக்க வேண்டியதுதான். எனுக்கு மட்டுமா, ஊருக்கே ஒடச்சல்தானே? இப்பிடியே போகுமா இந்த ஸ்ரைக்கு? எப்போ எல தர்றாங்களாம் மண்டியில?"

"பேச்சு வார்த்தையில ஒண்ணும் முடிவு ஆகலியாம். எந்தச் சங்கத்தாளுங்க ஒளுங்கா இருந்தானுங்க? ஏதோ இப்ப ஸ்டெடியா இருக்கிறானுங்க போல. சங்கத்தாளுங்க ஆயிரம் பீடிக்கி அம்பது ரூபா கேக்குறாங்களாம். எல நஸ்டம், பொகல நஸ்டம்னு நம்ம கூலியில புடிக்கக் கூடாது. லீவுக் கூலி வேணும். இப்பிடி பல கோரிக்கைங்க. மொதளாளிங்க எதுக்கும் எறங்கிவரல."

கண்மணி ஈர்க்கொல்லியால் ஈர்க்கத் தொடங்கியிருந்தாள். அவள் ஈர்க்கும் சப்தம் உம்கொட்டுவது போலக் கேட்டுக் கொண்டிருந்தது.

"நாளைக்கி வேலூருல கலக்டர் ஆபீஸ் முன்னாடி ஆர்ப்பாட்டம். எல்லாரும் போனாலும், நீ வேணா யோசன பண்ணி செய்யி. புதுசா கல்யாணமானவன் வேற. நான் வரட்டா?"

கண்மணி என்னவோ போகச் சொல்லி விட்டாள். மாசிலானுக்கு முடிவெடுக்க முடியவில்லை. இரவில் யோசித்துக் கொண்டு நெடு நேரம் விழித்துக் கொண்டிருந்தான். ஆர்ப்பாட்டத்தில் கைதாகி பல வருடங்களுக்கு அவனை சிறை வைத்து விட்டது போல நினைவுகள் புரண்டன. பயமாய் இருந்தது. இருக்கின்ற கஷ்டம் தீர வேண்டுமென்றால் ஆர்ப்பாட்டத்துக்குப் போய்த்தான் ஆகவேண்டும். 'எத்தனை நாட்களுக்குக் கண்மணிக்கு வறுமையைக் காட்டிக் கொண்டிருப்பது' என்று நினைத்துக் கொண்டான் மாசிலான் முடிவாக.



"நாட்டில் பஞ்சம் தலைவிரித்து ஆடுகிறது மன்னா."
"இனிமேல் ஒழுங்காக ஆடச் சொல்லுகிறேன். நீங்க போங்க..."
— எஸ். மோகன்

**கா**லையில் வெயில் ஏறுவதற்கு முன் பாகவே லாரி ஒன்று ஊருக்குள் வந்து நின்று விட்டது. பீடித் தொழிலாளர்கள் அதில் ஏறினார்கள். போராட்ட வாசகங்கள் எழுதப்பட்டிருந்த பேனர்கள், லாரியின் இரண்டு பக்கங்களிலும் கட்டப் பட்டிருந்தன. பக்கத்து ஊரில் ஏறிக் கொண்ட சிலரும் அதில் இருந்தார்கள்.

மாசிலான் கண்மணியிடம் சொல்லிக் கொண்டு லாரியிலே ஏறினான். லாரி கிளம்பும் வரை அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருந்தாள் கண்மணி. இறங்கிவிடலாமா என்று தோன்றியது அவனுக்கு. பரிதாபமாகத் தெரிந்த அவள் கண்கள், காலை ஒளியில் ஒரு நீர்த்துளிபோல் அவன் முன்னே சிமிட்டின. லாரி கிளம்பியதும் அவளைப் பார்த்து துயரமுடன் கையசைத்தான் மாசிலான்.

(தொடரும்)

# நீங்கள் கேட்டவை-தராசு

● சச்சின் சக்திவேல், மயிலாடுதுறை.

? அரசு ஊழியர்கள் ஓய்வு பெறும் வயதை ஐம்பத்தாறாகத் தமிழக அரசு குறைக்கப் போகிறதாமே? இதனால் அனுபவசாலிகள் பலரை நாம் இழக்க நேரிடுமே?

! குறிப்பிட்ட சிலரின் அனுபவம் இல்லாமல் தீராது என்கிற நிலையில் அவருக்கு மறு நியமனம் அல்லது பதவி நீடிப்பு தந்தால் ஆயிற்று.

● செ.ரா.ரவி, ஒட்டன்சத்திரம்.

? மழையே காணோம்; மழை நீரைச் சேமிப்பது எப்படி...?

! பொறுங்க, செயற்கை மழை வரும்! அதற்கு முன், காண்டிராக்டர்கள் காட்டில் மழைதான்!

## டெஸ்மா மோசமான முன்னுதாரணமா?

● எஸ்.ஆர். ஸ்வாமி,
திருநெல்வேலி - 11.

? தமிழக முதல்வரின் டெஸ்மா ஒரு மோசமான முன்னுதாரணமாக அமைந்து விடுமா...?

! அது உச்ச நீதிமன்றத்தின் இறுதித் தீர்ப்பைப் பொறுத்து அமையும்.

● ஆர். அரவிந்த், நெல்லை - 14.

? சென்னையில் போதை சாக்லேட் விற்ற நான்கு பேர் கைது செய்யப்பட்டிருப்பது பற்றி...?

! கண்டுபிடித்து நடவடிக்கை எடுத்த காவல்துறைக்கு நன்றி. ஆனால், ஓர் இடத்தில் ரெய்டு நடந்தால் ஒன்பது இடங்களில் இந்த விஷ வியாபாரம் செழிக்கிறது என்று அர்த்தம். விழிப்புணர்ச்சி தொடரட்டும். இல்லையேல் தமிழகமே நாசமாகி விடும்!

● எம். இராஜேந்திரன், லால்குடி

? 12,00,000 அரசு ஊழியர்களின் 50,00,000 வோட்டுக்களுக்காக ஆறு கோடி மக்களுக்குத் துரோகம் செய்தவர் கருணாநிதி என்று அமைச்சர் செம்மலை கூறு

• திரும்பிய தாக்குதல்!

கிறாரே...?

! இதிலிருந்தே தெரிகிறது... அரசு ஊழியர் குடும்பங்களைச் சேர்ந்த ஒரு வாக்குகூட இனி அ.தி.மு.க.வுக்கு இல்லை என்பதை அமைச்சர் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறார்.

● வி. முத்தையா,
திருநெல்வேலி டவுன்.

? விருதுநகரில் காமராஜருக்கு மணி மண்டபம் அமைக்க சென்னையில் அடிக்கல் நாட்டி, திறப்பு விழா செய்தாரே ஜெயலலிதா....?

! ரிமோட் கண்ட்ரோல் இயக்கம் டெல்லி வரை செயல்படும்போது, விருது நகர் என்ன ஜுஜுபி!

● எம். மதனகோபால்,
மும்பை - 16 ✱

? ரயில் நிலையங்களில் இன்டர்நெட் வசதி வரப் போகிறதே, இதைப் பற்றி...?

! அப்பாடா! இனி விபத்துகள் பற்றிய செய்திகளை உடனுக்குடன் தெரிந்து கொண்டு ஆன்லைன் காப்ரா அடையலாம்!

● எம்.கே. இளமதி, பேரையூர்.

? விவேக்கின் பஞ்சு படம் என்ன ஆயிற்று...?

! இருக்கிற காமெடி சரக்கை எல்லாம் ஒரே படத்தில் ஊற்றி, அது ஒரு வேளை ஒரேயடியாக ஊற்றிக் கொண்டால்... எனவே பிய்த்துப் பிய்த்து, தனி டிராக்காக அமைத்து, ஐந்தாறு படங்களுக்குக் கொடுத்து விட்டாராம், விவேக். காற்றுள்ளபோதே பறக்கத் தெரிந்த பலே பஞ்சு!

● கிருஷ்ண ராஜ்கோபால்,
சென்னை - 92.

? தமிழ் இப்போது எங்கெல்லாம் மெள்ளச் சாகிறது...?

! எங்கெல்லாம் தழைத்து வளர நல்ல வசதி இருக்கோ, அங்கெல்லாம்தான். உதாரணமாக, டி.வி, எஃப்.எம்.ரேடியோ, சினிமா, பத்திரிகை, பள்ளிக்கூடம்.

● எம். திருமலை, நாமக்கல்.

? நீதிமன்றம் பார்த்து அரசு ஊழியர்களைக் காப்பாற்றியிருக்க முடியாதா?

! உச்ச நீதிமன்றம் காப்பாற்றத்தான் முன் வந்திருக்கிறது. அதன் ஆணை மதிக்கப்படும் என்று நம்புவோம்.

● சு. ராதாகிருஷ்ணன், எர்ணாகுளம்.

? 'சோனியா வெளிநாட்டவர்' என்ற பிரச்னை மீண்டும் தலை தூக்கியுள்ளதே...?

! வெளிநாட்டவர் என்றதோடு நிறுத்திக் கொண்டிருந்தால் பிரச்னை வெடித்திருக்காது. 'அனுபவம் போதாது; அயல்நாட்டவர் பிரதமர் ஆனால் இந்தியாவில் பாதுகாப்புக் குப் பின்னடைவு' என்றெல்லாம் பேசப் போக, எதிர்த்தாக்குதலும் எல்லை மீறிவிட்டது.

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்

? பாகிஸ்தான் குழந்தைக்கு பெங்களூரில் இதய அறுவை



• ஓய்ந்த சக்தி



• அபாய அமைதி!



• புரிந்த விஷயம்



• பறந்த பஞ்சு!

❑ ரூ 100 பரிசு பெறுபவர்:
எஸ்.ஆர். ஸ்வாமி
47, எல்.ஐ.சி. காலனி,
மகாராஜா நகர்,
திருநெல்வேலி - 11

✱ ரூ 50 பரிசு பெறுபவர்
எம்.மதனகோபால்,
ஜே.15, டெலிபோன்ஸ் காலனி,
மாஹிம் மேற்கு,
மும்பை 400 016.

சிகிச்சை வெற்றிகரமாக நடத்தி, மனித நேயத்தை நாம் நிரூபித்துள்ளோம். இது 'பாக்'கிற்குப் புரியுமா...?

! தூண்டில்காரனுக்குத் தக்கையே குறி. பாகிஸ்தானுக்குக் காஷ்மீர்தான் குறி. மற்றவை கண்ணுக்குத் தெரியாது.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? இந்தியாவிலேயே தமிழ்நாடுதான் அமைதிப்பூங்கா என்று அமைச்சர் ஓ. பன்னீர்செல்வம் கூறியுள்ளாரே...?

! ஆட்சியின் கடுமை தகிக்கிறது. அமைதிப்பூங்கா, நாளை மயான அமைதியாக மாறாமல் இருந்தால் சரி!

● பொன்விழி, அன்னூர்

? இப்பொழுது வரும் பாடல்களின் வரிகள் தராசுவுக்குப் புரிகிறதா...?

! தராசுவுக்குப் புரியாதிருப்பதே நல்லது என்பது மட்டும் புரிகிறது.

● தி. ரங்கசாமி, மதுரை - 16

? குழந்தைகள் மீது ஆங்கிலத்தைத் திணிக்க முயல்கிறோம். Put, But என்பதில் ஒலி பேதம்; Food - fool என்பதில் காணும் பேதம்; Pin - fineஇல் வேறுபாடு - இவற்றை மனத்தில் இருத்திக் கொள்ளச் சிரமப்படுவதால் மூளை களைப்புற்று உடல் நலம் பாதிக்கப்படவில்லையா...?

! குழந்தைகளின் மூளைக்கு உள்ள சக்தி அபாரமானது. இதனால் எல்லாம் மூளை களைப்புறுவதில்லை. ஆங்கிலத்தைத் திணிக்காமல் கலபமாகக் கற்றுத் தர முடியும். அதற்கு ஆற்றல் மிக்க ஆசிரியர்களை முதலில் உருவாக்க வேண்டும். நிற்க இறுக்கப் பிடித்த ஆடை, ஷு, சின்ன பெஞ்சில் ஏழு குழந்தைகள், கை ஒடிய ஹோம் வொர்க், புத்தக மூட்டை, தேவையற்ற கண்டிப்புகள் – இவை பற்றித்தான் கவலை கொள்ள வேண்டும். உடல் நலம் அதிகம் பாதிக்கப்படுவது இவற்றால்தான்.

● கு. அருணாசலம், தென்காசி.

? ஓர் ஆணுக்கு வேலை தேடுவது; ஒரு பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடுவது - இரண்டுக்கும் உள்ள முனைப்பின் தன்மை?

! ஒரு பெண்ணுக்கு வேலையும் ஓர் ஆணுக்கு மணமகளும் தேடுவதைப் போன்றதுதான்.

தலைமுடியில் பிரச்சனை என்று தவிப்பானேன்

# டாக்டர்களிடம் கேளுங்கள்!

முற்றிலும் டாக்டர்களால் நடத்தபடும் V-Care ல்
உங்களுடைய முடியின் தன்மையை அறிந்து
அதற்கு ஏற்ப சிகிச்சை அளிக்கப்படுகிறது.
இனி உங்களுக்கு முடி பிரச்சனை என்னவானாலும்
V-Care ல் நிரந்தர தீர்வு உள்ளது என சந்தோஷப்படலாம்

## பொடுகு, புழுவெட்டு

கவலை வேண்டாம் இந்தியாவில் முதல் முறையாக Hair Scanner - ஆல் பொடுகின் அளவைப்பார்த்து பொடுகிற்கு நிரந்தர தீர்வு அளிக்கப்படுகிறது.

## முடி உதிர்தல்

தலைமுடி சாம்பிளை எடுத்து Scalp Analysis மற்றும் Tricho Analysis செய்து Trichology" என்ற Scientific முறையில் முடி கால்களை வலுப்படுத்தி எந்தவிதமான முடி உதிர்தல் பிரச்சினைக்கும் தீர்வு அளிக்கப்படுகிறது.

## HAIR REMOVAL

வேண்டாத ரோமங்களை அகற்ற இந்தியாவில் முதன்முறையாக லண்டனிலிருந்து Latest advanced Plasmalite System - மூலம் நிரந்தரமாக எந்தவித பக்க விளைவுகளு-மில்லாமல் சிகிச்சை அளிக்கப்படுகிறது.

## தலை வழுக்கை

தலை வழுக்கை உள்ளவர்களுக்கு AMERICAN HAIR BONDING & WEAVING SYSTEM முறைகள் மூலம் நிரந்தர தீர்வு

## பார்லர் அறிமுக சலுகை:

வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக்கு இணங்க 10.07.2003 அன்று முதல் நாங்கள் திறக்கும் பியூட்டி பார்லரில் காலை 11 மணியில் இருந்து மாலை 3 மணிக்குள் வருபவர்களுக்கு

**EYE BROWS THREADING**

***FREE! FREE! FREE!***




## Mrs.Praba Reddy

(Member in British Association of Beauty Therapy and Cosmetology)
D.T.E., B.T.H.D., M.A., M.S.,
Dip.In Bridal Dressing(Singapore)
Cinema Secrets
Hollywood Makeup(London)

## CHENNAI CLINIC:

#15, New Giri Road, G.N.Chetty Road
(near Apollo Cliniq) T.Nagar, Chennai-17
Ph:28260064, 52125659 Cell:98840 55550

## Praba's Herbal Beauty Clinic

116, Bussy Street, Pondicherry-1
Ph:0413-2348920,21
Cell:98423 33777

## Beautician Course

மேலை நாட்டு முறைப்படி
சிறந்த முறையில் பயிற்சி
அளிக்கப்படும்.

## Sun T.V- யில்

வாரந்தோறும் சனிக்கிழமை
காலை 8.30 மணிக்கு Sun T.V- யில்
"உங்களுக்காக" அழகு குறிப்புகள் பகுதியை
காண தவறாதீர்கள்.




## எமது மற்ற சிகிச்சைகள்:

- உடல் எடையைக் குறைக்க.....
- வேண்டாத ரோமங்களை நீக்க.....
- மார்பகத்தை பெரிதாக்க, சிறிதாக்க...
- அறுவை சிகிச்சையின்றி முகச்சுருக்கம் போக்க
- Acne, பரு, மங்கு, மற்றும் மருநீக்க.....
- முகக்கருப்பை பொலிவாக்க...
- ஹைடெக்ஃபேஷியல்ஸ்
- பெர்மெனன்ட் மேக்கப்

SPOTLIGHT



"உங்களுக்கு டாக்டர் புதுசா என்ன வியாதின்னார்."

முதியவள் முதியவனிடம் கேட்டாள். முதுமை என்ற ஸ்தானத்தின் வயதில அவளின் வயதில் இரண்டையோ நான்கையோ கூட்டிக் கொள்ளலாம். அவருக்கு ஏறக்குறைய கூட்டியதைக் குறைத்துக் கொள்ளலாம். வியாதி

# போர்த்தப்படாதவை

உடுத்தியிருந்த சேலை மேல் சுடிதார் போன்றதைப் போட்டுக் கொண்டாள். அடிப்பாதத்தைக் கூட மறைத்து கால்களில்லாதவளாக்கியிருந்தது. கால்கள் இல்லாதவள் என்றால் ஆவியா...?

✓சுப்ரபாரதிமணியன்

இல்லாத பெருமையில் நிமிர்ந்து நின்று கொண்டார் அவர்.

"ஆமா...உங்களுக்கு டாக்டர் புதுசா என்ன வியாதின்னார்ன்னு வழக்கமான கேள்வியை நானும் கேட்டுக்கறேன்."

இருவரின் சிரிப்பிலும் பொக்கை வாய்த்தனம் தெரிந்தது. ஈறு கெட்டு பற்கள் ஆடிப்போகிற வயசு. பலத்தச் சிரிப்பிற்கு எங்கோ இடுக்கில் பல் வலிக்கத் தோன்றலாம். கூசிக் கொள்ளும் இருவருக்கும். பல் வலி காரணமாய் சுழற்றி எறியப்பட்ட பற்களின் இடைவெளியில் குளிர் காற்று தவழ்ந்து வெளியேறும் போது, கிச்சு கிச்சு மூட்டுவது போலிருக்கும். கோட், சூட் போட்டு குளிர் அறையில் உட்கார்ந்திருக்கும் மருத்துவர்களைக் கேலி செய்வது போல், ஏதாவது வியாதியைச் சொல்லிக் கொள்வர்.

"ஆஸ்பத்திரி காம்பவுண்டைவிட்டு வெளியே போறப்போ நமக்கு இல்லாத வியாதியைக் கண்டு புடிச்சு நமக்கு நாமே சொல்லிக்க வேண்டியதுதா."

"முடக்கிப் போடற எந்த வியாதியும் நமக்கு வர்லேங்கறதுக்கு யாருக்கு தேங்க்ஸ் சொல்லணும்ன்னு தெரியலே."

"தேங்க்ஸ் சொல்ற லிஸ்ட் எங்கிட்ட பெரிசா இருக்கு. பஞ்சுத்தூளா அடப் பட்டிருக்கற காத்து, சாக்கடை, முனிசிபாலிட்டி, பிளாஸ்டிக் குப்பை, தண்ணிப் பஞ்சம் கொடுமைன்னு எல்லாத்திலயும் இருந்து காப்பாத்த பெரிய சக்தி ஒண்ணு இருக்குது."

"கடவுள்ன்னு சொல்லலாமா?"

"உடம்பு பலவீனப்பட்டுட்டாலும் மனசு இன்னமும் பலவீனப்படலே... கடவுள்ன்னு சொல்லத் தயக்கமா இருக்கு. சுவாசம் திணறிக்கிட்டிருக்கும்போது அப்பிடிச் சொல்வேனோ என்னமோ...அப்படிச் சொல்லாமலேயே டக்குன்னு செத்துப் போயிரணும்..."

"உங்க பிடிவாதம் ஜெயிக்கணும்."

மருத்துவமனை வளாகத்தை அவர் கடைசி முறையாகப் பார்ப்பது போல ஒரு நிமிடம் நின்று பார்த்துக் கொண்டார்.

"என்ன விசாலம்.... என்ன அழகு! இவ்வளவு அழகை வெச்சுட்டு வியாதிஸ்காரகளா உள்ளாற அடக்கி வெச்சிருக்கு..."

"எதுவா இருந்தாலும் இருந்திட்டுப் போகட்டும். நாம வந்து போறதுக்குன்னு ஒரு எடம் இருக்கே. எங்காச்சும் நெழல்லே உக்காந்து பேசிக்கிட்டிருக்கலாம். கால நீட்டினா புல் குளுகுளுன்னு இருக்கும். பசின்னா கேண்டீன் பக்கம் போயிடலாம். பொழுதைப் போக்கறதுக்குன்னு இடம் இருக்குது."

முகப்பு சலவைக்கல் சற்றுத் தடுக்கி நிலைகுலையச் செய்தது அவரை. அவளின் கைக்குள் அடங்கிப் போனவர் போல் அவன் அவரைப் பிடித்துக் கொண்டான்.

"இன்னிக்கு ஒரு நடையாச்சு. அரை நாள் கழிஞ்சு மாதிரி இருக்குது. அரை நாளைக் கழிக்கறதுக்குன்னு வர்றவங்க என்னென்ன செய்வாங்க. நமக்கு ஆஸ்பத்திரியைச் சுத்தறதுன்னு வேடிக்கையாப் பொழுது போகுது... சரி கௌம்பிடலாம்..."

இருவரின் கைகளிலும் வழக்கமாய் பிளாஸ்டிக் பைகளோ, மஞ்சள் பைகளோ இருக்கும். எதற்கோ ஆயத்தப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிற மாதிரிப் படம்.

ஏறக்குறைய நெருக்கத்திலும், பரஸ்பர மரியாதையிலும், தம்பதியாகத் தான் தென்படுவர்.

அவருக்கு வீடு அண்ணா வீதியில். அம்மையாருக்குப் பெரியார் வீதியில். அண்ணாவைக் கடப்பது சுலபம். பெரியாருக்கு குறுக்கே போய் வலதுபுறம் திரும்பினால் வந்துவிடும். இருவரும் தத்தம் வளர்ப்புகளைக் கரை யேற்றிவிட்டார்கள். வாழ்க்கைத் துணைகளை இழந்து போன ஒற்றுமை உண்டு. தனிமையில் காலம் கழிக்கிற ஜாதிகள். அவர் கோன் வைண்டிங் நூல் வேஸ்ட்டை, எடுத்துச் சுத்தம் செய்து கொண்டிருப்பார். வீட்டு முற்றத்தில் உட்கார்ந்து பெட்ரோல் காற்றைச் சுவாசித்துக் கொண்டு, பொழுது போக இதைச் செய்வார். புடுபுடு மோட்டார் சப்தங்கள் காதில் நிறைந்திருக்கும். அம்மையாரின் தினப்படி வேலையும் இதுதான். கோன் வைண்டிங் வேஸ்ட் என்பதை விடுத்து, செகண்ட் பீஸ் வேஸ்ட்டில் கைகளை அளைந்து கொண்டிருப்பார். அண்ணாவுக்கும், பெரியாருக்கும் மத்தியில் ரேஷன் கடையொன்று இருந்தது. ஆண்கள், பெண்களுக்குத் தனித்தனி வரிசைகள் இல்லாத சமத்துவ ரேஷன் கடை. ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் வாங்கும் பொருளில் ஒரு கிலோவுக்கு எண்பது கிராம் குறைந்துதான் கிடைக்கும் என்பதும் அங்கு சமத்துவம்தான். சமத்துவ வரிசையில் அருகருகே நின்று கொண்டிருந்ததில் ஓர் ஆண்டிற்கு முன் அறிமுகம். பரஸ்பர வார்த்தைகளுக்குப் பின்பு அண்ணாவையும், பெரியாரையும் கடக்கிற போது எதேச்சையாய்ப் பார்ப்பது என்பது எதேச்சையாய் இருந்து, பின் திட்டமிட்டதாய் ஆகிவிட்டது.



''பொண்ணு வீட்டுல ரொம்ப யோசிக்கிறாங்க!''
''எதுக்கு?''
''பையனுக்கு அரசாங்க உத்தியோகமா இருக்கேன்னுதான்!''
– சீர்காழி வி. ரேவதி

எங்காவது சந்தித்துக் கொண்டு தேனீரும் ஒன்றரை இட்லியும் சாப்பிடுவர். பரஸ்பர குடும்ப நினைவுகளைக் கொஞ்சம் அள்ளிக் கொள்வர். நூல் பிரிக்கும் பொழுது போக்கு வேலையில் உள்ள கஷ்டங்கள் பரிமாறிக் கொள்ளப்படும். உறவினர் வீட்டு விசேஷங்களுக்குச் சென்று விடுகிறபோது பரஸ்பரம் ஒரு விதப் பதற்றம் இருவர் மனத்திலும் வரும். பதற்றம் தணிந்து சந்தித்து ஒன்றரை இட்லியும், தேனீரும் உட்கொள்கிறபோது, பரமானந்தம் அடைந்து போவார்கள். இப்படியே கடக்கிற வரைக்கும் நகர்த்திக் கொண்டு போகலாம் என்பதுதான் இருவருக்குமான ஆறுதல். பிசிறு தட்டுப்படுகிறபோது புன்னகையுடன் பிரிந்து விடலாம் என்பதும் நிச்சயமாகியிருந்தது.

இன்றைக்கு இருவரின் கைகளிலும் சற்றே கைகளுக்குள் அடங்க மறுத்த பொட்டலங்கள் இருந்தன. எதேச்சையாய் இருவர் கைகளிலும். கிழிந்ததைத் தைக்க தையல்காரரிடம் சட்டையையோ, சேலை

யையோ வைத்துக் கொண்டிருப்பதால், ஒருவர் மேல் ஒருவர் நினைப்பு. ஆனால் இருவரின் கைகளிலும் புதுத் துணிகள் இருந்தன. அவருக்கு வேஸ்ட் குடோனில் நைட்டி மாதிரி ஒற்றைத் துணியில் தைக் கப்பட்டது கிடைத்திருந்தது. பெண்கள் அணிந்து கொள்கிற விதமாய். அம்மை யாருக்கு வேஸ்ட் செகண்ட் பீஸ் குவியலில் ஏகதேசம் காலர் ஷர்ட் என்கிற மாதிரி ஒரு வஸ்து கிடைத்தது. இப்படிக் கிடைப் பது சாதாரணம். அவற்றை எடுத்துக் கொள்ள அனுமதி உண்டு. இருவரும் அவற் றைப் பொட்டலமாக்கிக் கொண்டு வந்தி ருந்தனர்.

அம்பேத்கார் வீதி முக்கைக் கடக்கும் போது முதியவர் ஒரு விதப் பதற்றத்தில் இருந்தார். அவருக்கு நெருக்கமானவர்களோ, உறவினர்களோ தென்படுகிறபோது இரு வரும் நன்றாய்த் தென்படுவதைத் தவிர்க்க, பதற்றமடைந்து விடுவார். சட்டென கையி லிருந்த பொட்டலத்தை அவர் நீட்டினார். அவளின் கையில் திணிக்கப்பட்டது போலி ருந்தது. விறுவிறுவென நடக்க ஆரம்பித்தார். அவளின் கைகளில் இப்போது இரண்டு பொட்டலங்கள் இருந்தன.

நாலைந்து நாளாய் அவருக்கான பொட் டலத்தை வைத்துக் கொண்டு இருப்பது முதியவளுக்குப் பாரமாக இருந்தது. சிறுநீர் கழிக்க இயலாத பாரமாகிவிட்டது.

ஒரு நடை அண்ணா வீதிக்குப் போய் விட்டு வந்து விடலாம் என்று கிளம்பின வேகத்திலேயே திரும்பியிருந்தாள். அவரின் காம்பவுண்ட் முன் ஷாமியானா போட்டி ருந்தார்கள். உட்கார்ந்து ஆசுவாசம் கொள்ள நிறைய நாற்காலிகள் இருந்தன. அவருக்கு ஏதாவது ஆகியிருக்குமோ, ஐந்து நாள் முன்னால் பிரிகிறபோது பதற்றமாகத்தான் இருந்தார். பதற்றத்தின் தொடர்ச்சியை மனத்தில் கொண்டு முகத்தைத் துடைத் தாள். ஷாமியானாவும், கும்பலும் திடுக் கிடச் செய்தது. விறுவிறுவென்று திரும்பி விட்டாள்.

அவர் கொடுத்திருந்த பொட்டலத்தைப் பிரித்தாள். சுடிதார் போன்றதாய் இருந்தது. உடுத்தியிருந்த சேலை மேல் சுடிதார் போன்றதைப் போட்டுக் கொண்டாள். அடிப்பாதத்தைக் கூட மறைத்து கால்களில் லாதவளாக்கியிருந்தது. கால்கள் இல்லா தவள் என்றால் ஆவியா? முதியவர் இறந்து போயிருந்தால் ஆவியாகி இருப்பாரா? ஆவி



''பஞ்சாப்பின் தலைநகர் பெயரை மாற்ற போராட்டம் நடத்தணும், தலைவரே...''

''மண்டு... அது சண்டியர் அல்ல, சண்டிகர்...''

— எஸ். மோகன்

என்றால் கால்கள் இல்லாமல்தான் இருக் கும். கால்கள் இல்லாத ஆவிகளாக இரு வரும் மாறியிருப்பதாய் நினைத்தாள். வெள்ளை உடைகளுடன் ஆவிகள் உலவுமா? வெள்ளை உடையல்லாமல் வர்ண ஆடைகளுடன் ஆவிகள் நடமாட லாம்தானே! முதியவருக்காக அவள் வைத் திருந்த பொட்டலத்தைப் பிரித்தாள்.

இந்தக் காலர் சட்டை அவருக்குப் பெரி தாகத் தொளதொளவென்று கூட இருக்க லாம். ஆவிகள் உடைகள் தொள தொளன்னு தானே இருக்கும்? ஆவிகளின் எலும்புக் கூடுகளின் மேல் போர்த்தப் பட்டதாய் அவற்றின் உடை இருக்குமா? காலர் சட்டையையும் சுடிதார் போன்றி ருந்ததின் மேல் போட்டுக் கொண்டாள்.

அசதியில் மெல்லச் சரிந்து விழுந்தாள். சேலையும், அதற்கு மேல் சுடிதார் போன் றதும், அதற்குமேல் காலர் சட்டையும்... வினோதமாக உடம்பை உப்ப வைத்திருந் தது. வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. பகல் வெளிச்சத்தில் இப்படிக் கிடப்பதை யாரா வது பார்த்தால் விசித்திரமாய் நினைப்பர். எழ முயன்றவளை ஏதோ ஒரு ஆவி பிடித் திழுத்துப் படுக்க வைத்திருப்பதாய்த் தோன்றியது.

வேஸ்ட் துணி மூட்டையை எடுக்க வந்த குடோன் பையன் முதியவள் சரிந்து கிடப்பதைப் பார்த்து முகம் வியர்க்க கூர்ந்து கவனித்தான். ○



✔ டாக்டர்
எஸ். அஷோக்

# இது பை ராஜா பை!

வணக்கத்துக்குரிய வயிறே... 4

**சி**ங்கப்பூரிலிருக்கும் நண்பர் ஷங்கர் வீட்டுக்குப் போயிருந்தேன். சமீபத்தில்தான் அவருடைய அப்பா 'கேஸ்ட்ரிக் கேன்ஸரால்' இறந்து போயிருந்தார்.

"அப்பா ஆரோக்கிய விஷயத்தில் ரொம்ப கவனமா இருப்பார் டாக்டர். எண்ணெய், மசாலா கூட சேர்த்துக்க மாட்டார். எப்பவும் சுட்ட அப்பளம், சுட்ட சப்பாத்தி, சுட்ட மீனு தான் சாப்பிடுவார். அவருக்குப் போய்..." என்று கண்கலங்கினார் ஷங்கர்.

"ஷங்கர், உங்க அப்பாவுக்குக் கேன்ஸர் வந்ததுக்கு அவருடைய 'சுட்ட' உணவுப் பழக்கமே காரணமா இருக்கலாம் தெரியுமா?" என்றபோது, ஷங்கருக்கு அதிர்ச்சி!

"யெஸ்! தந்தூரி ஐட்டங்கள், அப்பளம் போன்றவற்றைத் தணலில் சுடும்போது கருகும் பகுதிகளில், 'நைட்ரோஸோ அமீன்' என்ற காம்பவுண்ட் உருவாகிறது. தொடர்ந்து சாப்பிட்டால், அது இரைப்பையில் படிந்து, புற்று நோயாகி விடுகிறது" என்றேன்.

உண்மைதான்! இனி 'சுட்ட' உணவைச் சாப்பிடும்

இந்தாங்க ஐஸ் க்ரீம்

தாங்க்ஸ்!



போது, கருகிய பகுதியை முழுமையாகத் தட்டிவிட்டுச் சாப்பிடுங்கள்.

இன்னொரு சிறப்புத் தகவல் : இந்த கேஸ்ட்ரிக் கேன்ஸர் மிக அதிகமாக இருப்பது ஜப்பானில்தான். இதற்குக் காரணம், அங்கே மிக அதிகமாகச் சாப்பிடப்படும் சோயா சாஸ், பிக்கிள்டு ஃபிஷ், சுட்ட கோழி போன்றவைதான்.

இனி இரைப்பை விஸிட்!

இரை+பை=இரைப்பை! அதாவது உணவுப் பை. ஆஹா! பெயர்ப் பொருத்தம் பிரமாதம்!

சாதாரணமாக, இரைப்பை காலியாக இருக்கும்போது, பெண்களின் கைக்குட்டை அளவுதான் இருக்கும். ஆனால் ஃபோர்டீன் இட்லியில் ஆரம்பித்து, சோளா பட்டூரா, மசாலா பால், என ஐட்டம் ஐட்டமாக உள்ளே தள்ளத் தள்ள, "வை ராஜா வை... இது பை ராஜா பை" என்று இரைப்பையும் விரிந்து கொண்டே போகிறது. வேறு வழி?



"என் கிட்ட கதை சொல்லிட்டு அவசரமா எங்கே போறீங்க?"

"உங்க படத்தைத் திருட்டு விசிடி எடுக்கறதா இல்லையான்னு கதை கேட்டுத்தான் முடிவெடுக்கிறாங்க. அதுக்காகத்தான்!"

- அம்பை தேவா

காண்ட்ராக்ட்டுக்கு விடப்பட்ட பட்ஜெட் கல்யாணத் தாம்பூலப்பை போல இல்லாமல், இம்போர்டட் இலாஸ்டிக் பைபோல நுணுக்கமாக இரைப்பையைப் படைத்த இறைவனுக்கு நன்றி சொல்லுங்கள்.

மூக்குப் பிடிக்கச் சாப்பிட்டிருந்தாலும், யாராவது வந்து, "கொஞ்சம் ஐஸ்க்ரீம்" என்று உபசரித்ததும், "தாங்க்ஸ்" என்று (இரண்டாவது கப் என யாருக்குத் தெரியப் போகிறது— உம்... ஜமாய்!) வாங்கிக் கொள்கிறோமே. அதற்குக் காரணம் இரைப்பையின் வளைந்து விரிந்து கொடுக்கும் ரப்பர் தன்மைதான். உணவுக் குழாயும் இரைப்பையும் சேரும் பகுதி, 'கார்டியா' எனப்படுகிறது.

'கார்டியா', 'ஃபண்டஸ்', 'பாடி', 'ஆன்ட்ரம்', 'பைலோரிக் கெனால்' என ஐந்து முக்கியப் பகுதிகளைக் கொண்டு இரைப்பை இயங்கினாலும், ஆறாவதாக 'டியோடினம்' என்ற உறுப்பு சிறப்புப் பங்கு வகிக்கிறது.

மகாபாரதக் கர்ணன், பாண்டவர் கோஷ்டியா, கௌரவர் கோஷ்டியா என்று கேட்டால் சிறு குழப்பம் நேரிடுகிறதல்லவா? அதுமாதிரிதான், இந்த 'டியோடினம்' உறுப்பும். 'முன்சிறு குடல்' என்ற நாமகரணத்தோடு, சிறு குடலின் ஆரம்பத்திலிருக்கும் இந்த உறுப்பு, குடலைச் சேர்ந்ததுதான். ஆனால் இரைப்பையோடு நெருங்கிய சொந்தம் கொண்டது. அது இதிகாசக் குழப்பம்... இது இரைப்பைக் குழப்பம்!

இரைப்பையில் உண்டாகும் குறைபாடுகள்:

'பிறந்த குழந்தை காணவில்லை' என்று அவ்வப்போது செய்தித் தாள்களில் படிக்கிறோம். பாவம்.. சில குழந்தைகள் பிறக்கும் போதே, இரைப்பையில் சில பாகங்கள் 'மிஸ்ஸிங்' என்ற நிலையில் பிறக்கின்றன. இம்மாதிரி உள் உறுப்புகள் இல்லாத நிலைக்கு 'அட்ரீஸியா' என்று பெயர்.

சில குழந்தைகளோ, 'இரட்டை இரைப்பை'யுடன் பிறக்கின்றன. இதுவும் பிரச்னைதான். இரண்டாவதாக உருவான இரைப்பை, சீழ் பிடித்து, உடைந்து போய், மலத்தில் இரத்தப் போக்கை உண்டாக்கும்.

இன்னும் சில குழந்தைகள், பிறந்த உடனேயே 'கடகட' என வாந்தி எடுக்கும். 'பைலோரஸ்' என்ற பகுதியில் சவ்வுப்படலம் உண்டாகியிருப்பதால், இந்த விபரீதம். உடனடியாகக் கவனித்து, தீவிர சிகிச்சை தந்தால் குழந்தை பிழைக்க வாய்ப்புள்ளது.

இன்னும் சில துரதிர்ஷ்டக் குழந்தைகளுக்கு, இரைப்பை வளர்ச்சி அடையாமல் நின்று விடும். இதன் காரணமாக உணவுக் குழாய் விரிந்து, அபாய மேற்பட்டு, குழந்தைகளின் உயிருக்கே உலை வைத்து விடுகின்றன.

இக்கோளாறுக்கு, சிறு குடலையே ஓர் இரைப்பை போன்ற அமைப்பாக மாற்றியமைக்கும் நவீன சிகிச்சையெல்லாம் வந்து விட்டது. இருந்தாலும், மிக ரிஸ்க்கான அறுவைச் சிகிச்சைதான்.

(தொடரும்)

* யு. சீனிவாச ராகவன்





# அசத்துகிறது அஞ்சல் துறை!

ஆயுள் காப்பீட்டுக் கழகம் போலவே, அஞ்சல் துறையும் ஆயுள் காப்பீட்டுத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறது என்பது தெரியுமோ?

மத்திய, மாநில அரசு ஊழியர்கள், வங்கிப் பணியாளர்கள், பொதுத் துறை ஊழியர்கள், பல்கலைக் கழகப் பணியாளர்கள் என்று ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள் மட்டுமே அஞ்சல் துறையின் காப்பீட்டுத் தொழில் இயங்க முடியும். ஆனால் 1995ல் நரசிம்மராவ் பிரதமராக இருந்த போது, இந்தியாவிலுள்ள கிராமத்து மக்கள் எல்லாரையும் போஸ்டல் லைஃப் இன்ஷ்யூரன்ஸில் சேர்க்கலாம் என்று அறிவித்தார்.

சும்மா இருக்குமோ அஞ்சல் துறை? நாட்டின் பிற மாநிலங்களோடு போட்டியிடுகிற மாதிரி, பிஸினஸ் செய்து சாதனை படைத்து வருகிறது தமிழ்நாடு அஞ்சல் துறை.

"இரண்டு ஆண்டுகளுக்கு முன் நாங்கள் செய்தது 121 கோடி ரூபாய்தான். ஆனால் சென்ற ஆண்டு 718 கோடி ரூபாய்க்கு ஆயுள் காப்பீட்டு வர்த்தகம் செய்திருக்கிறோம்!" என்கிறார் தலைமை அஞ்சல் துறைத் தலைவர் டாக்டர் யு. சீனிவாச ராகவன்.

இதில் பிரீமியம் தொகை குறைச்சல். போனஸ் அதிகம்!

"உலக மயமாக்கலுக்குப் பிறகு புதிதாக இந்தத் தொழிலில் இறங்கிய பன்னிரண்டு தனியார் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனங்கள் அத்தனையும் சேர்த்து, ஈட்டியிருக்கும் மொத்த பிரீமிய வருமானம் 982 கோடி ரூபாய். ஆனால் அஞ்சல் துறையின் இன்ஷ்யூரன்ஸ் பிரீமிய வருமானமோ, அதைக் கிட்டத்தட்ட எட்டிப் பிடிக்கிற மாதிரி ரூ.842 கோடி" என்கிறார் சீனிவாச ராகவன்.

"எல்.ஐ.சி.யைப் பொறுத்தவரை ஏஜெண்டுகள் தனியாக இருக்கிறார்கள். அஞ்சல் துறைக்கு எங்கள் ஊழியர்கள் மட்டுமே. ஒரு கிராமத்தில் நூறு வீடுகள் இருந்தால், அந்த நூறு வீடுகளில் இருப்பவர்களையும் இன்ஷ்யூர் செய்துவிட வேண்டும் என்று தீர்மானித்தோம். ஐம்பத்து ஒன்பது கிராமங்களில் இதைச் சாதித்து விட்டோம். இந்த ஆண்டு எங்கள் இலக்கு ஆயிரம் கிராமங்கள்!" என்கிறார் டாக்டர் சீனிவாச ராகவன்.

இந்தச் சாதனைகளுக்கு ஒரு மகுடம் சூட்டியிருக்கிறார் ஒரு தமிழர். பெயர் : ஆர். வெங்கடேசன்.

பதினான்கு டெவலப்மெண்ட் ஆபீசர்களில் ஒருவர் ஆர். வெங்கடேசன். அகில இந்திய அளவில் இதுவரை ஆறு அவார்டுகள் வாங்கிவிட்டார். இவர் மட்டுமே சென்ற ஆண்டு இருபத்து மூன்று கோடி ரூபாய்க்கு, போஸ்டல் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸிகளை விற்று இன்னொரு சாதனை படைத்திருக்கிறார். அடுத்த வருடமும் அவார்டு இவருக்குத்தானாம்!

"நான் இந்தப் பணியில் சேர்ந்து எட்டு வருடங்கள் ஆகின்றன. சேர்ந்த அடுத்த வருடத்திலிருந்தே அவார்டு பெற ஆரம்பித்து விட்டேன். தொடர்ந்து இந்தச் சாதனையைச் செய்ய வேண்டும் என்பது என் எண்ணம்" என்கிற வெங்கடேசன் செப்டம்பர் மாதம் ஏழாவது அவார்டு வாங்கப் போகிறாராம்!

- சாருகேசி

படம் : வெங்கடேஷ்



ஆண்களுக்கு, படிப்பு, வேலை, ஆகியவற்றால் மிகுந்த மன அழுத்தம் உண்டாகிறது. இவை அவர்களது அமைதியைக் கெடுக்கின்றன. எனவே ஆண்களுக்கும் கவுன்ஸிலிங் அவசியமாகிறது.



• வசந்தா!

# "அழும் ஆண்கள் அதிகமாகிவருகிறார்கள்..!

"அழும் ஆண்கள் அதிகமாகிறார்கள்" என்கிறார் திருமதி வசந்தா!

'வழிகாட்டி' (ஆங்கிலத்தில் GUIDE - அதாவது Gandhian Unit for Integrated Development Education) என்ற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தை கடந்த இருபது ஆண்டுகளாக செங்கல்பட்டு பகுதியில் நடத்தி வருகிறார் இவர்.

பெண்களின் விழிப்புணர்வு மற்றும் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் இவருக்கு விருதுக்கு மேல் விருது கிடைத்து வருகிறது. சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த உலகப் பெண்கள் மையம், உலக அளவில் பெண்கள் நலனுக்காகப் பாடுபடும் சிறப்பான முப்பத்தி நான்கு பெண்களில் இவரையும் ஒருவராகத் தேர்ந்தெடுத்து கௌரவித்துள்ளது. அமெரிக்காவைச் சேர்ந்த "பெண்களுக்கான உலக நிதி மையம்", பெண்கள் விழிப்புணர்வுக்குப் பாடுபடுவதால் சிறப்பான சேவை செய்வதாகப் பாராட்டி மகிழ்ந்திருக்கிறது. சென்ற வருடம் பெண்கள் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டதற்காக, லேடி ராணி மெய்யம்மை விருது இவருக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

வசந்தாவின் சொந்த ஊர் காவிரிக் கரையோரம். அப்பா சிறு வயதிலேயே இறந்துவிட, அம்மாவின் வளர்ப்பு. காந்தி கிராம பல்கலைக் கழகத்தில் பட்ட மேற்படிப்பு. அங்கேதான் சமூக சேவை செய்வதற்கான ஆசை உருவானது. பிறகு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சமூகவியல் பட்ட மேற்படிப்பு. "நான்காயிரம் ரூபாய் சம்பளத்தில் ஒரு நிறுவனத்தில் பணி புரிந்து கொண்டிருந்தேன். வாழ்க்கை இப்படியே ஓடி விடுமோ? சமுதாயத்துக்கு ஏதும் செய்ய முடியாதோ?" என்று பயந்து கொண்டிருந்தேன். அப்போது தான் என் மன ஓட்டத்துடன்

ஒத்திருந்த கில்பர்ட்டைச் சந்திக்க நேர்ந்தது. இருவரும் திருமணம் செய்து கொண்டோம். காஞ்சிபுரத்தை அடுத்த மாகரல் என்ற கிராமத்தில் ஒரு சிறிய அறையில் தங்கிக் கொண்டு, எங்கள் சேவையைத் துவக்கினோம். வழிகாட்டி நிறுவனம் பிறந்தது" என்று மலரும் நினைவுகளாகச் சொல்கிறார்.

பெண்களுக்கு உரிய அதிகாரத்தைக் கொண்டு சேர்ப்பது. வீட்டிலும் நாட்டிலும் பெண்களுக்கெதிரான கொடுமைகளை எதிர்த்துப் போராட பெண்களைத் தயார் செய்வது - இதுதான் வழிகாட்டி நிறுவனத்தின் லட்சியம்.

"மாகரல் கிராமத்து தாழ்த்தப்பட்ட குழந்தைகளுக்கு வகுப்புகள் எடுப்பது; நின்று போன பிள்ளைகளை மீண்டும் பள்ளியில் சேர்ப்பது; பெண்களுக்கு அரசாங்கத் திட்டங்களை எடுத்துச் சொல்வது; பொது சுகாதாரம், சுற்றுச் சூழல் பாதுகாப்பின் அவசியத்தை எடுத்துரைப்பது என்று சேவையைத் துவங்கினார்கள் வசந்தாவும், கில்பர்ட்டும். ஆனால் பலவிதமான அவதூறுகள் அவர்களுக்கெதிராக அரசுக்கு அனுப்பப்பட்டன. "மதத்தைப் பரப்ப வந்திருக்கிறார்கள். நக்ஸலைட்டுகள் என்றெல்லாம் பொய்ப் பிரசாரம். அதையெல்லாம் தாண்டி வர எங்களுக்கு தேவையான மன உறுதியையும் தன்னம்பிக்கையையும் கொடுத்தவர்கள் அந்தப் பகுதி மக்கள்தான். எங்கள் உண்மையான சேவை உணர்வு அவர்களைத் தொட்டு விட்டதால், நாங்கள் அவர்கள் மனங்களில் ஊடுருவி விட்டோம்" என்கிறார் வசந்தா.



"வாலாஜாபாத் அருகில் சாந்தி என்ற பெண்மணியின் மீது பாலியல் பலாத்காரத்தை ஏவி, அவளைத் தாய்மை அடைய வைத்துவிட்டார்கள். அப்போது பெண்களைத் திரட்டிப் போராட மிகவும் சிரமப்பட்டோம். அரசு அதிகாரிகள், போலீஸ் ஆகியோர் இந்தச் சம்பவம் ஏதோ சர்வ சாதாரணமாக கிராமப் புறங்களில் நடப்பது போல், நடவடிக்கை எடுக்காமல் அலட்சியப்படுத்தினார்கள். அது அந்தக் காலம். ஆனால் இப்போது நிஜமாகவே மாறிப் போய்விட்டது. பெண்களுக்கான காவல் நிலையம் பல வகைகளில் பயனுள்ளதாக இருக்கிறது. மேலும் இப்போது பெண்களே போராடும் வலிமையைப் பெற்று விட்டார்கள். பரந்து பட்ட படிப்பறிவும் வந்து சேர்ந்தால்,



அவர்கள் எதையும் சமாளிக்கும் ஆற்றலைப் பெற்று விடுவார்கள்".

கடந்த 2001 தேர்தலின்போது வழிகாட்டி நிறுவனம் இரண்டு தலித் பெண்களைத் தேர்தலில் நிறுத்தியது. கட்சி அரசியல், பணபலம், இவற்றோடு மோத முடியாமல் அவர்கள் தோற்றாலும், அது ஒரு நல்ல அனுபவமாக அமைந்துவிட்டதாம்.

"ஒரு லட்சம் தருகிறோம். இரண்டு லட்சம் தருகிறோம் என்றெல்லாம், எங்களை ஆசை காட்டி வாபஸ் பெற வைக்க முயற்சி செய்தார்கள். ஆனால் நாங்கள் கொஞ்சமும் அசரவில்லை. தொகுதி முழுக்கச் சென்று, வாக்கைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் குறித்தும், நல்லவர்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி என்றும் பிரசாரம் செய்து விழிப்புணர்வு உண்டாக்கினோம்.

வசந்தாவின் இத்தனை ஆண்டுக் கால சேவை வாழ்வில் மறக்க முடியாதது மாகரல் கிராமத்தில் கள்ளச் சாராயத்தை ஒழித்ததுதான். "பெண்கள் படையை உருவாக்கி, அந்தக் கிராமத்தில் கள்ளச் சாராயத்தை ஒழித்தது எங்கள் நிறுவனத்தின் பெரிய சாதனை என்று சொல்லலாம்" என்கிறார் வசந்தா. (இது பற்றிய ஒரு கவர் ஸ்டோரி கல்கியில் 95ம் வருடம் நவம்பர் மாதம் வெளியானது). இப்போது, காஞ்சிபுரம், திருவள்ளூர், கடலூர், திருவண்ணாமலை, கடலூர் ஆகிய மாவட்டங்களில் பெண்கள் பிரச்னை எதுவாக இருந்தாலும், அதைக் கையில் எடுத்துக் கொள்கிறது 'வழிகாட்டி' நிறுவனம். இதுதவிர, மலைவாழ் மக்கள் மத்தியிலும் சேவை செய்கிறது. விவசாயிகளிடத்தில் ரசாயனம் தவிர்த்த உரங்களைப் பயன்படுத்த பிரசாரம் செய்கிறது. செங்கல்பட்டு நகரில் இருக்கும் 'வழிகாட்டி' நிறுவனத்துக்கு நெஞ்சு நிறைய பிரச்னைகளுடன், பெண்கள் மட்டுமல்ல, ஆண்களும் வருகிறார்கள்!

"சமுதாயம் நன்றாக இருக்க வேண்டுமானால் ஒவ்வொரு குடும்பமும் நன்றாக இருக்க வேண்டும். கணவன் குடிகாரன் என்றால் அவனைத் திருத்த வேண்டிய அவசியம் இருக்கிறது. இப்போது ஆண்களுக்கு, படிப்பு, வேலை, ஆகியவற்றால் மிகுந்த மன அழுத்தம் உண்டாகிறது. இவை அவர்களது அமைதியைக் கெடுக்கின்றன. எனவே ஆண்களுக்கும் கவுன்ஸெலிங் அவசியமாகிறது. சில சூழல்களில் பெண்களால் பாதிக்கப்படும் ஆண்களும் உண்டு. எனவே அவர்கள் பிரச்னையையும் காது கொடுத்துக் கேட்க வேண்டும். அழும் ஆண்களின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டு வருகிறது" என்கிறார் வசந்தா.

- ப்ரியன்



"நம்ம டைப்பிஸ்ட் மேடம் மெமோவை வாங்கிக்க மாட்டேங்கறாங்க சார்!"

"அது கூட இலவசமா எதையாவது கொடுத்துப் பாருங்க!"

- ஞா. ஞானமுத்து

# அந்தப் பத்தில் ஒன்று!

இரண்டு வருடங்களாகத் தொடர்ந்து சர்வதேச விருதுகள் வாங்கி வருகிறார் சென்னை நகர இணை ஆணையர் ஜேகே. திரிபாதி, ஐபிஎஸ்.

சென்ற ஆண்டு இறுதியில், நிர்வாகத்தில் புதுமை' என்ற பிரிவில், ஸ்காட்லாந்தில் உள்ள கிளாஸ்கோ நகரில் இவருக்குத் தங்கப் பதக்கம் வழங்கிக் கௌரவித்தார்கள். காமன்வெல்த் நாடுகளில் இப்பரிசைப் பெற்ற முதல் போலீஸ் அதிகாரி இவர் ஒருவர்தான்!

2001ஆம் ஆண்டு, கனடாவிலுள்ள டொரன்டோவில் திரிபாதி பெற்ற விருது 'இன்டர்நேஷனல் கம்யூனிடி போலீஸிங்' அவார்டு. வாஷிங்டன் நகரிலுள்ள சர்வதேச காவல்துறைத் தலைவர்கள் சங்கம் இதை வழங்கி யிருக்கிறது.

கம்யூனிடி போலீஸிங்?

"கிட்டத்தட்ட நூற்றுப்பத்து ஆண்டுகளாக இயங்கி வரும் மிக மூத்த காவல்துறைச் சங்கம்தான் இன்டர்நேஷனல் அசோசியேஷன் அஃப் சீஃப்ஸ் அஃப் போலீஸ். இந்த விருது வழங்கும் விழா ஒவ்வோர் ஆண்டும் ஒவ்வொரு நகரில் நடைபெறும்.

"இதில் நம் திட்டங்களை சர்வதேச ஜூரிகளிடம் சமர்ப்பிக்க வேண்டும். பிரிட்டிஷ் அரசின் தலைமை நிர்வாகியிடம் இப்படி சமர்ப்பிக்கப்படும் உறுப்பு நாடுகளின் திட்டங்களில், சிறந்த பத்து திட்டங்களை முதலில் தேர்ந்தெடுக்கும். பிறகு அந்தப் பத்தில் மிகச் சிறந்த ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டு, அதைக் கொடுத்த போலீஸ் அதிகாரிக்கு விருது வழங்குகிறார்கள். எனக்குக் கிடைத்தது அந்த விருதுதான்!"

இருபதே நிமிடங்களுக்குள், திட்டப்படி என்ன சாதனை புரிய முடிந்தது என்று விளக்கியாக வேண்டும். பிறகு, அடுத்த ஒரு மணி நேரம் அவர்கள் கேட்கிற கேள்விகளுக்கெல்லாம் திருப்திகரமாகப் பதில் சொல்லியாக வேண்டும்.

திருச்சியில் போலீஸ் கமிஷனராக இருந்தபோது, இவர் காவல் துறைக்கும் பொது மக்களுக்கும் இடையே ஒரு பாலமாக நின்று புரிந்த சேவையே இவருக்கு விருது பெற்றுத் தந்திருக்கிறது. ரோந்துக் குழுக்களை அறிமுகப்படுத்தியும், சேரிகளைத் தத்து எடுத்தும், பெண்கள் உதவிக் குழு உருவாக்கியும், புகார்ப் பெட்டி முறையை அறிமுகப்படுத்தியும், திரிபாதி திருச்சி மக்களின் மதிப்பைச் சம்பாதித்துக் கொண்டார். (மாநிலப் பள்ளி சாராக் கல்விக் கருவூலம், இவர் பணிகளை ஒரு தனி நூலாகவே வெளியிட்டிருக்கிறது!)

தில்லி ஜவாகர்லால் நேரு பல்கலைக் கழகத்தில் டாக்டரேட் பட்டம் பெற்று, 1985ல் காவல்துறையில் நுழைந்த திரிபாதி, தமிழ்நாட்டின் பல நகரங்களில் பணியாற்றியிருக்கிறார். நன்றாகத் தமிழ் பேசுகிறார்.

சந்திப்பு: **எஸ்.வி.என்.**

படம்: **வெங்கடேஷ்**



**அன்பின் ஊற்று-7**

# நேர்மையும், அருளாசியும்

**கேள்வி : பலர் ஆசி பெற வேண்டுகின்றனர். ஆனால் ஒரு சிலர்தான் பெற முடிகிறது. அது ஏன்?**

**ஸ்ரீ ஸ்ரீ** : ஆசி வழங்குபவர் எப்போதும் வழங்கிக் கொண்டே இருக்கிறார். ஆனால் அதைப் பெறுபவர்கள்தான் இல்லை. ஆசி வழங்குபவர் மிகவும் தாராளமாக வழங்குகின்றார். ஆனால், அதைப் பெறுபவர் நேர்மையுடைவராக - உண்மையான விழைவு கொண்டவராக இருக்க வேண்டும். நேர்மைதான் ஆசியைப் பெறுவதற்கான தகுதி. எல்லோரும், எந்தச் சமயத்திலும், நேர்மையுடன் இருக்கத் தடையேதும் இல்லையே?

**கேள்வி : ஏன் மக்கள் சில சமயங்களில் மட்டும் நேர்மையுடனிருக்கிறார்கள்?**

**ஸ்ரீ ஸ்ரீ** : மிகச் சாதாரணமான உலக விஷயங்களில் கிடைக்கும் இன்பத்தைத் தவறவிட்டு விடுவோமோ, என்ற வெற்றுக் கற்பனையினால்தான். சிறுசிறு இன்பங்களைத் தேடி அலைவது அவர்களை நேர்மையிலிருந்து பிறழச் செய்கிறது. நேர்மையாக உள்ளபோது, மகிழ்ச்சிக்காக ஏங்கித் தவிக்காமலே, மகிழ்ச்சியில் திளைத்திருக்க முடிகிறது.

ஏழை மக்கள் உணவுக்காகப் போராடுகின்றனர். தங்களுடைய உணவை மற்றவர்களோடு பகிர்ந்து

**குருஜி**

**நா**ன் முதன் முதலில் வாழும் கலை மூச்சுப் பயிற்சியைக் (ஆர்ட் ஆஃப் லிவிங்) கற்றுக் கொண்டபோது, ஒரு புத்துணர்ச்சி பெற்ற மாதிரி இருந்தது. அதிலும் குறிப்பாக 'சுதர்சனக்ரியா' செய்த போது, முற்றிலும் வித்தியாசமாக உணர்ந்தேன். சப்-இன்ஸ்பெக்டர்கள் நிலையில் இருந்த அதிகாரிகள் முன்னூறு பேரை முதலில் அந்தப் பயிற்சிக்கு அனுப்பி

வைத்தேன். பிறகு முன்னூற்றைம்பது பேரை அதே பயிற்சியைப் பெறச் செய்தேன். எல்லோரும் மிகவும் வரவேற்றார்கள்.

சென்னை நகரப் போக்குவரத்துக் காவல் துறையின் ஜாயிண்ட் கமிஷனராகப் பணியாற்றியபோது, டிராஃபிக் கான்ஸ்டபிள்கள் இரண்டாயிரம் பேருக்கும் இந்தப் பயிற்சி பயனளிக்கும் என்று கருதினேன். ஒரு 'பாட்ச்'சுக்கு ஐந்நூறு பேர், வீதம், நான்கு 'பாட்ச்'களாக அவர்களையெல்லாம் ஏழு நாட்கள் 'ஆர்ட் ஆஃப் லிவிங்' எனப்படும் வாழும் கலை மூச்சுப் பயிற்சியை மேற்கொள்ளச் செய்தேன்.

இன்றும் தினசரி 'சுதர்சன க்ரியா' பயிற்சியைச் செய்து வருகிறேன்.

**ஜாஃபர் சேட், டி.ஐ.ஜி.**
**ஆர்ம்ட் ரிசர்வ் ஸ்பெஷல் போலீஸ்,**
**சென்னை.**

கொள்ளுபவர்கள் செல்வந்தர்கள். தன் ஆற்றலை, திறமையை, பிறருடன் பகிர்ந்து கொள்ளுபவர்கள் மிகச் செல்வந்தர்கள். தனக்குக் கிடைக்கும் புகழைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளுபவர்கள் மிக மிகச் செல்வந்தர்கள். தன்னலம் கருதாது, தன்னையே பிறருடன் பகிர்ந்து கொள்ளுபவரே, செல்வந்தர்களிலும் செல்வந்தர்கள். ஒருவரது பகிர்ந்து கொள்ளும் திறமை அவருடைய மேன்மையையும், உயர்வையும் குறிக்கிறது; ஒருவர் எவ்வளவு செல்வம் குவித்து வைத்துக் கொண்டிருக்கிறார் என்பதில் இல்லை உயர்வு.

**ஸ்ரீ ஸ்ரீ ரவிசங்கர்**

சாதாரண மனிதர் ஒரு கிலோ மீட்டர் தூரத்தை நடந்து கடக்க பதினைந்து நிமிடங்கள் ஆகிறது என்றால், உடல் அமைப்புகளில் குறை உள்ளவர்கள் அத்தூரத்தைக் கடக்க பல மடங்கு நேரத்தை எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. அதிலும் அவர் பிறர் உதவியின்றி, தமது முயற்சியிலேயே இலக்கை அடைய முயலும் போது, அதன் வலியும், சிரமமும் மேலும் பல மடங்கு!



• அம்மாவுடன் இளங்கோ

# அந்த

அப்படிப்பட்ட ஓர் இளைஞர் இளங்கோ. கண் பார்வையற்றவரான இவர், ஆங்கில மொழியியல் துறையில் எம்.ஃபில் பட்டம் பெற்று இன்று ஆங்கிலப் பயிற்சி, இசை, டப்பிங் என்ற மூன்று துறைகளிலும் முன்னணி வகிக்கிறார்.

"எஸ்.எஸ்.எல்.சி.வரை அடையாரில் உள்ள பார்வையற்றோருக்கான பள்ளியில் டே ஸ்காலராகப் படித்தேன். ராயப்பேட்டையில் உள்ள வெங்கடேஸ்வரா மெட்ரிகுலேஷன் ஹை ஸ்கூலில் பிளஸ் 1, பிளஸ் 2 முடித்தேன். லயோலா கல்லூரியில் பி.ஏ. ஆங்கிலம், எம்.ஏ. ஆங்கில இலக்கியம் படித்தேன். எம்.ஏ. படிக்கும் போது கல்லூரியின் தலை சிறந்த மாணவர் என்ற விருது பெற்றேன். கண் பார்வையற்ற ஒரு மாணவர் இத் தகுதி பெற்றது அதுதான் முதல் முறை என்பது புதிய ரிகார்ட். இந்த ரிகார்டு இதுவரை முறியடிக்கப்படவில்லை" என்று பெருமிதம் கொண்டார்.

• இளங்கோ

சென்னை பல்கலைக் கழகத்தில் எம்.ஃபில்



ஆய்வு மேற்கொண்டார். ஆங்கில மொழிப் பயிற்சிப் பிரிவில், பார்வையற்றவர்களுக்கு மொழிப் பயிற்சி அளிப்பதில் உள்ள பிரச்னைகள் குறித்து ஆய்வு செய்திருக்கிறார்.

"பார்வையிழந்த குழந்தைகளின் உலகம் வித்தியாசமானது. எனது சிறு வயதில் ரேடியோதான் ஒரே துணை. தொடர்ந்து சிலோன் ரேடியோவில் தமிழ்ப் பாட்டு கேட்பேன். இதைத் தவிர, ஆங்கிலச் செய்திக் கணிப்புகள் என்னைக் கவர்ந்தது. பி.பி.சி., வாய்ஸ் ஆப் அமெரிக்கா போன்ற ரேடியோக்களின் ஆங்கில ஒலி என்னை ஏதோ செய்து கொண்டேயிருந்தது. அதே போன்று பேசவும், உச்சரிக்கவும் முயற்சி செய்வேன். எனது வாய் ஏதாவது தமிழ்ப் பாடலை முணுமுணுத்துக் கொண்டிருக்கும் அல்லது ஆங்கில வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டிருக்கும். இப்பழக்கத்தால் இசையும் ஆங்கிலமும் எனது இரு கண்களாக (!) ஆகிவிட்டன" என்கிறார்.

# இரு கண்கள்!

அடையாறு பார்வையற்றோர் பள்ளியில் நான்கு ஆண்டுகள் இசை படித்துள்ளார். பிரபல எம்.டி. ராமநாதனின் மருமகன் கோட்டூர் சுப்பிரமணியம் இவரது இசை ஆசிரியர். இதனால் நன்றாகப் பாடக் கூடிய மாணவரானார். இதே பள்ளியில் இயங்கிய பார்வையற்றோருக்கான இசைக் குழுவில் இவரைச் சேர்த்துக் கொண்டனர்.

தொடர்ந்து பல ஆண்டுகள் இதே இசைக் குழுவுக்காகப் பாடிய இளங்கோ, பின்னர் வெளி ஆர்க்கெஸ்டிராக்களில் பாடத் தொடங்கினார். லக்ஷ்மண் - ஸ்ருதி தொடங்கி, இன்றுள்ள முக்கிய ஆர்க்கெஸ்டிராக்கள் பலவற்றில் அவர் பாடி வருகிறார்.

தமது இசைத் திறமையை மேலும் மெருகு படுத்த, தற்போது திரைப்பட இசை அமைப்பாளர் ஸ்ரீராம் பரசுராமிடம் (அனுராதா ஸ்ரீராமின் கணவர்) இசைப் பயிற்சி பெற்று வருகிறார். ஸ்ரீராம் பரசுராம் தம் மீது ஸ்பெஷல் கவனம் செலுத்துவதாகக் கூறும் இளங்கோ, விரைவிலேயே தமிழ்ப் படத்தில் பின்னணிப் பாடகராக அறிமுகமாகவிருக்கிறார்.

லயோலாவில் பி.ஏ.படித்த போது, சக மாணவர்களுக்கு ஸ்போக்கன் இங்கிலீஷ் பயிற்சி அளித்தார். அப்போது இவரது பிரமாதமான உச்சரிப்பைக் கவனித்த பல ஆசிரியர்கள் கூட இளங்கோவிடம் வந்து சரியான உச்சரிப்புகளைத் தெரிந்து கொண்டு போவார்களாம்!

எம்.ஃபில் ஆராய்ச்சியின் பலனாக மொழிப் பயிற்சி நிபுணர்களின் ஆதரவு கிடைத்தது. பிரிட்டிஷ் கவுன்சிலில் ஆங்கில மொழிப் பயிற்சிகள் கொடுத்து வந்த ராபர்ட் பெலமின், 'ஐ.ஐ.டி'யின் டாக்டர் சௌத்ரி ஆகியோர் இளங்கோவின் திறமையைப் பயன்படுத்திக் கொள்ள முன் வந்துள்ளனர். இவர்களோடு இணைந்து எம்.ஆர்.எஃப், லோட்டஸ் பப்ளிகேஷன், எம்.ஆர்.எல். போன்ற நிறுவன ஊழியர்களுக்கு, ஆங்கில மொழிப் பயிற்சி அளிக்கிறார்.

அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளில் உயர் கல்வி பயில, அடிப்படைத் தகுதியான ஐ.ஏ.எல்.டி.எஸ், டோஃபிள் போன்ற ஆங்கில மொழித் தேர்வுகளில் சிறப்புப் பயிற்சி அளிக்கும் தகுதி பெற்றுள்ளார். இளங்கோ தனியாக வீட்டிலும் பயிற்சி அளித்து வருகிறார்.

இசை, ஆங்கிலம் தவிர, இப்போது மூன்றாவது துறையிலும் ஆர்வம் ஏற்பட்டுள்ளது. அது டப்பிங்! பல முன்னணி விளம்பர நிறுவனங்களில் விளம்பரப் படங்களுக்கு ஆங்கிலத்தில் குரல் கொடுத்து வருகிறார். 'ஆவின்' போன்ற தமிழ் விளம்பரங்களிலும் இவர் குரல் ஒலிக்கிறது. டப்பிங் துறையில் கால் பதித்த முதல் பார்வையற்ற நபரும் இவரே.

- முருகசரணம்

படங்கள் : டிஜிட்டல் சண்முகம்

# மெல்லினம்

குட்டிக்கு அந்தக் கனவு மிகவும் விநோதமாக இருந்தது. இதற்கு முன் இப்படி ஏதும் வந்ததில்லை. கனவில் அதிர்ச்சி அடையும் விதமாகவும், விழித்து எழுந்ததும் விழுந்து விழுந்து சிரிக்கிற மாதிரியும்.

பொதுவாக அவளுக்கு வருகிற கனவுகளில் பத்துக் கோடி குட்-டே பிஸ்கெட்டுகள் மலைமலையாக அவள் முன் குவிந்திருக்கும். சாப்பிட முடியாமல் அவஸ்தைப்படுவாள். அல்லது கடற்கரையில் அலை வந்து தொடும் தூரத்தில் அவள் நின்றிருப்பாள். ஆக்ரோஷமாக உயர்ந்து எழுந்து தூரத்திலிருந்து ஓடி வரும் அலை, அவள் காலருகே வரும்போது மிகப் பெரியதொரு பட்டுப் பாவாடையாக மாறிவிடும். மடிக்க மடிக்கத் தீரவே தீராது. அவளது சின்னக் கரங்கள் சோர்ந்துபோய், 'சே, போ' என்று தூக்கி எறிந்துவிடுவாள். வேறொரு கனவில் அவள் வீட்டுத் தோட்டத்தில் நட்டு வைத்திருக்கும் எலுமிச்சைக் கன்றில், அபூர்வமாக ஆகாய நீலத்தில் பழங்கள் பழுத்துக் குலுங்கும்.

எப்படி இது, நடக்க முடியாதவை மட்டுமே கனவுகளாக வருகின்றன என்று சொற்களில்லாமல் நினைப்பாள். அதற்குமேல் அவள் தன் கனவுகளுக்குப் பெரிய முக்கியத்துவம் அளித்ததில்லை.

நீளமாக, மிகமிக நீளமாக, பயமுறுத்தாதபடி, ரசித்து அனுபவிக்கும் விதத்தில், ஓரிரவு முழுவதும் திரைப்படம் போலக் கனவொன்று வந்தால், எத்தனை நன்றாக இருக்கும் என்று நினைப்பாள். விரும்பிப் பார்க்கிற கார்ட்டூன் பாத்திரங்களுடன் ஒரு முழு நீளக்கனவில் பஞ்சுப் பொதிகளுக்கு நடுவே விளையாட, அவள் மிகவும் விரும்பியிருந்தாள். ஆனால் வருகிற கனவுகளெல்லாம் சின்னச் சின்ன புகைப்படங்கள் போலத்தான் இருக்கின்றன.

நேற்றுக்கூட புகைப்படக் கனவுதான். சில நிமிடங்கள். சில விநாடிகளாகக் கூட இருக்கும். ஏழெட்டுக் கதவுகளை எங்கோ, எதற்கோ அவள் திறந்து கொண்டு போய்க்கொண்டேயிருந்தாள். கடைசிக் கதவைத் திறக்கும்போது டோரா மரகதம் டீச்சர் கையில் உண்டியலுடன் நிற்கப் போகிறாள், என்று கனவுக்குள் நினைவு போலொரு பிம்பம் அவள் மனதுக்குள் மிகத் தீவிரமாக எழுந்து நின்றது. டீச்சர் கையில் பிரம்பு அல்லது புத்தகம் இருப்பது நியாயம். தனக்கேன் அவர் கையில் இருக்கப்

அந்த மேசையின் மேல் தனக்கு முதுகு காட்டியபடியும், தியானத்தில் அமர்ந்திருக்கிற ஒரு முனிவர் போலவும் இருப்பது யார்?

போவது உண்டியலாகத் தோன்றுகிறது என்றும் யோசித்தாள். மேலும் இப்படி யோசிக்க முடிகிறதே, இது எப்படி ஒரு கனவாக இருக்கும்? ஒருவேளை வெறுமனே கற்பனைதான் செய்து கொண்டிருக்கிறோமோ?

ஆனால் என்ன ஆச்சர்யம்? அந்தக் கடைசிக் கதவைத் திறந்தபோது அவளால் நம்பவே முடியவில்லை.

வெட்டவெளியில் ஒரு மேசை மட்டும் போடப்பட்டிருக்கிறது. ஆளரவமற்ற தனியான வெட்டவெளி. பின்னணியில் எங்கோ மரங்கள் மிக வேகவேகமாக அசைந்துகொண்டிருக்க வேண்டும். வீசி அடிக்கும் காற்றுக்கு மண்ணும் தூசியும் மேலெழுந்து பறக்கிறது.




பா. ராகவன்

அட, அந்த மேசையின் மேல் தனக்கு முதுகு காட்டியபடியும், தியானத்தில் அமர்ந்திருக்கிற ஒரு முனிவர் போலவும் இருப்பது யார்? ஜக்குவா? ஜக்குவா அது?

"ஜக்கூ..." கூப்பிட்டபடி அவள் வேகமாக அவனருகே போய், பிடித்து இழுத்துத் திருப்பினாள்.

சந்தேகமே இல்லை. ஜக்குதான். ஆனால் என்ன இது? சம்பந்தமேயில்லாமல் ஜக்குவுக்குப் போய் வெள்ளை வெளேரென்று நரைத்த மீசை முளைத்திருக்கிறது?

அதிர்ச்சியில் அவளுக்குப் பேச்சே வரவில்லை. டிராயர் தான் போட்டிருக்கிறான். சட்டையைக் காணோம். டிராயர் நழுவாமலிருக்கப் பிடிமானமாக மேலெழுந்து தோளில் படர்ந்திருக்கும் பட்டையில், ஜக்கு - சிக்ஸ்த்-பி என்ற பேட்ஜ் குத்தியிருக்கிறது. அதெல்லாம் கூடச் சரி. எப்படி இப்படியொரு நரைத்த மீசை இவனுக்கு வந்து சேர்ந்தது? தலைமுடி நரைக்கவில்லை. மீசை மட்டும் தான். அடர்த்தியாக. பள்ளிக்கூட வாட்ச்மேன் மீனாட்சி சுந்தரத்துக்கு இருக்கிறது மாதிரி.

அந்தத் திடீர் மீசை குறித்து அவள் ஏதும் வாய் திறந்து கேட்பதற்கு முன்னதாகவே கனவு கலைந்துவிட்டது. சட்டென்று சிரிப்பும் வந்துவிட்டது.

மீசை முளைத்த ஜக்கு. அதுவும் அடர்த்தியான வெள்ளை மீசை.

எந்த மாதிரி வெள்ளை என்று இன்னும் கொஞ்சம் கவனித்திருக்கலாம். அதற்குள் கலைந்துவிட்டது.

**அ**ன்று மாலை மறக்காமல் அவள் தான் கண்ட கனவு குறித்து ஜக்குவிடம் சொன்னாள். அவனும் விழுந்து விழுந்து சிரிப்பான் என்றுதான் எதிர்பார்த்தாள். ஆனால், வழக்கத்துக்கு விரோதமான மௌனத்தில் அவன், அவளுக்கு முற்றிலும் மாறுபட்ட தோற்றத்தை அளித்தான்.

"உனக்கு வெள்ளை மீசை முளைச்சிருந்ததுடா!"

"உம்" என்றான் ஜக்கு.

"உனக்குச் சிரிப்பு வரலே?"

"வருது" என்று சிரிக்காமல் சொன்னான் அவன்.

"எம் பேச்சு காவான்னா?" அவளுக்குத் திடீரென்று அந்தச் சந்தேகம் வந்துவிட்டது. இந்த ஜக்குவிடம் இது ஒரு கெட்ட பழக்கம். திடீர் திடீரென்று கா விட்டுக் கொஞ்ச நேரம் அழ வைத்து வேடிக்கை பார்ப்பான். இன்ன காரணம் தான் என்று சொல்ல முடியாது. ஒரு நாள் அவன் புளியங்கொட்டையைத் தின்று கொண்டே வந்ததைக் கண்டதும் கூட அவன் கா விட்டிருக்கிறான்.

"பேட் ஹேபிட்" என்று ஜக்கு சொன்னான். உடனே அவள் துப்பிவிட்டதும் மீண்டும் பழமாகிவிட்டது நட்பு. "எங்கம்மா சொல்லியிருக்கா. கிடைக்கறதையெல்லாம் வாயில் போட்டு மென்னா, காதுலேருந்து ஈசல் பறக்கும்!"

'என்ன ஆயிற்று இன்று இவனுக்கு? பேசக் கூட யோசிக்கிறான்?' குட்டிக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. நிச்சயம் தான் ஏதோ தப்பு செய்திருக்க வேண்டும் என்று தோன்றியது. இல்லாதுபோனால் எப்போதும் வேடிக்கை வேடிக்கையாக எதையாவது சொல்லிக் கொண்டேயிருக்கும் ஜக்கு, ஏன் இப்படிப் பேசாமல் இருக்க வேண்டும்?

"தோ பார், எனக்கு அழுகை அழுகையா வருது. நீ பேசலேன்னா, நான் காட் ப்ராமிஸா அழுதே விடுவேன்!"

"பேசுவேன், பேசுவேன். நான் ஒண்ணும் கா இல்லே. போறுமா?"

"அப்ப ஏன் சைலண்டா வரே?"

அவன் தன் கூடவே புத்தக மூட்டையைச் சுமந்து நடந்துவரும் குட்டியைப் பக்கவாட்டில் திரும்பி ஒரு முறை பார்த்தான். இலேசாகப் புன்னகை செய்தான். அவளுக்கு அது பெரிய நிம்மதியாக இருந்தது. அம்மா! இவன் காய் விடவில்லை.

"எனக்கு சண்டே எப்போ வரும்னு இருக்கு. நாளைக்கே வந்துவிடுமா? இன்னும் ஃபோர் டேஸ் இருக்கே!" என்றாள் குட்டி.

ஜக்குவுக்குப் புரிந்தது. குட்டி மகாபலிபுரம் போகிற தினத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவளுக்குத்தான் எத்தனை



சந்தோஷம்! இப்படியொரு பயணம், இரு குடும்பத்தாரும் சேர்ந்து போகும்படி நேரும் என்று நினைத்துக் கூடப் பார்த்திருக்க வில்லை. இரண்டு அம்மாக்களும் சேர்ந்து பேசி ஐடியா பண்ணியிருக்கிறார்கள். எத்தனை ஒண்டர்ஃபுல் ஐடியா?

ஆனால் தனக்கு மட்டும் ஏன் இந்த விஷயம் உரிய குதூகலத்தைக் கொடுக்கத் தவறிவிட்டது என்று ஜக்கு யோசித்தான். உண்மையில் சில தினங்களாக அவனுக்கு எதுவுமே சுவாரசியமாகப் படுகிறதில்லை. வகுப்புகள் நரகமாக நீள்கின்றன. பாடங்களுக்குக் கை, கால் முளைத்து, கூர் பற்களுடன் ஒரு பெரிய அரக்கன் மாதிரி ஆகிவிடுகின்றன, ஆசிரியரின் குரல் வடிவில். விளையாட்டில் விருப்பமில்லாமலிருக்கிறது. உற்சாகமுடன் ஓடக் கூட முடிகிறதில்லை. எப்போதும் படுத்துத் தூங்கலாம் போலவே இருக்கிறது. அதைவிட, யாராவது முகம் தெரியாத மனிதரின் மடியில் படுத்து, அழ வேண்டும் போலவும் இருந்தது. இதோ, இப்படி நினைக்கும்போதே கூட அழுகை வந்துவிடுகிறது. ஆனால் அழ முடியாது. பக்கத்தில் குட்டி இருக்கிறாள். தன்னைவிடச் சிறியவள்... இதை இன்னொரு விதமாகவும் நினைக்கலாம். அவளை விடத் தான் பெரியவன். வயதிலும் வகுப்பிலும். அவள் எதிரே அழுவாவது?

சொற்களுக்கு அகப்படாத ஒரு சுமைப்பந்து மனத்தில் உருளத் தொடங்கியிருக்கிறது. சென்ற ஞாயிற்றுக் கிழமை தினம், கேலண்டரிலிருந்தே தொலைந்து போயிருக்கலாம். ஏன் இருந்து தொலைந்தது?

அவனுக்கு முதலில் கேலண்டர்மீது தான் கோபம் வந்தது. பிறகு அந்த மசால் தோசை [illegible] நடுப்பகலில் தன் வீட்டாரின்மேல் உறக்கத்தின் வடிவில் வந்த குட்டிச் சாத்தானின் மீது.

எல்லாரும் ஏன் அன்று தூங்கியிருக்க வேண்டும்? ஏதோ ஒரு ராட்சஸ பூதம் தான் அந்த மந்திரப் பொடி தூவிய தூக்கத்தை அவர்கள் அனைவரையும் ரகசியமாக சுவாசிக்க வைத்திருக்க வேண்டும். அந்தத் தூக்கம் தனக்கு மட்டும் ஏன் வராமல் போயிருக்க வேண்டும்? தான் ஏன் அப்பாவின் அந்த டைரியை எடுத்துப் புரட்டியிருக்க வேண்டும்? யாரும் சொல்லியிருக்கவில்லை என்றாலும் டைரியை எடுத்துப் படிப்பது தவறு என்பதான எண்ணம் ஏன் தனக்கு உண்டானது? தவறு என்று தோன்றியதாலேயே திருட்டு ஆர்வத்துடன், மேலும் மேலும் ஏன் பக்கங்களைப் புரட்டியிருக்க வேண்டும்? விளையாட்டாக, ஒரு நோக்கமுமின்றிப் படித்து விட்டுத் தூக்கிப் போட்டிருப்பேன். அப்படியொரு விஷயத்தை அப்பா ஏன் அதில் எழுதியிருக்க வேண்டும்? அதுவும் அத்தனை தெளிவாக? நான் ஏன் அதைப் படித்தேன்? எனக்கு ஏன் அது புரிந்தது?

அவனுக்குத் தலையே வெடித்துவிடும் போலிருந்தது. கூடியவரை கட்டுப்படுத்தியும் அழுகையை அடக்க முடியாது போலிருந்தது. ஆனால் அழுது விடவும் கூடாது. குட்டி இருக்கிறாள்.

"ஏண்டா ஜக்கு பேசாமலேயே வரே?"

இப்போது குட்டி அழுது விடுவாள் போலிருந்தது. அவன் ஒரு கணம் யோசித்தான். இவளிடம் சொல்லலாமா? வேண்டும் அல்லது கூடாது என்கிற முடிவு ஏதும் உடனடியாக உதிக்காது என்பது அவனுக்குத் தெரிந்தே இருந்தது. ஆனால் ஏதாவது ஒரு வடிவில் தன்னை இறக்கி வைப்பதுதான் உடனடியாக முடியக் கூடியது என்று உணர்ந்தான்.

"குட்டி, நான் ஒண்ணு கேக்கறேன். உனக்குத் தெரிஞ்சா பதில் சொல்லறியா?"

"உம்" என்றாள் அவள் சுவாரசியமாக.

"ஆனா ஒண்ணு. இதை நான் கேட்டேன்னு மதர் ப்ராமிஸா, நீ உன் அம்மாகிட்ட சொல்லக் கூடாது."

"மாட்டேன்" என்று உடனே உத்தரவாத மளித்தாள் அவள்.

சில வினாடிகள் தாமதித்தான். பிறகு மெதுவாகக் கேட்டான். "உங்கப்பா யாரை யாச்சும் லவ் பண்ணியிருக்காரா? உனக்கு அது தெரியுமா?"

(தொடரும்)

"உங்க மனைவி அந்தக் காலத்துல இந்த மண்ணுக்காக போராடினாங்கன்னு அவர்கிட்ட சொல்லிக்கிட்டு இருந்தீங்களே பெரியவரே... சுதந்திரப் போராட்டத்துல ஈடுபட்டவங்களா?"

"சேச்சே... 'மசக்கை' காலத்துல தின்னறதுக்கு மண்ணு கேட்டு என்கிட்ட போராடினதைச் சொன்னேன்பா!"

*- கிரிஜா மணாளன்*



நடன ஆசிரியர் பினேஷ் மகாதேவன் அரங்கேற்றிய பதினெட்டாவது மாணவி சந்தியா. இவர் ரொம்ப ஸ்பெஷல் சிஷ்யை.

சந்தியா சாதாரணப் பெண் அல்ல. 'டௌன் சின்ட்ரோம்' எனப்படும் மன இயக்கச் சிக்கல் அவருக்கு உண்டு. பரதநாட்டியம் ஆடுபவருக்கு இயல்பாகவே ஒரு துடிப்பு இருக்க வேண்டும். கவனம் மிக அதிகம் வேண்டும். 'டௌன் சின்ட்ரோம்' பாதிப்புக்குள்ளான சந்தியாவால், கடினமான ஜதிக் கோர்வைகளை நினைவு வைத்துக்கொண்டு, எளிதாக ஆட முடியுமா?

"நீண்ட ஜதிக் கோர்வையைச் சொல்லி சந்தியாவைக் கஷ்டப்படுத்தவே இல்லை. சிறு சிறு ஜதிகள்தாம். முழுதாகச் சரியாகச் செய்தாலும்கூட; அவளே கூடுதலாக இரண்டு - மூன்று தடவை ஒவ்வொன்றையும் பயிற்சி செய்வாள்." என்கிறார் பினேஷ் மகாதேவன்.



• பினேஷ் மகாதேவன்

"அசப்பில் சுதா சந்திரனைப் போல இருக்கிறார் என்பது மட்டுமல்ல, அவருடைய தன்னம்பிக்கையும், துணிச்சலும் கூட இவரிடம் இருக்கிறது. பாவங்களைக் காண்பிப்பதில்கூட சந்தியா கெட்டிக்காரி!"

ஆரம்பத்தில் பத்து வருடங்கள் அம்பிகா காமேசுவரிடம் நடனம் கற்றுக் கொண்டவர் சந்தியா. சந்தியாவைப் போன்ற பலருக்கும் 'மூவ்மெண்ட் தெரபி' போல, சில வகை நடனங்கள் கற்றுக் கொடுத்தாலும், ஆரம்பத்திலிருந்தே சந்தியாவிடம் புரிந்து கொண்டு ரியாக்ட் செய்யும் திறன், சற்றுக் கூடுதலாகவே இருந்ததாம். ஞாபக சக்தியும் அசாதாரணமாக இருந்திருக்கிறது. 'நிருத்தா' எனப்படும் பாத வேலைகளிலும் சந்தியா சிறந்து விளங்கியிருக்கிறார்.

"டௌன் சின்ட்ரோம் பாதிப்புக்கு உள்ளானவர்கள் பலரை ஒப்பு நோக்கும்போது, சந்தியாவின் திறமை தனியாகத் தெரிகிறது!" என்கிறார் பினேஷ்.

'வர்ண'த்தில் சஞ்சாரி பகுதிகளைக் கையாளும்போது, சரியாக அந்தந்த நிகழ்ச்சிகளை நினைவு வைத்திருந்து அழகாகச் செய்துவிடுகிறாராம்.



• சந்தியா

# ஸ்பெஷல் மாணவி!

அரங்கேற்றத்துக்குத் தலைமை வகிக்க, நடன ஆசிரியர், குரு அடையாறு லக்ஷ்மணனைக் கேட்டுக் கொண்டபோது, 'சந்தியா நடனம் ஆடுவதைப் பார்த்த பிறகு சொல்கிறேன்' என்று முதலில் கேட்டுக் கொண்டார். பிறகு சந்தியா அவர் முன் ஆடிக் காட்டியபோது, சபாஷ் சொல்லித் தட்டிக் கொடுத்தாராம்.

டி.வி.யில் எல்லா நடன நிகழ்ச்சிகளையும் பார்த்து விடுகிறார் சந்தியா; குறிப்பாக 'தகதிமிதா'.

"அவர் மாஸ்டர் மட்டுமில்லே... ஃப்ரண்ட்" என்கிறார் தம் குரு பினேஷ் மகாதேவனை!

**- சித்தார்த்**

படங்கள் : **வெங்கடேஷ்**